# சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் வாழ்வியல் பதிவுகள்

பெரியார் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி., - முழுநேரம்)
பட்டத்திற்காக அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
திருமதி ம.ஆனந்தவள்ளி, எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பி.எட்.,
அரசு மகளிர் கலைக்கல்லூரி,
கிருட்டினகிரி.

நெறியாளர்
முனைவர் கா.சிவகாமி, எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,
உதவிப்பேராசிரியர் - தமிழ்த்துறை,
அரசு மகளிர் கலைக்கல்லூரி,
கிருட்டினகிரி - 635002.

தமிழ்த்துறை
அரசு மகளிர் கலைக்கல்லூரி
கிருட்டினகிரி - 635 002

டிசம்பர் - 2018

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் கா.சிவகாமி, எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பிஎச்.டி.,**
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
அரசு மகளிர் கலைக்கல்லூரி,
கிருட்டினகிரி - 635002.

**“சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் வாழ்வியல் பதிவுகள்”** என்னும் தலைப்பில், திருமதி **ம.ஆனந்தவள்ளி** அவர்கள் பெரியார் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக மேற்கொண்ட இவ்வாய்வு, கிருட்டினகிரி அரசு மகளிர் கலைக்கல்லூரித் தமிழ்த்துறையில் முழு நேர ஆய்வாளராக என் மேற்பார்வையில் ஆய்வு மேற்கொண்டபோது தன்னியலாகச் செய்யப்பெற்றது என்றும், இந்த ஆய்விற்காக வேறு எந்தப் பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

| | |
|---|---|
| துறைத்தலைவர் | நெறியாளர் கையொப்பம் |
| (முனைவர் சௌ.கீதா) | (முனைவர் கா.சிவகாமி) |

இடம் : கிருட்டினகிரி

நாள் :

# ஆய்வாளர் உறுதிமொழி

திருமதி ம.ஆனந்தவள்ளி, எம்.ஏ.,எம்.ஃ.பில்.,பி.எட்.,
முனைவர் பட்ட ஆய்வாளர்(முழு நேரம்),
அரசு மகளிர் கலைக்கல்லூரி,
கிருட்டினகிரி - 635002.

"சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் வாழ்வியல் பதிவுகள்" என்னும் தலைப்பில் எழுதப்பெற்ற இவ்வாய்வு, பெரியார் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக கிருட்டினகிரி அரசு மகளிர் கலைக்கல்லூரித் தமிழ்த்துறையில் 14.12.2014 முதல் முழு நேர ஆய்வளாராக ஆய்வு மேற்கொண்ட காலத்தில் என்னுடைய தன் முயற்சியால் உருவாக்கப்பெற்றது என்றும், இந்த ஆய்வேடோ இதன் பகுதிகளோ வேறு எந்தவொரு பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

| | |
|---|---|
| நெறியாளர் கையொப்பம் | ஆய்வாளர் கையொப்பம் |
| (முனைவர் கா.சிவகாமி) | (திருமதி ம.ஆனந்தவள்ளி) |

இடம் : கிருட்டினகிரி

நாள் :

# PERIYAR UNIVERSITY, SALEM – 636 011

Date:

## DECLARATION BY THE CANDIDATE

I hereby declare that the entitled "**SANGA PURA ILAKKIYANGALIL MAGALIR VAZHVIYAL PATHIVUGAL** submitted by me for the award of Ph.D degree in "**TAMIL**" is my original contribution and it is not plagiarized or copied from any other thesis/books/any other copy right materials.

**Signature of the candidate**

## CERTIFICATE BY THE SUPERVISOR

I here declare that the candidate **Mrs. M. ANANDAVALLI** has carried out the Ph.D programme under my supervision during the period **DECEMBER 2014**to **DECEMBER 2018** and the thesis entitled "**SANGA PURA ILAKKIYANGALIL MAGALIR VAZHVIYAL PATHIVUGAL"** submitted by her is verified and it is not plagiarized or copied from any other thesis/books/any other copy right materials.

**Signature of the Supervisor**

## CERTIFICATE BY THE LIBRARIAN

It is certified that the thesis entitled "**SANGA PURA ILAKKIYANGALIL MAGALIR VAZHVIYAL PATHIVUGAL"** submitted by the candidate **Mrs. M. ANANDAVALLI** under the supervision of **DR. K. SIVAKAMI** Asst.Professor, Department of **TAMIL** Government Women's college Krishnagiri-635001 verified for plagiarism through the software and the thesis is the permissible limits rules and the percentage of plagiarism of the thesis is found to be 2% (Two).

**Signature of the Librarian**

PERIYAR UNIVERSITY, SALEM – 636 011

## CERTIFICATION BY THE R & D COORDINATOR

It is certificate that the thesis entitled "**SANGA PURA ILAKKIYANGALIL MAGALIR VAZHVIYAL PATHIVUGAL**" submitted by the candidate **Mrs. M. ANANDAVALLI,** Department of **TAMIL** Under the supervision **Dr. K. SIVAKAMI,** Asst.Professor Department of TAMIL is verified by the anti-plagiarism software and the percentage of plagiarism is wit in the permissible limit.

**Signature of the R & D Coordinator**

URKUND

# Urkund Analysis Result

**Analysed Document:** M_Anandavalli_Tamil.pdf (D46168447)
**Submitted:** 12/21/2018 8:11:00 AM
**Submitted By:** nsmaniyan@rediffmail.com
**Significance:** 2 %

## Sources included in the report:

T_ Karthika_Tamil.pdf (D40342878)
A_Poongodi_Tamil.pdf (D32544856)
http://shodhganga.inflibnet.ac.in/bitstream/10603/60321/9/09_chapter%202.pdf

## Instances where selected sources appear:

62

# நன்றியுரை

**சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் வாழ்வியல் பதிவுகள்** என்னும் தலைப்பில் முனைவர் பட்ட (முழுநேரம்) ஆய்வு செய்ய அனுமதி அளித்த பெரியார் பல்கலைக்கழகத் **துணைவேந்தர், பதிவாளர், தேர்வாணையர்** ஆகியோருக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன். பல்கலைக்கழக **ஆட்சிக்குழு உறுப்பினர்கள்** அனைவருக்கும் என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வினைச் செவ்வனே செய்ய அனுமதியளித்த கிருட்டினகிரி அரசு மகளிர் கலைக்கல்லூரியின் முதல்வர் **முனைவர் ரு.ரா.ஜெயந்தி** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி. பல்வேறு கல்லூரிப் பணிகளுக்கிடையே ஆய்வு நுட்பங்களை அறிவுறுத்திய தமிழ்த்துறைத் தலைவர், இணைப்பேராசிரியர் **முனைவர் சௌ.கீதா** அவர்களுக்கு எனது நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வியல் நெறிமுறைகளை முறையாகக் கற்றுத்தந்து, ஆய்வு செம்மையாக நடைபெற உறுதுணைபுரிந்து அன்போடும், பரிவோடும் நெறிப்படுத்திய தமிழ்த்துறை உதவிப்பேராசிரியரும் ஆய்வு நெறியாளருமான **முனைவர் கா.சிவகாமி** அவர்களுக்கு என்றும் நன்றிக்கடப்பாடுடையேன்.

ஆய்வறிஞர் குழு உறுப்பினராக இருந்து ஆய்வைச் சரியான திசையில் செலுத்திய கிருட்டினகிரி, அரசு ஆடவர் கலைக் கல்லரித் தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர் நா.பழனிவேலு** அவர்களுக்கு என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

இவ்வாய்வைச் சிறப்பான முறையில் மேற்கொள்ள, இரண்டு ஆண்டு காலம் உதவித்தொகை வழங்கிய **செம்மொழித் தமிழாய்வு நிறுவனத்திற்கு** எனது மனம் கனிந்த நன்றி.

கல்லூரியின் **தமிழ்த்துறை** மற்றும் **பிறதுறைப் பேராசிரியர்கள், அலுவலர்கள்** அனைவருக்கும் நன்றி.

ஆய்விற்குத் துணையாகப் பல்வேறு துணை நூல்களைத் தந்துதவிய எமது கல்லூரி நூலகர், பெரியார் பல்கலைக்கழக நூலகர், சென்னைப் பல்கலைக்கழக தமிழ்த்துறை நூலகர், செம்மொழி தமிழாய்வு நிறுவன நூலகர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகர், ரோஜா முத்தையா நூலகர், திருப்பத்தூர் தூய நெஞ்சக் கல்லூரி நூலகர், கிருட்டினகிரி மாவட்ட மைய நூலகர், காவேரிப்பட்டினம் கிளை நூலகர் ஆகியோருக்கு என் நன்றி.

என் பெற்றோர் **திரு.கி.மணிவண்ணன்-விமலா இணையர், திரு.சு.இராமமூர்த்தி-விஜியா** இணையர் ஆகியோருக்கும் ஊக்கமளித்த கணவர் **திரு.இரா.குமரன்** அவர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்விற்குப் பல்வேறு வகையில் உதவிய என் நண்பர்கள், மற்றும் உறவினர்கள் அனைவருக்கும் எனது நன்றிகள்.

இவ்வாய்வேட்டைச் சிறப்பான முறையில் கணினி தட்டச்சு செய்ய உறுதுணையாக இருந்த சகோதரர் **திரு.ம.கார்த்திகேயன்** அவர்களுக்கும், ஆய்வேட்டைச் சிறந்த முறையில் கட்டமைப்புச் செய்து தந்த வி.பி.புக் பைண்டிங் திருப்பத்தூர் அவர்களுக்கும் நன்றி.

(ம.ஆனந்தவள்ளி)

# பொருளடக்கம்

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத். | - | அகத்திணையியல் |
| அகம். | - | அகநானூறு |
| அடி.நல். | - | அடியார்க்கு நல்லார் |
| இளம். | - | இளம்பூரணர் |
| இ.நா. | - | இன்னா நாற்பது |
| உரி. | - | உரியியல் |
| உரை. | - | உரையாசிரியர் |
| எழுத்து. | - | எழுத்ததிகாரம் |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலித். | - | கலித்தொகை |
| களவு. | - | களவியல் |
| கற்பு. | - | கற்பியல் |
| குறள் | - | திருக்குறள் |
| கு.வி. | - | குடும்ப விளக்கு |
| குறி. | - | குறிஞ்சிப்பாட்டு |
| குறு. | - | குறுந்தொகை |
| சிலம்பு. | - | சிலப்பதிகாரம் |
| சிறு. | - | சிறுபாணாற்றுப்படை |
| செ.ப. | - | சென்னைப்பல்கலைக்கழகம் |
| செய். | - | செய்யுளியல் |
| திரு. | - | திருமுருகாற்றுப்படை |
| திரு.இ.ம. | - | திரு இரட்டை மணிமாலை |
| தொல். | - | தொல்காப்பியம் |
| ந.அ. | - | நம்பியகப்பொருள் |
| நற். | - | நற்றிணை |
| நன். | - | நன்னூல் |
| நால. | - | நாலடியார் |
| நா.தி.பி. | - | நாலாயிர திவ்விய பிரபந்தம் |
| நா.வியல் | - | நாட்டுப்புறவியல் |
| நா.இ. | - | நாட்டுப்புற இலக்கியம் |
| நான். | - | நான்மணிக்கடிகை |
| நூ. | - | நூற்பா |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப.நா. | - | பழமொழி நானூறு |
| ப.பா. | - | பட்டினப்பாலை |
| பதிற்று. | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| பதி. | - | பதிகம் |
| பு.வெ. | - | புறப்பொருள் வெண்பாமாலை |
| புற. | - | புறத்திணையியல் |
| புறம். | - | புறநானூறு |
| பெரு. | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொது. | - | பொதுவியல் |

| | | |
|---|---|---|
| பொரு. | - | பொருநராற்றுப்படை |
| பொருள். | - | பொருளதிகாரம் |
| மணி. | - | மணிமேகலை |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| மாணி. | - | மாணிக்கவாசகர் |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| மூ.உ. | - | மூலமும் உரையும் |
| மெய். | - | மெய்ப்பாட்டியல் |
| p. | - | Page |
| PP. | - | Pages |

## முன்னுரை

சங்க இலக்கியங்கள் சங்க கால மக்களின் அகம், புறம் சார்ந்த வாழ்வியலை உள்ளது உள்ளபடியே எடுத்தியம்புகின்றன. அக இலக்கியங்களில் மக்களின் புற வாழ்வியல் குறித்த பதிவுகள், உவமைகள், வருணனைகள் மூலமாகவும்; புற இலக்கியங்களில் அவை வெளிப்படையாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளன.

சங்க இலக்கியப் புறப்பாடல்களில் அரசர்கள், புலவர்கள், புரவலர்கள் பற்றிய செய்திகள் மிகுதியாகவும், மகளிர் குறித்த வாழ்வியல் செய்திகள் பல்வேறு கூறுகளாக இடம் பெற்றுள்ளன. அவற்றில் இல்லறம், பழக்க வழக்கங்கள், சடங்குகள், நம்பிக்கைகள், கல்வி, கலைகள் ஆகியவற்றில் மகளிரின் பங்கு அதிகம் காணப்படுகிறது. இதன் மூலம் பண்டைக் காலச் சமூகத்தைப் பதிவு செய்யும் நோக்கிலும், புறப்பாடல்களில் மகளிர் குறித்த வாழ்வியல் பதிவுகளை வெளிப்படுத்தும் வகையிலும் இவ்வாய்வு அமைகின்றது.

### 1. ஆய்வுத்தலைப்பு

**“சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் வாழ்வியல் பதிவுகள்”**

என்பது இவ்வாய்வுத் தலைப்பாகும்.

### 2. ஆய்வு நோக்கம்

சங்கப் புற இலக்கியங்களில் அரசியல், போர், வீரம், கொடை போன்ற செய்திகள் இடம் பெற்றுள்ளன. இவற்றில் இல்லறம், பழக்க வழக்கங்கள், சடங்குகள், நம்பிக்கைகள், கல்வி, கலைகள் போன்றவற்றில் மகளிர் பெரும் பங்கு வகித்துள்ளனர். இதன் மூலம் மகளிரின் பண்பாட்டுக் கூறுகளையும், தமிழ்ச் சமூகத் தரத்தையும் ஆய்ந்து வெளிக் கொணரும் நோக்கில் இவ்வாய்வு அமைகிறது.

3. ஆய்வு எல்லை

சங்க இலக்கியப் புற நூல்களான புறநானூறு, பதிற்றுப்பத்து, திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, மலைபடுகடாம், ஆகிய நூல்களும், பரிபாடலில் புறச்செய்திகள் இடம் பெற்ற பாடல்களும் இவ்வாய்வின் எல்லையாக அமைகின்றன.

4. ஆய்வு மூலங்கள்

முதன்மை மூலங்கள், துணைமை மூலங்கள் என்கின்ற முறையில் சான்றாதாரங்கள் அமைகின்றன.

(அ) முதன்மை மூலங்கள்

1. **பதிற்றுப்பத்து** மூலமும் பழைய உரையும்,
   **பத்துப்பாட்டு** மூலமும் நச்சினார்க்கினியர் உரையும்,
   **உ.வெ.சாமிநாதையர், (பதி),**
   தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு,
2. புறநானூறு
   **ஔவை சு.துரைசாமிப்பிள்ளை**
   சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம்,
3. **“சங்க இலக்கியம்”** (மூலமும் தெளிவுரையும்)
   (பதினான்கு தொகுதிகள்)
   முனைவர்அ.மா.பரிமணம், முனைவர் கு.வெ.பாலசுப்பிரமணியன்
   (தலைமை பதிப்பாசிரியர்கள்)
   “நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட், பதிப்பக வெளியீடு”
   - என்ற நூல்கள் ஆய்வுக்கு முதன்மை மூலங்களாகும்.

(ஆ) துணைமை மூலங்கள்

சங்க இலக்கியப் பிற பதிப்பு மூலங்களும் உரைகளும், சங்க இலக்கியங்களில் பெண்கள் குறித்து வெளிவந்துள்ள ஆய்வேடுகள், திறனாய்வு நூல்கள், கட்டுரைகள் ஆகியவையும், மகளிர் குறித்து வெளிவந்துள்ள ஆய்வு நூல்களும் துணைமை மூலங்களாக அமைகின்றன.

5. முன் ஆய்வுகள்

1. திலகவதி,க. "சங்க கால மகளிர் வாழ்வியல்" இறையருள் பதிப்பகம், திருச்சி-620019, அக்டோபர்-2001.
2. அழகம்மை,கே.பி.,முனைவர் "சமூக நோக்கில் சங்க மகளிர்" மணிவாசகர் பதிப்பகம், சென்னை-600108, ஆகஸ்டு-2001.
3. இராசமாணிக்கனார்,மா. "பத்துப்பாட்டு ஆராய்ச்சி" சாகித்திய அகாதமி, புதுடெல்லி-11001, 2012.
4. பழனிச்சாமி,செ.,டாக்டர் "புறநானூற்றில் தமிழர் பண்பாடு" வாணி பதிப்பகம், கோவை-641011, ஏப்ரல்-1989.
5. மாரியப்பன்,சு.சா., "சங்க அக இலக்கியங்களில் புற வாழ்வியல் கூறுகள்" பெரியார் பல்கலைக்கழகம், சேலம், பிப்ரவரி-2011.
6. புனிதபொற்கொடி,நா. "சங்ககால சமுதாயத்தில் நம்பிக்கைகளும் சடங்குகளும்" (எம்.ஃ.பில் ஆய்வேடு), சென்னை பல்கலைக்கழகம்-1987.
7. சுப்புத்தாய்,கு. "சங்க இலக்கியத்தில் பெண் பதிவுகள்" செல்லம்மாள் மகளிர் கல்லூரி, பச்சையப்பன் அறக்கட்டளை நிறுவனம், பிப்ரவரி-2011.

ஆகிய ஆய்வேடுகளும், திறனாய்வு நூல்களும் இவ்வாய்விற்கு முன் ஆய்வுகளாக அமைந்துள்ளன.

6. கருதுகோள்

சங்க கால மகளிர் உயர்ந்த வாழ்வியல் அறத்தைப் பின்பற்றியிருக்கின்றனர். தொல்காப்பியம் மகளிர்க்குரிய பண்புகளாகவும், கடமைகளாகவும் எவ்வெவற்றைக் கூறுகின்றனவோ அவற்றை

பின்பற்றுபவர்களாகவே சங்க கால மகளிர் வாழ்ந்திருக்கின்றனர். அவர்கள் பின்பற்றிய அகம், புறம் சார்ந்த பழக்க வழக்கங்கள் இன்றளவும் மகளிரால் பின்பற்றப்பட்டு வருகின்றன. சங்கப்புற இலக்கியங்கள் அக்கால மக்களின் வாழ்வியலை உள்ளது உள்ளவாரே பிரதிபலிக்கின்றன. சங்கப் புற இலக்கியங்கள் ஆடவர்களைச் சார்ந்தே வாழக்கூடியவர்களாக மகளிரைச் சித்திரிக்கின்றன, என்பது இவ்வாய்வின் கருதுகோள் ஆகும்.

## 7. ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வில், தொகுப்பியல் அணுகுமுறை, பகுப்பாய்வு அணுகுமுறை, விளக்கவியல் அணுகுமுறை, ஒப்பியல் அணுகுமுறை, சமூகவியல் அணுகுமுறை ஆகிய ஆய்வியல் அணுகுமுறைகள் பின்பற்றப்பட்டுள்ளன.

## 8. ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வேடு, முன்னுரை, முடிவுரை நீங்கலாக கீழ்க்குறிப்பிடப்பெறும் ஐந்து இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது.

அவையாவன:

முன்னுரை

இயல் - 1 : சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் இல்லறம்

இயல் - 2 : சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் பழக்க வழக்கங்கள்

இயல் - 3 : சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் சடங்குகளும், நம்பிக்கைகளும்

இயல் - 4 : சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் கல்வி

இயல் - 5 : சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் கலைகள்

முடிவுரை

துணைநூற்பட்டியல்

பின்னிணைப்புகள்

எனும் கட்டமைப்பில் அமைந்துள்ளது.

9. ஆய்வேட்டின் இயல் விளக்கம்

**இயல் - 1 : சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் இல்லறம்**

"சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் இல்லறம்" - எனும் முதல் இயலில் இல்லறத்தின் சிறப்பு, இலக்கியங்களில் விருந்தோம்பல், ஐந்நில மகளிரின் விருந்தோம்பல், மகளிர் கற்பு, தாய்மை, வீரவுணர்வு, ஊடல், பரத்தமை ஆகியவை ஆராயப்படுகின்றன.

**இயல் - 2 : சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் பழக்க வழக்கங்கள்**

"சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் பழக்க வழக்கங்கள்" - எனும் இரண்டாவது இயலில் பழக்கம், வழக்கம், மரபு, புறப்பாடல்களில் மகளிரின் பழக்க வழக்கங்கள், கைம்மை நிலை, கலந்தொடா மகளிர், முதுமக்கள் தாழி, மகளிரின் அன்றாட செயல்பாடுகள் குறித்த செய்திகள் ஆராயப்படுகின்றன.

**இயல் - 3 : சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் சடங்குகளும், நம்பிக்கைகளும்**

"சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் சடங்குகளும், நம்பிக்கைகளும்" - எனும் மூன்றாவது இயலில் பிறப்புச் சடங்கு, வழிபாட்டுச் சடங்கு, பாம்பு வழிபாடு, நடுகல் வழிபாடு, இறப்புச் சடங்கு - இல்லச் சடங்கு, நினைவுச் சடங்கு, ஆகிய சடங்குகளும், விரிச்சிக் கேட்டல், நிமித்தம் பார்த்தல், கனவு, மறுபிறப்பு, பேய்கள் குறித்த நம்பிக்கைகளும் ஆராயப்படுகின்றன.

**இயல் - 4 : சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் கல்வி**

"சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் கல்வி" - எனும் நான்காவது இயலில் கல்வி விளக்கம், சமூகமும் கல்வியும், இலக்கியங்களில் கல்வி, புறம் பாடிய பெண்பாற் புலவர்கள், அவர்களின் புலமைப் பற்றி ஆராயப்படுகின்றன.

**இயல் - 5 : சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் கலைகள்**

“சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் கலைகள் - எனும் ஐந்தாவது இயலில் கலை - விளக்கம், புற இலக்கியங்களில் மகளிர் கலைகள் - விளையாட்டு, கூத்து, நாடகம், இசை, ஆடை அணிகலன்கள், தொழில் ஆகியவைக் குறித்து ஆராயப்படுகின்றன.

10. முடிவுரை

ஒவ்வோர் இயலிலும் ஆய்ந்தறிந்த மெய்ம்மைகள் அந்தந்த இயலின் இறுதியில் அமைந்துள்ள தொகுப்புரைகளில் கூறப்பெறுகின்றன. இவ்வாய்வின், மூலம் கண்டறிந்த மெய்ம்மைகளில் சிறப்பாகச் சுட்டப்பெறும் மெய்ம்மைகள் முடிவுரையில் கூறப்பெறுகின்றன.

11. துணை நூற்பட்டியல்

முடிவுரையை அடுத்துத் துணை நூற்பட்டியல் அமைகிறது. அது முதன்மை ஆதாரங்கள், துணைமை ஆதாரங்கள் என இரண்டு பிரிவுகளைக் கொண்டுள்ளது. இவ்வாய்வேடு எழுதுவதற்குப் பயன்பட்ட நூல்கள் இவ்விரண்டு பிரிவிலும் இடம் பெற்றுள்ளன.

# இயல் - 1

## சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் இல்லறம்

இல்லறம் என்பது திருமணத்திற்குப் பின் கணவன், மனைவி ஆகிய இருவரும் இணைந்து வாழும் அன்பான வாழ்வாகும். இல்+அறம் எனப் பிரித்து இல்லறத்திலிருந்து ஆற்றவேண்டிய கடமைகள், அறம் சார்ந்த செயல்களைக் குறிப்பிடுவதாக இச்சொல் அமைகிறது. சங்ககால மகளிர் திருமணம் முடிந்து இல்லறம் மேற்கொண்டு வாழ்வதைச் சிறந்த அறமாகக் கருதினர். இதுவே ஒரு நல்ல சமுதாயம் உருவாவதற்கு அடிப்படை என்கின்ற உயர்ந்த அறநெறியாகப் போற்றப்பட்டது.

கணவனின் அரவணைப்பும், மனைவியின் மன உறுதியும் இணைந்த இல்லற வாழ்வு, நல்ல மக்கட்பேறுடன் மகிழ்ச்சி நிறைந்ததாகத் திகழ்கிறது. சுற்றம் பேணி, அறச்செயல்களை மேற்கொண்டு ஒழுக்கம் நிறைந்த தலைமுறைகளைச் சமூகத்திற்கு வழங்குவது சிறந்த இல்லறத்தின் கடமையாகும். இக்கடமைகளில் கணவனுக்கு உற்ற துணையாகச் செயல்படுவதில் மகளிரின் பங்கு குறிப்பிடத்தக்கது. இல்லறம் சிறக்க அன்பு, பொறுமை, தாய்மை, தியாகம், தொண்டு, ஒழுக்கம் ஆகிய நற்பண்புகள் கொண்டு இல்லாள் திகழும் பொழுது, இல்லறம் இனிமை நிறைந்ததாகிறது. காதலுடன் ஊடலும், கூடலும் கொண்ட இல்லற வாழ்வு சிறந்திருப்பதை இலக்கியங்களும் குறிப்பிடுகின்றன.

இல்லறத்தின் பெருமையை உணர்ந்த திருவள்ளுவர் ‘இல்லறவியலில்’ இதன் சிறப்பை விளக்கியுள்ளார். அன்பும் அறனும் உடைய இல்வாழ்வு தழைத்தோங்கும் என்பதனை,

> **“அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை**
> **பண்பும் பயனும் அது”** (குறள்-45)

என்று குறிப்பிட்டுள்ளார். கணவன் மனைவி இருவருக்கும் இடையில் ஏற்படும் பேரன்பு இல்லற வாழ்வு சிறப்பாக அமைய வழிவகுக்கும்.

சங்ககாலத்தில் இல்லறப் பெண்கள் தங்கள் கணவனுக்குக் கட்டுப்பட்டவர்களாகவும், கணவன் மீது மாறாத அன்பு கொண்டவர்களாகவும், கணவன் சொல்லும் எந்தவொரு சொல்லுக்கும் மதிப்பு கொடுப்பவர்களாகவும் இருந்திருக்கின்றனர். இதனால் இல்லறத்தில் எந்தவித துன்பமும் ஏற்படவில்லை. மனைவியின்மீது கணவன் மிகுந்த அன்பு கொண்டவனாகத் திகழ்ந்ததால் இல்வாழ்க்கை சிறந்திருந்தது. இதனை,

**"தன் அமர் காதலி புல் மேல் வைத்த"** (புறம்.234;3)

என்ற அடி வெளிப்படுத்துகிறது. இவ்வடியில் வேள் எவ்வி தன் மனைவியின்மீது கொண்டுள்ள அன்பை வெளிப்படுத்தும் பாங்கு சொல்லப்பட்டுள்ளது. ஒரு குடும்பம் சிறப்பாக ஒளிர்வதற்கு மனைவியின் பங்களிப்பு சிறப்பாக அமைய வேண்டும். அகவை முதிர்ந்த பிசிராந்தையாருக்குத் தலைமயிர் நரைக்காமல் இருப்பதைக் கண்டவர்கள் காரணம் கேட்டதற்கு தன் மனைவி, இல்லறம் சிறப்புறுவதற்கேற்ற பண்பு நிறைந்தவள் என்று குறிப்பிட்டுள்ளார். இதனை,

**"மாண்ட என் மனைவியோடு மக்களும் நிரம்பினர்"** (புறம்.191;3)

என்று புறநானூற்று அடி குறிப்பிடுகிறது. கணவன் மனைவி இருவரும் ஒருவருக்கொருவர் அன்பை வெளிப்படுத்தினால் இல்லறம் சிறப்படையும். சங்ககாலப் பெண்கள் இல்லத்தில் இன்பமாக வாழக்கூடியவர்கள், துன்பம் நீக்கி கணவனைக் காத்து, சிறந்த அறத்தைப் போற்றி வாழ்ந்துள்ளார்கள்.

### இல்லறம்-சிறப்பு

அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்று உறுதிப்பொருள்களால் இல்லற வாழ்க்கை சிறப்படையும். இல்லறம் என்ற சொல் சங்க

இலக்கியத்தில் மனை, மனைக்கிழத்தி (அகம்.230;8-9, ஐங்.382;5) என்ற சொற்களால் வழங்கப்பட்டுள்ளன. இல்லத்தில் வாழும் தலைவி மனைவி, மனையோள், இல்லோர் என்று வழங்கப்படுவதைப் புற இலக்கியங்கள் (புறம்.191;3,333;8, மதுரை.662) தெளிவுப்படுத்துகிறன. ‘இல்லறம்’ என்ற சொல் பதினெண் கீழ்கணக்கு நூலான சிறுபஞ்சமூலத்தில்(65;4) இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இல்லறத்திற்குச் சிறப்பு மகளிர்; மகளிருக்குச் சிறப்பு குழந்தை என்பதனை,

**“மனைக்கு விளக்கம் மடவார் மடவார்**
**தமக்கு தகைசால் புதல்வர்”** (நான்-104;1-2)

என்ற நான்மணிக்கடிகைப் பாடல் எடுத்தியம்புகிறது. கணவனுக்காகத் தானே சமைத்து, தனது கணவனை அமுதுண்ண அழைக்கிறாள் மனைவி. அதனை உண்ட அவன் மிக இனிமை, எனப்பாராட்டி மகிழ்கிறான். இனிதாயிருக்கிறது என்ற கணவனின் மொழி கேட்டு மனைவியின் முகத்தில் மகிழ்ச்சி ஏற்படுவதை,

**“முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்**
**…. …. …. ….**
**நுண்ணிதின் மகிழ்ந்தன்னு ஒண்ணுதல் முகனே”** (குறு.167)

என்னும் பாடல் குறிப்பிடுகிறது. இதில் கணவனின் மகிழ்ச்சி கண்ட மகளிர் மகிழ்ந்து, தங்களது இல்லறக் கடமைகளைச் செவ்வனே செய்து வாழ்ந்துள்ளனர், என்பது புலப்படுகிறது.

இல்லறத்தின் சிறப்பான செல்வம் நல்ல மக்கட்பேறாகும். இல்லற வாழ்வு முழுமையடைய வேண்டுமானால் நல்ல குழந்தைச் செல்வங்களைப் பெற வேண்டியது அவசியமாகும். குழந்தைகளைப் பெற்றெடுக்கும்போதுதான், இல்லற வாழ்க்கை இனிமையும், முழுமையும் நிறைந்ததாகிறது. இதனை,

**"புதல்வற் றழீஇயினன் விறலவன்**
**புதல்வன்தாய் அவன் புறம் கவைஇயினளே"**(குறு.359;5-6)

என்ற பாடல் அடிகள் தெரிவிக்கின்றன.

சங்க காலப் பெண்கள் தன் கணவனுக்காகவே தன்னை அழகுபடுத்திக் கொண்டனர். இதற்கு மாறாக போர்க்காலத்தில் தனித்திருக்கும் மனைமகளிர் பூச்சூடி தங்களை அழகுப்படுத்திக் கொள்ளாது இருந்திருக்கின்றனர் என்பதை, **"அளியல் தானே, பூவிலைப் பெண்டே"** (புறம்.293;6) என்ற அடி குறிப்பிடுகிறது.

இல்லறம் நல்லறமாகும் பொருட்டு, வீட்டில் தீராத வறுமை இருக்கும்போது, தலைவி குப்பையிலிருக்கும் கீரையைக் கொண்டு உணவு தயாரித்து குடும்பத்தினருக்குக் கொடுப்பதை,

**"ஒல்குபசி உழந்த ஒடுங்குநுண் மருங்குல்,**
**வளைக்கை, கிணைமகள் வள்உகிர்க் குறைத்த**
**குப்பை வேலை உப்புஇலி வெந்ததை"**(சிறு.135-137)

என்னும் அடிகள் தெரிவிக்கின்றன. இதில் இருப்பதைக் கொண்டு இல்லறம் நடத்தும் தலைவியின் பாங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. சங்க கால மகளிர் விருந்தோம்பல், கற்பு, தாய்மை, ஊடல் போன்ற இல்லறச் செயல்களில் சிறந்திருந்தனர். இல்லற மகளிர் மட்டுமல்லாது, பரத்தை மகளிரும் சங்க காலத்தில் இருந்துள்ளனர்.

### விருந்தோம்பல்

விருந்து என்பதற்கு 'புதிதாய் வந்தோர்க்குணவு கொடுத்தல், புதுமை என்றும், விருந்தினர் என்பதற்கு அதிதியர், புதியோர் என்றும் விருந்தோம்பல் என்பதற்கு வேளாண்மை, மாந்தரியல்பினொன்று' என்றும் தமிழ்மொழி அகராதிகள் விளக்கம் தந்துள்ளன. "விருந்தினர் என்பார் புகழுக்குரியவர்களாகப் போற்றப்பட்டுள்ளனர் என்றும்; அவர்களின் பசியைப்

போக்குவது சிறப்புக்குரியது" என்றும் சு.மா.மாரியப்பன் (சங்க அக இலக்கியங்களில் புற வாழ்வியல் கூறுகள், ப.223) குறிப்பிட்டுள்ளார். இப்பொருள்களின் அடிப்படையில்,

**"விருந்தே தானும் புதுவது புனைந்த யாப்பின் மேற்றே"** (தொல்.செய்.234)

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

தமிழர் பண்பாட்டில் தலைசிறந்த அறமாகவும், பாரம்பரிய பண்புகளுள் ஒன்றாகவும் திகழ்வது விருந்தோம்பல். சங்க காலம் முதல் ஆணும், பெண்ணும் இணைந்தளிக்கும் விருந்தோம்பலில் பெரும் பங்கு மகளிருடையதாக இருந்திருக்கிறது. தொல்காப்பியம், மகளிர் பண்புகளுள் கற்பு, அன்பு, ஒழுக்கம், நிறை, பொறை என்பவற்றோடு விருந்தோம்பலையும் இணைத்து கூறியிருப்பதை,

**"மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்**
**விருந்து புறந்தருதலுஞ் சுற்றம் ஓம்பலும்"** (தொல்.பொருள்.கற்.11;2-3)

என்ற நூற்பா தெளிவுபடுத்துகிறது. இந்நூற்பாவில் உள்ள 'சுற்றம் ஓம்பல்' என்ற சொல்லுக்கு, "கொண்டோன் புரக்கும் நண்புடை மாந்தரும், சுற்றத்தாரும், குஞ்சரம் முதலிய காலேசங்களும் பல படை மாக்களும் உள்ளிட்ட சுற்றங்களைப் பாதுகாத்து அவை உண்டபின் உண்டல்" என்று நச்சினார்க்கினியர்(தொல்.பொருள்.உரை,ப.242) பொருள் கூறுகிறார். இதனால் மகளிர் நண்பர்கள், உறவினர்கள், கால்நடைகள், படைமக்கள் என அனைவருக்கும் உணவளித்தபின் இறுதியாக உண்ணும் பண்பு பற்றி தெரிந்து கொள்ள முடிகின்றது.

விருந்தோம்பல் பண்பு தொல்காப்பியர் காலம் முதற்கொண்டு இருந்துள்ளது. அப்பண்பு தலைவன் தலைவியரின் ஊடல் தீர்க்கும் வாயில்களாக இருந்திருப்பதனை,

**"அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும்**
**சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே"**(தொல்.பொருள்.கற்.52)

என்ற நூற்பா சுட்டிக்காட்டியுள்ளது. இக்கருத்தை வலியுறுத்தும் வகையில்,

**"எமக்கே வருகதில் விருந்தே! சிவப்பு ஆன்று,**
**சிறு முள் எயிறு தோன்ற**
**முறுவல் கொண்ட முகம் காண்கம்மே"**(நற்.120;10-12)

என்ற நற்றிணைப் பாடல் அமைந்துள்ளது.

**இலக்கியங்களில் விருந்தோம்பல்**

விருந்தோம்பலின் சிறப்புக் கருதிய திருவள்ளுவர் ஒரு அதிகாரம் முழுதும் சிறப்பித்துள்ளார். தன்பால் வந்த விருந்தினரை நாள்தோறும் போற்றி வருபவனது இல்வாழ்க்கை வறுமைத் துன்பத்தால் வருந்திக் கெடுவதில்லை என்பதை திருவள்ளுவர்(குறள்.83) குறிப்பிட்டுள்ளார். மேலும், விருந்தினர்களின் மனம் புண்படாமல் அவர்களை இன்சொல்லோடு அகமும், முகமும் மலரும்படி வரவேற்று உபசரிக்க வேண்டும். இல்லையென்றால் முகர்ந்து பார்த்தால் வாடிவிடும் அனிச்சப்பூப்போல, விருந்தளிப்பவரின் முகம் திரியும்போது, விருந்தினர்களின் முகமும் குழையுமென்பதை,

**"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து**
**நோக்கக் குழையும் விருந்து"**(குறள்-90)

என்ற குறள் வழி வள்ளுவர் சுட்டிக்காட்டியுள்ளார். இக்கருத்தைத் தொல்காப்பியமும்(தொல்.கற்.11) குறிப்பிட்டுள்ளது. விருந்தோம்பல் என்பது தலைவியும், தலைவனும் இணைந்து நடத்தும் இல்லற வாழ்க்கையில் ஆற்ற வேண்டிய கடமைகளில் ஒன்றாகும். சிலப்பதிகாரத்தில் கோவலன் கண்ணகி திருமணம் செய்துக்கொண்டு சில ஆண்டுகள் விருந்தளித்து(சிலம்பு.2;85-86) வாழ்ந்துள்ளனர். இல்வாழ்க்கையில் கோவலன் கண்ணகியை விட்டுப் பிரிந்து சென்றதால் விருந்து தடைபடுவதை எண்ணி,

**“அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும்,**
**துறவோர்க்கு எதிர்தலும் தொல்லோர் சிறப்பின்,**
**விருந்தெதிர் கோடலும், இழந்த என்னை”** (சிலம்பு.16;71-73)

என்று கண்ணகி வருந்துகிறாள். இதனால் இல்லற வாழ்க்கையில் விருந்தின் இடம் பற்றி இளங்கோவடிகள் குறிப்பிட்டிருப்பது தெரிகிறது.

மணிமேகலைக் காப்பியம் உலகத்து உயிர்களின் பசிப்பிணி போக்கும் கொள்கையை வலியுறுத்தும் நூலாக அமைந்ததை,

**“மண்டிணி ஞாலத்து வாழ்வோர்க் கெல்லாம்**
**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே”** (மணி.11;95-96)

என்ற சீத்தலைச்சாத்தனாரின் அடிகள் புலப்படுத்துகின்றன. இதனால் உலகத்தில் உள்ள உயிர்கள் அனைத்திற்கும் உணவு உயிராக இருப்பதை இக்காப்பியம் சுட்டியுள்ளது தெரிகிறது.

இராமனைப் பிரிந்து அசோகவனத்தில் சிறையிருந்தச் சீதை விருந்தினர் வந்தால் இராமன் விருந்தளிக்க முடியாமல் அடையும் துயரை எண்ணி வருத்தப்படுகிறாள். இதனை,

**“அருந்தும் மெல்அடகு ஆரிட அருந்தும் என்று அழுங்கும்**
**விருந்து கண்டபோது என்னுறுமோ என்று விம்மும்”** (கம்ப.காட்சிப்படலம்-15)

என்னும் கம்பராமாயணப்பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. இதன் வழியாக கணவன், மனைவி ஆகிய இருவரும் சேர்ந்தளிப்பதே விருந்து என்பது அறிய வருகிறது.

விருந்தோம்பல் என்பது பயன் கருதாது செய்யும் அறச்செயல், ஆதலால் நள்ளிரவில் விருந்தினர் வந்தாலும் அவர்களை மகிழ்ச்சியோடு வரவேற்கும் மகளிரின் தன்மையை, **“அல்லில் ஆயினும் விருந்து வரின் உவக்கும்”** என்ற நற்றிணை அடியில்(142;9) புலவர் இடைக்காடனாரும்,

இரவில் கதவை அடைக்கும் முன் விருந்தினர்கள் யாரேனும் வெளியில் உள்ளனரா என்று பார்த்தபின் கதவடைத்தலை,

**"பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்,**
**வருவீர் உளரோ?"** (குறு.118;3-4)

என்ற குறுந்தொகைப் பாடலில் நன்னாகையாரும் குறிப்பிட்டுள்ளார்கள்.

குடும்ப விளக்கில் விருந்தினரைக் கண்டவுடன், தலைவி செந்தாமரையாக முகம் மலர்ந்து அவர்களை வரவேற்றுப் புறந்தூய்மைக்கு நீரும், அமர்வதற்கு இருக்கையும் கொடுத்து அமரச்செய்கிறாள். அதன் பின் பாலும் பழமும் கொடுத்து வெற்றிலைப் பாக்குடன் நல்ல புத்தகமும் படிக்கக் கொடுக்கிறாள். விருந்தினரை வரவேற்கும் பொழுது, எழுந்து வர முடியாத நிலையில் இருக்கும் பெரியோர்கள் விருந்தினர்களிடம் மன்னிப்பும் கேட்டிருக்கின்றனர். இதன் வாயிலாக தமிழர்களின் உயர்ந்த பண்பு, விருந்தோம்பல் என்பது வெளிப்படுகிறது. இதனை,

**"நற்றமிழர் சேர்த்த புகழ் ஞாலத்தில் என்னவெனில்**
**உற்ற விருந்தை உயிரென்று பெற்றுவத்தல்"** (கு.வி.2,விரு.59-60)

என்ற அடிகளிலும், விருந்தினால் விருந்து தருவோருக்கும், பெறுவோருக்கும் ஏற்படும் இன்பத்தை,

**"இட்டுப்பார் உண்டவர்கள் இன்புற்றிருக்கையிலே**
**தொட்டுப்பார் உன்நெஞ்சைத் தோன்றுமின்பம்"** (கு.வி.2,விரு.69-70)

என்னும் அடிகளிலும் விருந்தின் சிறப்பைப் பாரதிதாசன் சுட்டிக்காட்டியுள்ளார். இதனால் இலக்கியங்களில் விருந்தோம்பலைச் சிறப்பித்துக் கூறியுள்ள விதம் குறித்து அறிய முடிகிறது.

### மகளிரின் விருந்தோம்பும் பண்பு

சங்க காலம் முதல் மகளிரிடம் விருந்தோம்பும் பண்பு உயர்ந்து காணப்பட்டுள்ளது. தம் உற்றார் உறவினர்கள் மட்டுமல்லாது புலவர், கூத்தர்,

பாணர், பொருநர், விறலியர் போன்ற கலைவாணர்களையும் வரவேற்று உணவும் உறையுளும் தந்து உபசரிப்பதைச் சங்க கால மக்கள் தங்களுடைய சிறந்த கடமையாகக் கருதியுள்ளனர் என்பதை சங்கப்புற இலக்கிய நூல்கள் மெய்ப்பிக்கின்றன.

புறநானூற்றுப் பாடலில் சோழனின் இயல்பைக் கூறுமிடத்தில், குற்றமற்ற வாழ்க்கையையுடைய குலமகளிர், அமிழ்தத்தைச் சுவையால் வென்று உண்ண அடங்காத, மனம் நிறைந்த தாளிப்பினையுடைய உணவினை வரும் விருந்தினர்க்கு அளவிறந்து அளித்து மகிழ்வதை,

> **"அமிழ்து அட்டு ஆனாக் கமழ் குய் அடிசில்**
> **வருநர்க்கு வரையா வசை இல் வாழ்க்கை"** (புறம்.10;7-8)

என்ற அடிகளிலும், நல்ல மணம் மிக்க நெய்யில், முதிர்ந்த கடலையை வறுத்து அதனோடு சோறும் சமைத்து விருந்தினர்களை உண்பிப்பதற்காகப் பெருந்தோளையுடைய மனையாள் பாத்திரங்களைக் கழுவும் நிலையை,

> **"நறு நெய்க் கடலை விசைப்ப, சோறு அட்டு**
> **பெருந்தோள் தாலம் பூசல் மேவர"** (புறம்.120;14-15)

எனும் அடிகளிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. மேலும், உடும்பின் கொழுப்புடன் தயிர் கூட்டிய கூழினையும், புதிதாகச் சமைத்த பிற நல்ல உணவு வகைகளையும் பாணர்களோடு வந்த விருந்தினர் பலருக்கும் வழங்கும் விருப்பத்தை உடையவள் மனைவி என்பதை,

> **"யாணர் நல்லவை பாணரொடு, ஒராங்கு**
> **வருவிருந்து அயரும் விருப்பினள்"** (புறம்.326;11-12)

எனும் பாடல் குறிப்பிடுகிறது.

இரவலர்களுக்கு உணவுப் பொருள்கள் மிகுதியாக வழங்கப்பட்டுத் தீர்ந்து விட்டமையால், விதைப்பதற்கு எனக் கொண்ட, கதிர்களாகக் காயவைத்திருந்த, தினையை மனையோள் உரலில் இட்டு, சிறிதும் புறத்தில்

சிதறாமல் உணவாக்கி வழங்கும் நற்பண்பு கொண்டவளாக இருந்துள்ளாள் என்பதை,

> **"குரல்உணங்கு விதைத்தினை உரல்வாய்ப் பெய்து,**
> **சிறுது புறப்பட்டன்றோ இலளே"** (புறம்.333;12-13)

எனும் பாடல் உணர்த்துகிறது.

மற்றொருவள் பரிசிலர்க்கும், பாணர்க்கும் உணவு கொடுத்த, பின்னர், மேலும் வருவோரை உண்பிப்பதற்காக ஓயாமல் ஊண் உணவு சமைத்த வண்ணம் இருந்திருக்கிறாள். இதனை,

> **"மனையோள் பாணர் ஆர்த்தவும், பரிசிலர் ஓம்பவும்,**
> **ஊண்ஒலி அரவமொடு கைதூவாளே"** (புறம்.334;5-7)

எனும் பாடல் கூறுகிறது. இவற்றால் மகளிர் அளிக்கும் விருந்தோம்பலின் சிறப்பு வெளிப்படுகிறது.

**ஐந்நில மகளிரும் விருந்தோம்பலும்**

வறுமையின் காரணமாகப் பொருள் தேடிக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என ஐந்நிலங்கள் வழியாகச் செல்பவர்களுக்கும், விருந்தினர்களுக்கும் அந்தந்த நிலங்களில் கிடைக்கும் உணவுப் பொருட்களைக் கொண்டு மகளிர் விருந்தளிக்கும் பாங்கு போற்றுதற்குரியதாக உள்ளது.

**குறிஞ்சி நில மக்களின் உணவு**

'மலையும் மலைச்சார்ந்த பகுதிகளும் குறிஞ்சி நிலமாகும்'. குறிஞ்சி நிலத்தில் இயற்கையாகக் காய், கனி, கிழங்கு, தேன் போன்ற உணவுப் பொருள்கள் கிடைத்தன. குறிஞ்சி நில மக்கள், விருந்தினர்களாக வரும் பொருநர், பாணர், கூத்தர் முதலானவர்களுக்கும், அவர்களின் சுற்றத்தார்க்கும் குறிப்பறிந்து உணவளித்தனர்.

தேன், கிழங்கு வகையான உணவுப் பொருள்களைக் குறிஞ்சி நில மக்கள் உணவாக உண்டுள்ளனர். இவற்றை நெய்தல் நில மக்களிடம் விற்று மாற்றுப் பொருளாக மீன்நெய், நறவு போன்ற பொருள்களைப் பெற்றுச் சென்றுள்ளனர். இதனை,

**“தேன் நெய்யொடு கிழங்கு மாறியோர்**
**மீன் நெய்யொடு நறவு மறுகவும்”**(பொரு.214-215)

என வரும் பொருநராற்றுப்படை அடிகள் குறிப்பிடுகின்றன. விழாக்காலங்களில் நெய் கலந்த உணவு உண்டுள்ளதை, குறிஞ்சிப்பாட்டின் **“பைந்நிணம் ஒழுகிய நெய்ம்மலி அடிசில்”** என்ற அடி(204) தெரிவிக்கிறது.

நன்னனுடைய குறிஞ்சி நிலத்தைச் சார்ந்த மலைநாட்டு மக்கள், பெண் நாய் வாயால் கடித்துக் கொண்டு வந்த இறைச்சி, கடமான் இறைச்சி, முள்ளம் பன்றியின் பசிய நிணம் ஆகியவற்றை உண்டுள்ளனர். நெல் கொண்டு தயாரிக்கபபட்ட கள், தேனை மூங்கிற் குழாய்க்குள் நிரப்பி செய்யப்பட்ட தெளிவைப் பருகி மகிழ்ந்துள்ளனர். இவர்கள் மூங்கில் அரிசியால் ஆக்கிய சோறு, புளிநீர், மோருடன் பலாக்கொட்டை மாவு கொண்டு தயாரித்த குழம்பையும் உண்டனர் என்பதை,

**“வருவிசை தவிர்த்த கடமான் கொழுங்குறை**
**….. …. …. ….**
**குறமகள் ஆக்கிய வால் அவிழ் வல்சி”**(மலை.175-183)

என்ற மலைபடுகடாம் பாடல் அடிகள் தெளிவுபடுத்துகின்றன. மலை நாட்டைக் காவல் புரிந்த வீரர் இறைச்சியையும் கிழங்கையும்(மலை.425-426) உண்டனர். மலைமீது நடந்து சென்ற கூத்தர், தினைப்புனத்துக் காவலனால் கொல்லப்பட்ட காட்டுப் பன்றியின் மயிரைப் போக்கி, மூங்கில் பற்றியெரியும் நெருப்பில் வதக்கி, அப்பன்றியின் இறைச்சியை உண்டனர். எஞ்சிய பகுதியை வழியுணவிற்காக எடுத்துச் சென்றுள்ளனர். இதனை,

**"வரைசேர் வகுந்தின் கானத்துப் படினே,**

**....        ....        ....        ....**

**நளிபுகை கமழாது, இறாயினிர் மிசைந்து"** (மலை.242-249)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. இதனால் கிழங்கு, தேன், இறைச்சி, கள், மூங்கில் அரிசி போன்றவை குறிஞ்சி நில மக்களின் உணவாக இருந்துள்ளமையை அறிய முடிகிறது. இவ்வுணவு வகைகளைக் கொண்டு குறிஞ்சி நில மகளிர் விருந்தளித்திருக்கின்றனர்.

**குற மகளின் விருந்தோம்பல்**

வேடுவர்களின் சிறுகுடிகள் பெரிய மலைப்பக்கத்தில் அமைந்துள்ளன. இவர்கள் யானையின் கொம்புகளைக் காவு மரமாகக் கொண்டு தேன், கிழங்கு, பன்றியின் தசைகள், ஆகிய உணவுப் பொருட்களைத் தொங்கவிட்டுச் சுமந்து வந்து சேகரிப்பர். இவ்வுணவுகளை ஊர்களுக்குள் வரும் விருந்தினர்களுக்கு உண்ணக் கொடுத்து, தங்குவதற்கு இடமும் அளித்தனர். பருத்த தசையை நெய்யில் பொரித்தும், வேகவைத்தும் அழகிய நிறமுடைய தினையரிசிச் சோற்றுடன் வேட்டுவ மகளிர் வழங்கியிருக்கின்றனர். இவற்றை,

**"தேனினர், கிழங்கினர், ஊன்ஆர் வட்டியர்,**

**....        ....        ....        ....**

**இரும்பேர் ஒக்கலொடு பதம்மிகப் பெறுகுவிர்"** (மலை.152-157)

**"பரூஉக்குறை பொழிந்த நெய்க்கண் வேவையொடு**
**குரூஉக்கண் இறடிப் பொம்மல் பெறுகுவிர்"** (மலை.168-169)

என்று மலைபடுகடாமில் பெருங்கௌசிகனார் குறிப்பிட்டுள்ளார்.

நறிய மலர் சூடி மணம் வீசும் கரிய கூந்தலையுடைய குறவர் இன மகள், நெஞ்சு நிறைந்த மகிழ்ச்சியுடன் உள்ளம் உவப்ப தங்கள் பிள்ளைகளை அனுப்பி, அவர்களின் உறவு முறைகளைச் சொல்லி அவ்வழி செல்லும் கூத்தர்களைத் தடுத்து நிறுத்தி உணவு வழங்குவதை,

**“அகம்மலி உவகை ஆர்வமொடு அளைஇ**
**மகமுறை தடுப்ப மனைதொறும் பெறுகுவிர்”**(மலை.184-185)

எனும் அடிகள் சுட்டுகின்றன. இவ்வாறு குறிஞ்சி நில மகளிர் அளிக்கும் விருந்தோம்பலினால் கூத்தர்கள் பரிசில் பெறுவதை மறந்து மலையிலேயே தங்கியிருத்தலை,

**“செருச்செய் முன்பின் குருசில் முன்னிய**
**பரிசில் மறுப்ப, நீடலும் உரியிர்**
**அனையது அன்று, அவன் மலைமிசை நாடே”**(மலை.186-188)

எனும் அடிகள் சுட்டுவதிலிருந்து குறிஞ்சி நில மகளிர் அளித்த நிறைவான விருந்தினை அறிய இயல்கிறது. குறமகளிர், வழிப்போக்கர்களை உரிமையுடன் உறவுகளாக அழைத்து விருந்து பரிமாறிய பண்பு அவர்களின் மேன்மையை வெளிப்படுத்துவதாக உள்ளது.

**முல்லை நில மக்களின் உணவு**

‘காடும் காடு சார்ந்த பகுதியும் முல்லை நிலமாகும்’. முல்லை நில மக்கள் உழைப்பதில் சோம்பல் இல்லாமல் இருந்திருக்கின்றனர். அதிகாலையில் எழுந்து தாங்கள் தயாரித்த மோர், நெய் ஆகியவற்றை வேற்று நிலங்களில் விற்பனைச் செய்து தேவையான மாற்றுப் பொருள்களை வாங்கி வந்துள்ளனர். இச்செய்தியை,

**“குறுநெறிக் கொண்ட கூந்தல், ஆய்மகள்**
**அளைவிலை உணவின் கிளைஉடன் அருத்தி,**
**நெய்விலைக் கட்டிப் பசும்பொன் கொள்ளாள்”**(பெரும்.162-164)

இப்பாடல் அடிகள் புலப்படுத்துகின்றன. முல்லை நிலத்தார் பால் மற்றும் தினையரிசிச் சோறு ஆகியவற்றை உண்டனர். இடையர் மகள் கோவலருடைய குடியிருப்பில் நண்டின் பார்ப்பைப் போன்ற பசிய தினையால் ஆக்கிய சோற்றைப் பால் சேர்த்து உண்டுள்ளனர். இதனை,

**“மடிவாய்க் கோவலா் குடிவயிற் சேப்பின்,**
**இருங்கிளை ஞெண்டின் சிறுபாா்ப்பு அன்ன**
**பசுந்தினை மூரல் பாலொடும் பெறுகுவிா்”**(பெரும்.166-168)

என்ற அடிகளில் காண முடிகின்றது.

கூரை வீடுகளில் வாழ்ந்த மகளிா் காா் காலத்தில் பூளைப் பூ போன்ற சிறிய வரகுடன், அவரைப் பருப்பைப் போட்டு துழாவி, மிகுந்த மணத்துடனும், சுவையுடனும் செய்த பருப்புச் சோற்றை விருந்தினா்களுக்கு வழங்கி இருக்கின்றனா். இதனை,

**“அவரை வான்புழுக்கு அட்டி, பயில்வுற்று,**
**இன்சுவை மூரல் பெறுகுவிா்”**(பெரும் 195-196)

எனும் பெரும்பாணாற்றுப்படை அடிகள் தெரிவிக்கின்றன.

முல்லை நிலத்தாா் சிவந்த அவரை விதை, மூங்கிலிலிருந்து கிடைக்கும் அரிசி, மேட்டு நில நெல்லரிசி ஆகியவற்றைப் புளிக் கரைசலுடன் உலையில் இட்டு, குழைந்த புளியங் கூழாக்கி(மலை.434-436) வழங்கியுள்ளனா். பொன்னை நறுக்கினாற் போன்ற நுண்ணிய ஒரே அளவுடைய அரிசியுடன் இறைச்சித் துண்டுகளையும் நெய்யையும் சோ்த்து ஆக்கிய சோற்றை, வழிச் செல்பவா்களுக்குக் கொடுத்து உண்ணச் செய்துள்ளனா். இதனை,

**“பொன் அறைந்தன்ன நுண் நோ் அரிசி**
**வெண் எறிந்து இயற்றிய மாக் கண் அமலை,**
**தண்ணென் நுண் இழுது உள்ளீடு ஆக**
**அசையினிா் சேப்பின், அல்கலும் பெறுகுவிா்”**(மலை.440-443)

எனும் மலைபடுகடாம் பாடல் அடிகள் விவரிக்கின்றன. இதனால், முல்லை நில மக்களின் உணவு முறைகளும்; மலையில் விளையும் தினையரிசி, தினைமாவு, அவரைப் பருப்பு போன்ற உணவுப்பொருள்களைத் தங்களின் உணவோடு கலந்து உண்டுள்ளமையையும் அறிய முடிகிறது.

**ஆயர்குல மகளிரின் விருந்தோம்பல்**

ஆயர்குல மகளிர் பால் பொருள்களைக் கொண்டு விருந்தளிக்கும் திறமுடையவர். ஆடு மாடுகளைக் கொண்டு தொழில் புரிந்து வாழ்ந்து வந்த ஆயர்தம் தூய வாழ்வின் பெருமையைப் புலப்படுத்தும் விதமாகச் சிலப்பதிகாரத்தில்,

**"ஆகாத்து ஓம்பி ஆப்பயன் அளிக்கும்**
**....    ....    ....    ....**
**கோவலர் வாழ்க்கையோர் கொடும்பாடு இல்லை"** (சிலம்பு.அடை.காதை120-127)

என்று இளங்கோவடிகள் கூறியுள்ளார்.

வளையணிந்த மகளிர் மகிழும் வண்ணம் பசுக்களின் பாலைக் கொண்டு வந்து இடையன் தருவான். இத்தகைய ஆயர்குல இல்லங்களுக்கு, இரவுநேரத்தில் செல்லும் கூத்தர்கள் உணவாகப் பாலும், பாற்சோறும் உண்டனர். பின் விலங்குகளின் தோல் படுக்கையில் உறங்கினர்(மலை.417-420). தமிழர் நாகரிகத்தில் பால் கலந்த உணவு மிக உயர்ந்த ஒன்றாக மதிக்கப்பட்டது.

**"ஊனும் ஊணும் முனையின், இனிது என,**
**பாலின் பெய்தவும்"** (புறம்.381;1-2)

இவ்வடிகளில் இறைச்சியையும் சோற்றையும் உண்டு வெறுத்தால், பாலிற் கலந்து செய்த உணவு வகைகளை உண்டு பசியைப் போக்கிக் கொள்வர் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் பாலுணவின் சிறப்பு வெளிப்படுகிறது.

விடியற்காலைப் பொழுதில் பறவைகள் எழும்போதே எழுந்து விடும் ஆயர்மகள், தன் கடமையைச் செய்ய முற்படுகிறாள். தான் தயாரித்த மோரை விற்றதனால் கிடைத்த உணவுப் பொருள்களைக் கொண்டு உறவினர்களுக்கு விருந்தோம்புகிறாள். இதனை, பெரும்பாணாற்றுப்படை அடிகள்(155-165) குறிப்பிடுகின்றது. இதனால் ஆயர்குல மகள் இல்லறம்

நடத்தும் பாங்கும், தன் சுற்றத்தார்க்கு உணவளிக்கும் விதமும் வெளிப்படுகிறது.

**ஆய்மகள் சமைத்த புளிங்கூழ்**

ஆய்மகள் வரகுக்கதிரைக் குற்றிச் சமைத்த சோற்றையும் வேளைப்பூவைத் தயிரிலிட்டு சமைத்த அழகிய புளித்தக் கூழினையும், அவற்றொடு அவரைக் காய்களையும் விருந்தினருக்கு உண்ணக் கொடுப்பர் என்பதை,

> **“வேளை வெண்பூ வெண் தயிர்க் கொளீஇ,**
> **ஆய்மகள் அட்ட அம் புளி மிதவை**
> **அவரை கொய்யுநர் ஆர மாந்தும்”** (புறம்.215;3-5)

என்ற புறநானூற்று அடிகள் குறிப்பிடுகின்றன. முல்லை நில மகளிர் தயாரித்த புளிங்கூழ் சிறந்த உணவாக இருந்திருக்கிறது.

**மருத நிலத்து மக்களின் உணவு**

‘வயலும் வயல் சார்ந்த பகுதிகளும் மருத நிலமாகும்’. மருத நிலமானது மற்ற நிலப்பகுதிகளைவிட வளம் நிறைந்த பகுதியாகும். ஆதலால் இங்கு வாழும் மக்கள் வேற்று நில மக்களைக் காட்டிலும் செல்வச் சிறப்புடையவர்களாக விளங்கினர். இம்மருத நிலத்தில் பல வகையான நெல்லரிசிகள், பழங்கள், காய்கள், கீரை வகைகள் போன்ற உணவுப் பொருள்கள் மிகுந்திருந்தன.

மருத நிலத்திலுள்ள உழவர்களின் பிள்ளைகள் பழஞ்சோறு உண்டு வெறுத்ததினால், வீட்டின் முற்றத்தில் கிடக்கும் உரலில் உண்பதற்காக அவல் இடித்த காட்சியை,

> **“பழஞ்சோற்று அமலை முனைஇ, வரம்பில்**
> **புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில்**
> **அவல்எறி உலக்கைப் பாடுவிறந்து”** (பெரும்.224-226)

இப்பெரும்பாணாற்றுப்படை அடிகளால் அறிய முடிகின்றது. மருத நிலத்தின் மக்கள் அந்நிலத்தின் கருப்பொருளாக இருக்கும் கரும்பு, அவல் ஆகியவற்றை விற்று, முல்லை நிலத்து உணவான மான் தசையையும் மதுவையும் பண்டமாற்றாகப் பெற்று வருவதை,

**"தீங்கரும்போடு அவல் வகுத்தோர்**
**மான்குறையொடு மது மறுகவும்"**(பொரு.216-217)

என்ற பாடல் அடிகள் தெரிவிக்கின்றன. மேலும், மருத நிலத்து மக்கள் நெல்லரிசி உணவை பெடைக்கோழி இறைச்சியோடு சேர்த்து அளிப்பதை, **"மனைவாழ் அளகின் வாட்டொடும் பெறுகுவிர்"** என்ற அடியும்(பெரும்.255-256), கரும்பின் தீஞ்சாற்றை விரும்புபவர்களுக்கு அளிப்பதை, **"கரும்பின் தீம்சாறு விரும்பினிர் மிசைமின்"** என்ற அடியும்(பெரும்.262) குறிப்பிடுகின்றன.

மருத நாட்டு குடிகளில் பலாப்பழம், வழைப்பழம், இளநீர், நுங்கு, வள்ளிக் கிழங்கு, சோறு முதலியவை கிடைப்பதை,

**"தண்டலை உழவர், தனிமனைச் சேப்பின்**
**.... .... .... ....**
**முளைப்புற முதிர்கிழங்கு ஆர்குவிர்"**(பெரும்.355-362)

இப்பெரும்பாணாற்றுப்படை அடிகள் தெரிவிக்கின்றன. இதனால் மருத நிலத்து உணவு முறைகள் பற்றி அறியப்படுகின்றன.

**உழத்தியர்களின் விருந்தோம்பல்**

யாழை மீட்டும் பொழுது அவற்றிலிருந்து வெளிப்படும் பண்ணிசை, பல மாற்றங்கள் பெற்று இனிமை தருவது போல, சுவை நிறைந்த உணவு வகைகளை மருத நில ஊர்களில் தங்கியிருந்து வகையாக உண்ண முடியும். கொழுப்பு நிறைந்த தசையுடன் வெண்சோற்றைக் கூத்தர்கள் சுற்றத்தோடு பெறுவது, "**முள் அரித்து இயற்றிய வெள் அரி வெண் சோறு"** என்ற மலைபடுகடாம் அடியால்(465) தெரிகிறது. உழவரின் தங்கை தன்

பிள்ளைகளால் முறையாகத் தடுத்து, வரவழைக்கப்பட்ட பாணர்களுக்கு அதிகமான வெண்சோற்றினை நண்டினது கலவையோடு உண்ணத் தருகிறாள் என்பதை,

> **"அவைப்பு மாண்அரிசி அமலை வெண்சோறு,**
> **கவைத்தாள் அலவன் கலவையொடு பெறுவிர்"** (சிறு.194-195)

என்னும் சிறுபாணாற்றுப்படை அடிகள் விளக்கிக் கூறுகின்றன. இதனால் மருத நிலத்து மகளிர் அளிக்கும் உணவுகளில் கலவைச் சோறு சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது.

**நெய்தல் நில மக்களின் உணவு**

கடலும் கடல் சார்ந்த பகுதிகளும் நெய்தல் நிலமாக அமைந்துள்ளது. இந்நிலம் கடல் வளத்தினால் செழிப்பானதாகக் காட்சியளிக்கும். இங்கு வாழும் மக்கள் கள், குழல் மீன், இறைச்சி, போன்றவற்றை உணவாகக் கொண்டுள்ளனர். பரதவ மக்களின் சிறுவர்கள் கடலில் கிடைக்கும் இறால் மீன்களையும், வயலில் உள்ள ஆமைகளையும், பக்குவம் செய்து உணவாகக் கொண்டுள்ளனர். பனங்கள்ளையும், நெல்லரிசிக் கள்ளையும் பருகியுள்ளனர். கள்ளுடன் மீன், இறைச்சி, விலங்கு ஆகியவற்றின் இறைச்சிகளைச் சமைத்து விற்றுள்ளனர். இச்செய்திகள்,

> **"கடல் இறவின் சூடு தின்றும்,**
> **வயல் ஆமைப் புழுக்கு உண்டும்"** (ப.பாலை-63-64)
> **"உவவு மடிந்து உண்டு ஆடியும்"** (ப.பாலை-93)
> **"மீன் தடித்து, விடக்கு அறுத்து,**
> **ஊன் பொரிக்கும் ஒலி முன்றில்"** (ப.பாலை-176-177)

என வரும் பட்டினப்பாலைப் பாடல் அடிகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. மீன், ஆமை, பனங்கள், நெல்லரிசிக் கள், இறைச்சி ஆகியவற்றை நெய்தல் நில மக்கள் உணவாக உண்டுள்ளனர் என்பது தெரிகிறது.

### நுளைச்சியரின் விருந்தோம்பல்

நெய்தல் நிலத்தில் நுளைச்சி அரித்த கள்ளையும், உலர்ந்த குழல் மீனையும் சமைத்து சூடாக பரதவருக்கு உண்ணக் கொடுப்பர் என்பதை,

> **"நுதிவேல் நோக்கின், நுளைமகள் அரித்த**
> **பழம்படு தேறல் பரதவர் மடுப்ப"** (சிறு.158-159)
> **"வறற்குழற் சூட்டின், வயின்வயின் பெறுகுவிர்"** (சிறு.163)

எனும் சிறுபாணாற்றுப்படை அடிகள் குறிப்பிடுகின்றன. பட்டினத்தில் நெல்லையிடித்து மாவாக்கிய உணவை ஆண் பன்றிக்கு இட்டுக் கொழுக்க வைத்து, பின் கொழுத்த ஆண் பன்றியைக் கொன்று அதனுடைய இறைச்சியைச் சமைத்து உண்டனர். மகிழ்ச்சி மிகுந்த கள்ளைப் பருகினர். இச்செயல்களை,

> **"நெல்மா வல்சி தீற்றி, பல்நாள்**
> **குழிநிறுத்து, ஓம்பிய குறுந்தாள் ஏற்றைக்**
> **கொழுநிணத் தடியொடு கூர்நறாப் பெறுகுவீர்"** (பெரும்.343-345)

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகளில் காண முடிகிறது. மேலும், கடலில் வலை வீசிக் கொண்டு வந்த வாளைமீன் தசையை, தூண்டிலில் சிக்கிய வரால் மீனின் துடியின் கண் போன்ற தசைத் துண்டுகளுடன் கலந்து, பகன்றைப் பூவால் செய்த கண்ணியை அணிந்த, கள்விற்கும் வலைஞருடைய மகளிர் கூத்தருக்குக் கொடுத்ததை,

> **"வலையோர் தந்த இருஞ்சுவல் வாளை,**
> **.... .... .... ....**
> **பகன்றைக் கண்ணிப் பழையர் மகளிர்"** (மலை.455-459)

எனும் மலைபடுகடாம் அடிகள் வெளிப்படுத்துகின்றன. இதன் மூலமாக மீன் பிடிக்கும் தொழிலைப் பெரும்பான்மையாகக் கொண்டு வாழும் நெய்தல் நில மக்களின் உணவுகளான மீன் வகைகள் விருந்தினருக்கு வழங்கி உபசரிக்கப்பட்டுள்ளமை தெளிவாகிறது.

**பாலை நில மக்களின் உணவு**

மணலும் மணல் சார்ந்த பகுதியும் பாலை நிலமாகும். இந்நிலம் வெயிலின் வெப்பம் நிறைந்திருப்பதும், கள்வர்கள் மிகுந்து காணப்படுவதுமாக காட்சியளிக்கக் கூடியது. பாலை நில மக்கள் புல்லரிசியைச் சேர்த்து நிலத்தில் புதைக்கப்பட்ட உரலில் இட்டு குற்றிச் சமைத்த உணவை உப்புக்கண்டத்தோடு உண்டும், விருந்தினர்களுக்குத் தேக்கிலையில் உணவு படைத்தும் உள்ளனர். இதனை,

> **"நீழல் முன்றில், நிலஉரல் பெய்து,**
> **.... .... .... ....**
> **முரவுவாய்க் குழிசி முரிஅடுப்பு ஏற்றி"** (பெரும்.96-99)
> **"தெய்வ மடையின் தேக்கிலைக் குவைஇ, நும்**
> **பைதீர் கடும்பொடு பதம்மிகப் பெறுகுவிர்"** (பெரும்.104-105)

என்னும் அடிகளினாலும்; மேட்டு நிலப்பகுதிகளில் விளைந்த பெரிய அளவிலான சிவந்த நிறம் கொண்ட சோற்றை, உடும்பினால் செய்யப்பட்ட பொரியலோடு இந்நிலத்தின் அனைத்து இல்லங்களிலும் உண்டுள்ளனர் என்பதனை,

> **"களர்வளர் ஈந்தின் காழ்கண் டன்ன,**
> **.... .... .... ....**
> **வறைகால் யாத்தது, வயின்தொறும் பெறுகுவிர்"** (பெரும்.130-133)

என்கின்ற அடிகளினாலும் அறிய வருகின்றன. பாலை நில மக்கள் புல்லரிசி, சிவந்த சோறு, உடும்பு பொரியல் ஆகிய உணவுகளை உண்டிருக்கின்றனர் என்பது தெளிவாகிறது.

**எயிற்றியின் விருந்தோம்பல்**

எயினர் குலத்தில் பிறந்த மகளிரும் விருந்தோம்பலில் சிறந்து விளங்கியுள்ளனர். வெப்பம் மிக்க குடிலில் தங்கியிருக்கும் எயினர் குலப்

பெண் சமைத்த இனிய புளிங்கறி கொண்டு சமைத்த சோற்றினை, ஆமானின் சூடான இறைச்சியுடன் பாணன் பசி தணியுமாறு நிரம்பத் தருவதை,

> **"எயிற்றியர் அட்ட இன்புளி வெஞ்சோறு,**
> **தேமா மேனிச் சில்வளை ஆயமொடு**
> **ஆமான் சூட்டின் அமைவரப் பெறுகுவிர்"** (சிறு.175-177)

இப்பாடல் அடிகள் சுட்டிக்காட்டுகின்றன.

வெப்பம் மிகுந்து வறண்டு காணப்படும் பாலைநிலப் பகுதிகளில் அங்குக் கிடைக்கூடிய புல்லரிசியினைச் சேகரித்து அவற்றைக் கொண்டு விருந்தோம்பும் பண்பு அந்நில எயிற்றியரிடம் சிறப்பாக அமைந்திருந்துள்ளது. ஐந்நிலங்களில் வாழும் மகளிர் விருந்தோம்பும் பண்பில் சிறந்தவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பது பெறப்படுகிறது.

**பார்ப்பனியின் விருந்தோம்பல்**

விருந்து என்றால் நினைவில் நிற்பது பெரும்பாலும் அசைவ உணவேயாகும். ஆனால், சைவ உணவைக் கொண்டும் சிறப்பாக விருந்தளிக்க முடியும் என்பதைப் பார்ப்பனி மகள் அளிக்கும் விருந்தின் மூலம் தெரிகிறது. அருந்ததியை ஒக்கும் கற்பினையும், நறிய நெற்றியினையும், வளையல் அணிந்த கையினையும் உடைய பார்ப்பனிப் பெண் பதமறிந்து விருந்தளிக்கும் தன்மையுடையவளாக இருந்திருக்கிறாள். இவள் நெற்சோற்றையும், சேதாவின் நறிய மோரில் எடுத்த வெண்ணெயில் வெந்த மிளகுப்பொடியும், கறிவேப்பிலை கலந்து அட்ட மாதுளங்காய்ப் பொரியலையும் பெரிய மாமரத்தினது நறிய வடுவினைப் பல நாளாகப் போட்டு வைத்த ஊறுகாயோடும் வகைப்பட உணவு செய்து பாணருக்கு வழங்குவதை,

> **"சிறுமீன் புரையும் கற்பின், நறுநுதல்**
> **.... .... .... ....**
> **தகைமாண் காடியின், வகைபடப் பெறுகுவிர்"** (பெரும்.303-310)

என்ற அடிகள் வெளிப்படுத்துகின்றன. இதனால் பார்ப்பனி அளிக்கும் சைவ விருந்து பற்றி அறிய முடிகின்றது.

சங்கப் புற இலக்கியங்களில் விருந்தோம்பல் சிறந்த அறமாகக் கருதப்பட்டுள்ளது. 'விருந்து' எனும் சொல் புதுமை, புதியோர் என்ற பொருள்களை உணர்த்துகிறது. இலக்கியங்களில் விருந்தோம்பல் பண்பு குறிப்பிடப்பட்டுள்ளது. ஐந்நில மகளிருள் குறிஞ்சி நில மகளிர் மனம் நிறைந்த மகிழச்சியுடன் தம் பிள்ளைகளை அனுப்பி விருந்தினரை அழைத்து வந்து உணவு அளித்துள்ளனர். முல்லை நில மகளிர் பால் கலந்த உணவுகளுடன், மாற்றாகப் பெற்ற உணவுப்பொருட்களைக் கொண்டு விருந்தினர் மற்றும் சுற்றத்தாரை உபசரித்துள்ளனர். மருத நில மகளிர் கலவைச் சோறு கொண்டு விருந்து செய்துள்ளனர். நெய்தல் நில மகளிர் மீனின் வகைகளைக் கொண்டளித்த விருந்தையும், பாலை நில மகளிர் சமைத்த இனிய புல்லரிசி உணவுகளையும் விருந்தினருக்குப் படைத்துள்ளனர்.

பார்ப்பன மகளிர் விருந்தில் நெல்சோறு, வெண்ணெயில் வெந்த மிளகுப் பொடி, கறிவேப்பிலை கலந்த மாதுளங்காய்ப் பொரியல், மாமரத்தினது நறிய வடு போன்ற சைவ உணவுகளைக் கொண்டு விருந்தோம்பியுள்ளனர். மனிதனின் அடிப்படைத் தேவைகளுள் ஒன்றான உணவைச் சுவைப்படச் சமைத்துத் தருவதில் மகளிர் வல்லவர்களாகத் திகழ்ந்துள்ளனர்.

சங்க காலத்தில் சைவ, அசைவ உணவுகளால் விருந்தோம்பியிருந்தாலும், அதிகமாக அசைவ உணவுகள் கொண்டு விருந்தோம்பியுள்ளனர். இதனால் சங்கப் புறப்பாடல்களில் மகளிரின்

விருந்தோம்பும் பண்பு அவர்கள் வாழ்ந்த சூழலுக்கேற்ற வகையில் அமைந்து சிறந்துள்ளது.

**கற்பு**

கற்பு என்பதற்கு ‘மகளிர் கற்பு, கல்வி, தியானம், ஆணை, கதி, உறுதி, புரிசை, வேலைப்பாடு, நீதிநெறி, கற்பனை, தலைவனும் தலைவியும் முறைப்படி மணந்து இல்லறம் மேற்கொள்ளும் ஒழுக்கம்’ என்று அகராதிகள் பொருள் தந்துள்ளன.

கற்பு, மகளிரின் சிறந்த இல்லறப் பண்புகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. கற்பொழுக்கம் கொண்ட ஒரு பெண்ணை, இவ்வுலகம் போற்றும் என்பது தமிழர்களின் ஒழுக்கப் பண்பாட்டில் ஒன்றாகும். மகளிரின் கற்பு மேன்மையைச் சிலப்பதிகாரக் காப்பியத்தில் ‘உரைசால் பத்தினியை உயர்ந்தோர் ஏத்துவர்’ என்பதின் மூலம் இளங்கோவடிகள் சுட்டிக்காட்டுகிறார். “நல்லோர் அடக்கம் போல் நாணத்தையும், முல்லை மலர் போன்ற கற்பினையும் கொண்டவள் பெண்” என்று சு.மா.மாரியப்பன் (சங்க அக இலக்கியங்களில் புற வாழ்வியல் கூறுகள்,ப.211) குறிப்பிட்டுள்ளார். ‘கற்பு இல்லாத அழகு வாசனையில்லாத பூ’, ‘கற்பு எனப்படுவது சொல் தவறாமை’ என்பன கற்பு குறித்தப் பழமொழிகளாக கூறப்பட்டுள்ளன. கற்பின் திறம் குறித்து,

> **“உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்**
> **செயிர்தீர் காட்சிக் கற்பு சிறந்தன்று எனத்**
> **தொல்லோர் கிளவி”** (தொல்.பொருள்.கள.23)

என்னும் நூற்பாவில் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். இதில் ஒரு பெண் தன் உயிரைவிட நாணத்தைப் போற்ற வேண்டும், அந்நாணத்தை விட கற்பு

சிறந்தது எனப் போற்ற வேண்டும் என்று குறிப்பிட்டு, கற்பை உயிர், நாணம் இவற்றை விட மேலானதாகக் காக்கவேண்டும் என்று எடுத்துரைத்துள்ளார்.

**இலக்கியங்களில் கற்பு**

கற்புடைய மகளிரின் மன ஒருமைப்பாட்டால் மழையையும் வரவழைக்க முடியும் என்ற நம்பிக்கையைச் சங்க கால மக்கள் கொண்டிருந்தனர். குறிஞ்சிக் கலியில் தலைவியின் பெருமையைக் குறிக்கும் இடத்தில் உலகம் செழிக்க மழை வேண்டுமெனில் அதனை வருவித்துத் தருகின்ற பெருமையை உடையவள் பெண், என்ற பெண்மையின் பண்புநலன் சிறப்பிக்கப்பட்டுள்ளது. இதனை மணிமேகலையில்,

**"வான் தரும் கற்பின் மனையுறை மகளிர்"** (மணி.15;77)

என்று மகளிரின் கற்பு நெறிப் பண்பைச் சீத்தலைச் சாத்தனார் குறிப்பிட்டுள்ளார். மேலும், கற்புடைய மகளிர் வாழும் நாட்டில் வானம் தவறாமல் மழை பொழியும், விளைச்சலும் குறையாது, நாட்டு மன்னனுக்கு வெற்றியும் தவறாது என்கின்ற நம்பிக்கை மக்களிடையே நிலவியதை,

**"வானம் பொய்யாது வளம் பிழைப்பு அறியாது**
**நீள்நில வேந்தர் கொற்றம் சிதையாது"** (சிலம்பு.15;145-146)

எனும் சிலப்பதிகாரக் காப்பியம் வலியுறுத்தியுள்ளது. 'மனத்திண்மை', 'ஒழுக்கத் திண்மை' என்ற பொருளுடன் சிலப்பதிகாரத்தில் 'கற்பு' என்ற சொல் ஆளப்பட்டுள்ளது. இப்பொருள் மட்டுமல்லாது,

**"மங்கைமாதர் பெருங்கற்பு"** (சிலம்பு.7;24)
**"மன்னுமாதர் பெருங்கற்பு"** (சிலம்பு.7;28)
**"புரைதீர் கற்பின் தேவி"** (சிலம்பு.23;216, 22;6)
**"மாசில் கற்பின் மனைவி"** (சிலம்பு.13;102)
**"கற்புக்கடம் பூண்டு காதலன் பின் போந்த"** (சிலம்பு.29;79)

என்ற பல நிலைகளில் மகளிரின் கற்பு மேன்மையை இளங்கோவடிகள் சிறப்பித்து காட்டியுள்ளார்.

'கற்பு என்பது கணவனிலும் தெய்வம் வேறில்லையென எண்ணிக் கலங்காது அவனை வழிபடுவது' என அபிதான சிந்தாமணியில்(ப.383) கூறப்பட்டுள்ளது. "கற்பெனப்படுவது சொற்றிறம்பாமை" என ஔவையார் கொன்றை வேந்தனில் கூறியுள்ளார். இதனால் கணவனின் சொல் தவறாமல் நடப்பதும் கற்பாகக் கருதப்பட்டது.

மனைவியர்க்குக் கற்பு நெறியே சிறந்த காவல் என்றும், அவளுக்கு வீட்டுச்சிறை எப்பயனும் தராது என்பதை,

**"சிறைகாக்குங் காப்பு எவன் செய்யும் மகளிர்**
**நிறைகாக்குங் காப்பே தலை"**(குறள்-57)

எனும் குறளில் திருவள்ளுவர் விளக்கியுள்ளார். இல்லத்தைச் சிறக்கச்செய்தல், விருந்தினரை உபசரித்தல், மக்களைப் பெற்றிருத்தல் ஆகிய மூன்று கடமைகளைச் செய்பவள் கற்புடைய பெண் என்பதை,

**"நல்விருந் தோம்பலின் நட்டாளாம் வைகலும்**
**இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய் - தொல்குடியின்**
**மக்கள் பெறலின் மனைக்கிழத்தி இம்மூன்றும்**
**கற்புடையாள் பூண்ட கடன்"**(திரி.64)

என்ற பாடல் உணர்த்துகிறது. மேலும், பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் சில, ஒரு பெண்ணுக்கு கற்பு எத்தகையப் பெருமையைத் தரவல்லது என்பதை,

**"பெண்ணுக்கு அழகு கற்பு"**(நீதிவெண்பா-66)
**"கற்புடைய பெண் அமிழ்தம்"**(சிறுபஞ்சமூலம்-3)
**"நிறை மாண்பில் பெண்டிரை நீக்கல் இனிது"**(இனி.நாற்பது-10)

எனும் அடிகளில் குறிப்பிட்டிருப்பது சிறப்பிற்குரியதாக அமைந்துள்ளது.

**கற்பின் மேன்மை**

கற்பின் மேன்மையை “முல்லை சான்ற கற்பு”(சிறு.30), “மாசு இல் கற்பு”(நற்.15;7), “கடவுட் கற்பு” “நகர் அடங்கிய கற்பு”(குறு.252;4, 338;7), “திருநகர் அடங்கிய மாசு இல் கற்பு”, “உவர் நீங்கு கற்பு”(அகம்.114;13, 136;19), “நிலைஇய கற்பு”(கலி.2;13), “மறுஇல் கற்பு”(திரு.6), “மறுஅறு கற்பு”(பரி.5;46), “செயிர் தீர் கற்பு”, “பல் மாண் கற்பு”, “நாண் அலது இல்லாக் கற்பு”(புறம்.3;6, 163;2, 196;13) என்று சங்க காலப் பாடல்கள் குறிப்பிட்டுள்ளன.

இதனால் பெண்கள் நாணினும் கற்பினும் சிறந்து மனைக்கு விளக்காகத் திகழ்ந்திருக்கிறார்கள் என்பது தெரிய வருகிறது. எனவே கற்பில் சிறந்தவர்களாகத் திகழும் பெண்கள், தெய்வமாகவும், இயற்கையாகவும் வழிப்படப்பட்டு, பூமியாகவும், நாடாகவும், மொழியாகவும் போற்றப்பட்டு வருகிறார்கள்.

**கற்பின் பெருமை**

சங்கப் புறப் பாடல்களில் யாசித்துப் பொருள் கேட்கும் இரவலர்கள், புலவர்கள் தங்களுடைய மனைவியை அறிமுகப்படுத்தும்போது கற்புடைய பெண்டிர் என்றும், பாடல் தலைவனைக் குறிப்பிட ‘கற்பினையுடையவளின் கணவன்’ என்றும் சில இடங்களில் அறிமுகப்படுத்தி உள்ளனர். இவ்விதமாக பாண்டிய மன்னன் கருங்கை ஒள்வாட்பெரும் பெயர் வழுதியை வாழ்த்தும்போது, குற்றமில்லாத் தலைக் கற்பின் மாண்புடைய மங்கையின் கணவன் என்பதனை,

**“செயிர் தீர் கற்பின் சேயிழை கணவ!”** (புறம்.3;6)

என்று இரும்பிடர்த் தலையார் குறிப்பிட்டுள்ளார்.

பெருங்குன்றூர் கிழார் இளஞ்சேரல் இரும்பொறையை வாழ்த்தும்போது, அரசியின் கற்பு நெறிச் சிறப்பால் அவர்களுடன் அரசனைச் சேர்த்துச் சொல்லி வாழ்த்தியுள்ளார். இதனை,

**"சேண் நாறு நல் இசைச் சேயிழை கணவ!"** (பதிற்று.88;36)
**"ஆறிய கற்பின், தேறிய நல் இசை,**
**வண்டு ஆர் கூந்தல், ஒண்தொடி கணவ"** (பதிற்று.90;49-50)

என்ற அடிகளில் காண முடிகின்றது. இதைப்போல் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் மனைவி அறக் கற்பினையும், அடக்கத்தோடு கூடிய மென்மையான சாயலினையும் கொண்டவள் என்பதனை, **"ஆறிய கற்பின் அடங்கிய சாயல்"** என்று பதிற்றுப்பத்து(16;10) சுட்டியுள்ளது.

தெய்வத்தன்மைக் கொண்ட கற்பினையும், செந்நிற அணிகளையும் அணிந்தவள் நன்மாறனின் மனைவி என்பதும், கற்பு என்னும் குணம் நீங்காமல் நிலைபெற்றவள், செல்வக்கடுங்கோ வாழியாதனின் மனைவி என்பதும் முறையே,

**"கடவுள் சான்ற கற்பின், சேயிழை மடவோள்"** (புறம்.198;3)
**"கற்பு இறை கொண்ட கமழும் சுடர் நுதல்"** (பதிற்று.70;15)

எனும் அடிகளில் வடமவண்ணக்கன் பேரிசாத்தனாரும், கபிலரும் பாடியுள்ளது குறிப்பிடத்தக்கது. தமிழ் கடவுள் என்று அழைக்கப்படும் முருகப்பெருமானைத் திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் அறிமுகப்படுத்தப்படும் போது, குற்றமற்ற கற்பினையுடைய தெய்வயானையின் தலைவன் என்பதை,

**"மறுஇல் கற்பின் வாணுதல் கணவன்"** (திரு.6)

என்ற அடியில் குறிப்பிட்டுள்ளதை அறிய முடிகிறது. இதனால் மகளிரின் கற்புப் பெருமையைச் சுட்டிக்காட்டி தலைவன் அறிமுகப்படுத்தப்பட்டமையும், தலைவியை முதன்மையாகக் கொண்டமையும் அறிய இயல்கிறது.

## புலவர்களின் மனைவியர்

சங்க காலத்தில் புலவர்கள், தங்களின் வறுமை நிலையை நீக்க மன்னர்களை நாடியிருந்துள்ளனர். இவர்களின் புலமைச் சிறக்கவும், வறுமை நிலை போக்கி, நல்வாழ்வு பெறவும், அவர்களின் மனைவியர் சிறந்த துணையாக இருந்துள்ளனர். துயருற்ற காலத்தில் அரவணைத்தும், இன்ப காலங்களில் மகிழ்ந்தும், அவர்களுக்கு ஆறுதல் மொழிகள் கூறியும், கற்புத் திறனில் மேம்பட்டவர்களாகவும், புலவர்களைப் பேணிப் பாதுகாக்கக் கூடியவர்களாகவும் இருந்திருக்கிறார்கள்.

ஒரு மனிதனை நல்லவனாக்குவதற்கும், தீயவனாக்குவதற்கும் சூழ்நிலை காரணமாக அமைகிறது. அவ்விதத்தில் ஆவூர் மூலங்கிழார் என்னும் புலவர் பரிசில் நீட்டித்த அரசனிடம்,

> **"வெயில் என முனியேன், பனி என மடியேன்,**
> **கல் குயின்றன்ன என் நல்கூர் வளிமறை,**
> **நாண் அலது இல்லாக் கற்பின் வாள் நுதல்**
> **மெல் இயல் குறு மகள் உள்ளி"** (புறம்.196;11-14)

என்ற அடிகளில் தன் நிலையையும், மனைவியின் நிலையையும் விளக்கிக் காட்டியுள்ளார். இதில் வெயிலையும் வெறுக்காது பனியிலும் தளர்ச்சியுறாது, கரையாத கல் போன்ற வறுமை என்னைத் தொற்றிக் கொண்டிருந்தாலும், பெண்ணின் பண்பான நாணத்தையே துணைக்கோடாகக் கொண்ட நிலை குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், கற்பு நெறி மேவும் சிறப்பினையும் ஒளி மிகுந்த நெற்றியினையும், மெலிந்த உடலையும் உடைய மனைவியை நினைத்துத் திரும்பிச் செல்லும் புலவரின் செயல்பாடு வெளிப்படுகிறது. இதனால் பரிசில் இல்லையானாலும், தன் மனைவியின் கற்பு நெறியையும், உடல் நிலையையும் நினைக்கும்போது எப்படிப்பட்ட வறுமையும் மறந்துவிடும் என்ற புலவரின் மனநிலைப் புலப்படுகிறது.

பெருஞ்சித்திரனார் குமணனைப் பாடிப் பரிசாகப் பெற்று வந்த பொருளைத் தம் மனைவியிடம் தந்து, ‘பல குணங்களும் மாட்சிமைப்பட்டக் கற்பினையுடைய நின் சுற்றத்து மூத்த மகளிர்க்கும் அளிப்பாயாக’ எனக் கூறியுள்ளார். இதை,

**“பல் மாண் கற்பின் நின் கிளை முதலோர்க்கும்,**

**.... .... .... ....**

**எல்லோர்க்கும் கொடுமதி - மனை கிழவோயே!”** (புறம்.163;2-7)

என்ற அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. இதில் மூத்த மகளிரின் கற்புத் தன்மையைப் புலவர் தன் மனைவிக்குச் சொல்லும் விதத்தில் செய்தி அமைந்துள்ளது. இதனால் புலவர்களின் வாழ்விலிருந்த கற்பொழுக்கத்தை அறிய முடிகிறது. இக்கருத்தை வள்ளுவர், ‘கற்புத்திண்மை செறிவாக இருப்பின் ஆணுக்கு மனைவியினும் நற்பேறு வேறு இல்லை’ என்பதை,

**“பெண்ணின் பெருந்தக்க யாவுள கற்பென்னும்**
**திண்மையுண் டாகப் பெறின்”** (குறள்-54)

என்ற குறளில் குறிப்பிடுகிறார். வறுமை, ஏழ்மை ஆகியவை பெண்ணின் மன உறுதியான கற்பு என்னும் ஒழுக்கத்திற்கு இடையூறாக இருக்க முடியாது. கற்பிற்கு ஈடாக எப்பொருளையும் ஒப்பிட்டுப் பார்க்க முடியாத அளவிற்கு பெருமை வாய்ந்தது என்ற சிந்தனை இதனால் வெளிப்படுகிறது.

**கற்பின் தன்மைகள்**

தன்னிடம் நிரம்பிய கற்பினையும், அழகிய நெற்றியையும் உடைய மடந்தையாகிய மனைவி, தன் கணவன் விண்ணுலகு சென்ற பின்னும் அவனுக்கு உணவிட விரும்புவதை,

**“அடங்கிய கற்பின், ஆய் நுதல் மடந்தை,**
**உயர் நிலை உலகம் அவன் புக”** (புறம்.249;10-11)

என்ற புறநானுற்று அடிகளில் தும்பி சேர்கீரனார் என்னும் புலவர் பாடியுள்ளார். சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் கௌணியன் விண்ணந்தாயனின் மனைவி, கொடுமையை நீக்கிய பெறுதற்கரிய கற்பினை உடையவள் என்று ஆவூர் மூலங்கிழார் பாடியுள்ளது,

**“மறம் கடிந்த அருங் கற்பின்”** (புறம்.166;13)

என்ற அடியால் தெரிய வருகிறது. ஆண் மகனின் ஒழுகலாறுகளைப் பற்றிக் கூறும் பாடாண் திணையின் கீழ் அமைந்த பாடலில் மாறோக்கத்து நப்பசலையார் அவியனைப் புகழும்போது, அவனது மனைவி கற்புடைய மடந்தையாகியவள் புறத்திருப்பதை,

**“கற்புடை மடந்தை தன்புறம் புல்ல”** (புறம்.383;13)

எனும் அடியில் சுட்டிக்காட்டியுள்ளார். அழகிய காடுகளில் வளர்ந்திருக்கும் முல்லைப் பூவினுடைய அரும்பு, பல்லின் வெண்மையை ஒத்துக் காணப்படுகிறது. அவ்வாறு உள்ள வெண்மையான முல்லைப் பூவைப் போன்றது விறலியின் கற்பு என்பதனை,

**“குல்லைஅம் புறவில் குவிமுகை அவிழ்ந்த**
**முல்லை சான்ற கற்பின்”** (சிறு.29-30)

இச்சிறுபாணாற்றுப்படை அடிகள் புலப்படுத்துகின்றன. எனவே, கற்பின் சிறப்பை, பெறுதற்கரிய கற்பு, மடந்தையாகியவளின் கற்பு, முல்லை சான்ற கற்பு என்ற முறைகளில் புற இலக்கியங்கள் கூறியிருக்கின்றன.

**அருந்ததியை ஒத்த கற்பு**

தேவர் உலகப் பெண்களுக்குள் சிறந்த அருந்ததியை ஒத்தவர்களாக மலையமான் திருமுடிக்காரியின் மனைவி, களங்காய்க்கண்ணி நார்முடிச்சேரல் மன்னனின் தேவி, இளஞ்சேரல் இரும்பொறையின் தேவி, செல்வக் கடுங்கோ

வாழியாதனின் தேவி, மற்றும் பார்ப்பினி ஆகியவர்களின் திறம் சுட்டப்பட்டுள்ளது. இதனை,

**"வடமீன் புரையும் கற்பின் மடமொழி"** (புறம்.122;8)
**"செம்மீன் அனையள், நின் தொல் நகர்ச் செல்வி"** (பதிற்று.31;28)
**"மீனொடு புரையும் கற்பின்"** (பதிற்று.89;19)
**"சேண் நாறு நறு நுதல், சேயிழை கணவ!"** (பதிற்று.65;10)
**"பெருநல் வானத்து வடவயின் விளங்கும்**
**சிறுமீன் புரையும் கற்பின்"** (பெரும்.302-303)

என்கின்ற அடிகளில் குறிப்பிடப்பட்டுள்ளன. இதனால் கற்பில் சிறந்தவளாகப் போற்றப்படும் அருந்ததி வானத்தில் நட்சத்திரமாக ஒளிவீசுகிறாள், என்ற சங்க கால மக்களின் நம்பிக்கையும் வெளிப்படுகிறது. இக்கற்பு வாழ்க்கையோடு வாழ்ந்த அரசியர்களின் தோற்றம், குணம் பற்றிய செய்திகள் புறநானூற்றிலும், பதிற்றுப்பத்திலும் இடம் பெற்றுள்ளன.

**அரசியரின் தோற்றம், குணம்**

எட்டுத்தொகைப் புற நூல்களான புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய இரு நூல்களிலும் அரசியரின் தோற்றம், குணநலன் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. மன்னனின் தேவி என்பதால் இவர்கள் புலவர்களால் வருணிக்கப்பட்டுள்ளனர். மன்னனின் அனைத்து செயல்களுக்கும் உறுதுணையாக இருப்பதால் அரசியர்களின் தோற்றம் சிறப்பிக்கப்பட்டுள்ளது எனக் கருத முடிகிறது.

இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனின் பதுமன் தேவி, தேவமகளிர் அவர்களுக்குள்ளாகவே மாறுபாடு கொள்ளும் அளவிற்கு சிறப்பான தோற்றம் கொண்டிருந்தாள். இவள் மன்னனைப் பிரிந்திருந்த வேளையில் மிகுந்த சால்பினையும், நாணம் மிகக் கொண்ட உடம்பினையும், ஒளி பொருந்திய நெற்றியையும் உடையவளாக இருந்துள்ளாள். இதனை,

**"வான் உறை மகளிர், நலன், இகல் கொள்ளும்"** (பதிற்று.14;13)

**“கனவினுள் உறையும், பெருஞ்சால்பு, ஒடுங்கிய**
**நாணு மலி யாக்கை, வாள் நுதல் அரிவை”** (பதிற்று.19;13-14)

என வரும் அடிகளில் குமட்டூர்க்கண்ணனார் குறிப்பிட்டுள்ளார். செல்வக்கடுங்கோ வாழியாதன் தேவி, மன்னனின் அரண்மனைக்கியைந்த சித்திரம் போன்று விளங்குபவள். இவள் முத்து, ஆரம் போன்ற அணிகளையணிந்து அழகான துகிலையும், வரியுடைய அல்குலும், மலர்ந்த கண்களும், மூங்கில் போன்ற தோள்களும் பெற்று, மணம் வீசுகின்ற நெற்றியையும் கொண்டு திகழ்ந்தாள். இதனை,

**“ஓவத்து அன்ன வினை புனை நல் இல்,**
**பாவை அன்ன நல்லோள் கணவன்”** (பதிற்று.61;3-4)
**“பூண் அணிந்து எழிலிய வனைந்துவரல் இள முலை,**
**.... .... .... ....**
**சேண் நாறு நறு நுதல்”** (பதிற்று.65;6-10)

என வரும் பதிற்றுப்பத்து அடிகளில் கபிலர் சிறப்பித்துள்ளார். மேலும் வாழியாதனின் தேவி அமைதித் தன்மையோடு மடம் என்னும் குண நிலைப் பெற்று, கற்பு என்னும் குணம் தாங்கியிருப்பதை,

**“பெண்மை சான்று பெரு மடம் நிலைஇக்**
**கற்பு இறை கொண்ட கமழும் சுடர் நுதற்**
**புரையோள்”** (பதிற்று.70;14-16)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. இதனால் வாழியாதன் தேவியின் தோற்றச் சிறப்பும், அமைதித்தன்மை வாய்ந்த குணமும் அறியப்படுகின்றன.

பெருஞ்சேரல் இரும்பொறையின் தேவி அந்துவஞ்செள்ளை, கொடுமணம் என்னும் ஊரில் தாயாரிக்கப்பட்ட மான் தோலின் விளிம்பில் கட்டிய அணிகலனையும், பந்தர் என்ற ஊரில் விளைந்த வெண்முத்துக்களையும், அணிந்திருந்தச் சிறப்பை,

**“கொடுமணம் பட்ட வினை மாண் அருங்கலம்,**

.... .... .... ....

நலம் பெறு திரு மணி கூட்டும் நல் தோள்" (பதிற்று.74;5-16)

என்னும் அரிசில்கிழார் பாடல் அடிகள் சுட்டிக்காட்டுகின்றன. இது அரசியர்கள் சிறந்த அணிகலன்களை அணிந்து மிகுந்த தோற்றப்பொலிவு கொண்டவர்களாக இருந்திருக்கிறார்கள் என்பதை வெளிக்காட்டுகின்றன.

**குணம்**

குணம் என்றால் இயல், இயல்பு, கொள்கை, சால்பு, சீலம், தகவு, தகுதி, பண்பு, பான்மை, இலட்சணம், மேன்மை, ஒழுக்கத்தன்மை, நிறை, நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்று கழகத்தமிழகராதி (ப.354) பொருள் கூறியுள்ளது. இவ்வகையில் அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்ற குணநலன்கள் கொண்டவர்களாக பெண்கள் திகழ்ந்திருக்கிறார்கள். இதனை,

"அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்
நிச்சமும் பெண்பாற் குரிய என்ப" (தொல்.பொருள்.களவு.இளம்.7)

என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். சங்கப் புற இலக்கியங்களில் அரசிகள் இத்தகைய குணநலன்கள் பெற்றதற்கான சான்றுகள் காணப்படுகின்றன. செல்வக்கடுங்கோ வாழியாதன் மற்றும் பெருஞ்சேரலாதன் தேவியர் குற்றமில்லா அறிவில் சிறந்தவளாகவும், பொய் கூறாதவர்களாகவும் பழிச்சொற்களைப் பொருட்படுத்தாதவர்களாவும் மகளிருக்குரிய குணங்களான கற்பு, நாணம், மடம், சான்றாண்மை ஆகிய குணங்களைப் பெற்றவர்களாகவும் திகழ்ந்திருக்கிறார்கள். இதனை பதிற்றுப்பத்துப் பாடல்களில்(70;14-15,19;14) காண முடிகின்றது.

இதனால் அரசியர்கள் தோற்றத்திலும், குணத்திலும் சிறந்து தொல்காப்பியரின் சொல்லுக்கிணங்க விளங்கியுள்ளனர் என்பது அறிய இயல்கிறது.

அரசியரின் துயரம்

கடையேழு வள்ளல்களில் ஒருவரான வையாவிக் கோப்பெரும் பேகன் மனைவி, கண்ணகியை விட்டு பரத்தமையின் காரணமாக பிரிந்து செல்கிறான். இதனால் துன்பத்தோடு இருக்கும் கண்ணகியின் துயர் போக்கும் பொருட்டு, பேகனிடம் சென்று சங்கப் புலவர்கள் தாபத நிலையில் பாடிய பாடல்கள் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன. இப்பாடல்களில் நேரடியாக கண்ணகி இடம் பெறவில்லையாயினும், இத்தேவியின் நிலையைப் பேகனுக்கு அறிவுறுத்தும் விதமாகப் பாடல்கள் அமைந்துள்ளன. மன்னனின் பிரிவால் தேவி கண்ணீருடன் இருப்பதை,

**“இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்,**
**முலையகம் நனைப்ப, விம்மி,**
**குழல் இனைவது போல் அழுதனள்”** (புறம்.143;13-15)

என்ற அடிகளில் கபிலர் குறிப்பிட்டுள்ளார். தாபத நிலைக் குறித்து தொல்காப்பியமும்(பொருள்.77) குறிப்பிட்டுள்ளது. பரத்தையின் நலன் விரும்பி சென்றுள்ள பேகனிடம் இன்றிரவே தேரேறிச்சென்று உன் மனைவியின் துயர்களைய வேண்டும். இதுவே உன்னிடம் கேட்கும் பரிசில் என பரணர், அரசில்கிழார், பெருங்குன்றூர்கிழார் ஆகிய மூன்று புலவர்களும் பாடியுள்ளனர். இவைகள் முறையே,

**“இன மணி நெடுந் தேர் ஏறி,**
**இன்னாது உறைவி அரும் படர் களைமே!”** (புறம்.145;9-10)
**“தண் கமழ் கோதை புனைய,**
**வண் பரி நெடுந்தேர் பூண்க, நின் மாவே!”** (புறம்.146;10-11)
**“புது மலர் கஞல, இன்று பெயரின்,**
**அதுமன், எம் பரிசில்-ஆவியர் கோவே!”** (புறம்.147;8-9)

என்கின்ற பாடல் அடிகள் மூலம் அறியப்படுகின்றன. மன்னனின் பெருமைகளைப் பாடும் புலவர்கள், பிரிந்து வாடும் அரசியின் துன்பம்

போக்கும் வண்ணம் அம்மன்னனை நல்வழிப்படுத்தவும் பாடல்கள் பாடியுள்ளனர்.

பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு கல்வி அறிவுடையவராகவும், கற்பில் சிறந்தவராகவும் இருந்துள்ளார். இவர் தன் கணவன் போர்க்களத்தில் இறந்த செய்தியறிந்துத் தீப்பாய முற்படுகிறாள்(புறம்246). இதனை இவ்வரசி புறநானூற்றுப் பாடலில் பாடியுள்ளார். அரசியராக இருந்து புறப்பாடல் பாடியவர்கள் பெருங்கோப்பெண்டும், பாரி மகளிரும்(புறம்.112) ஆவர். அரசியர்கள் தங்களை ஒப்பனைச் செய்து கொண்டு வலம் வருவது மட்டுமல்லாமல் கல்வி அறிவோடு பாடல் இயற்றும் புலமையும் உடையவராக இருந்துள்ளார்கள்.

பதிற்றுப்பத்தில் அரசியர்களின் அழகு, தோற்றம், குணம் போன்ற நலன்கள் சிறப்பிக்கப்பட்டிருக்கும் நிலையில் புறநானூற்றின் மூன்று பாடல்களில் அரசியின் துன்ப நிலைப் பற்றிய பதிவுகள் காணப்படுகின்றன. எனவே சாதாரண மகளிரின் வாழ்க்கைப் போல் அரசியர்களின் வாழ்க்கையிலும் இன்ப, துன்பங்கள் நிகழ்ந்திருக்கிறது என்பதை இச்செய்திகள் புலப்படுத்துகின்றன. இதனால் சங்ககால மகளிரின் கற்பு மேன்மையும் அரசியர்களின் வாழ்வும் புலப்படுகின்றன.

### தாய்மை

தாய் என்பவள் அன்பின் சிகரமாகவும், தியாகத்தின் சுடராகவும், அறிவின் ஊற்றாகவும் திகழக்கூடியவள். மாதா, பிதா, குரு, தெய்வம் என்னும் வரிசையில் முதன்மையான இடத்தைப் பெறக்கூடியவள். இதனால் தான் பதினாறு செல்வமாக கருதக்கூடிய ‘மனை, மனைவி, மக்கள், தாய், நெல், நீர், நிலம், கால்நடை, கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கம், வலிமை,

ஏவல், பொன், புகழ்' ஆகியவற்றில் தாயையும் ஒரு செல்வமாகக் கருதுகின்றனர். ஔவையாரின்

**"அன்னையும், பிதாவும் முன்னெறி தெய்வம்"**(கொன்றைவேந்தன்-1)

என்ற பாடல் அடியில் தாய் தெய்வமாகப் போற்றப்படுகிறாள். **"ஆண்டவன் எல்லா இடங்களில் இருக்க முடியாது என்பதால் தான் அன்னைகளைப் படைத்தார்"** என்று யூதப் பழமொழி குறிப்பிட்டுள்ளது. உலகத்தில் உயிர் என்ற ஒரு பொருள் உலவத் தொடங்கிய காலம் முதல் உலகில் தோன்றி நிலவுவது தாய்மையெனும் உணர்ச்சியாகும்.

தாய் என்ற சொல்லுக்கு 'அண்ணன் தேவி, அரசன் தேவி, ஊட்டுத்தாய், குருவின் தேவி, கைத்தாய், செவிலித்தாய், தன் தேவியை ஈன்றாள், நற்றாய், பாராட்டுத்தாய், மாதாவின் சகோதரி' என தமிழ் மொழியகராதி பல பொருள்கள் தந்துள்ளன. இத்தகைய சிறப்புப்பெற்ற தாய் தன் குழந்தையின் முன்னேற்றத்திற்காக தன்னைக் கரைத்துக் கொள்கிறாள். ஒரு குழந்தையின் மழலைப்பருவத்திலிருந்து தாயின் உணர்வுகள் குழந்தையோடு பின்னிப் பிணைகின்றன. இதனடிப்படையில் சங்கப் புற பாடல்களில் உள்ள தாய் பற்றிய உவமைகள், கருவுற்ற தாய், அவர்களின் செயல்பாடுகள், மறக்குடித்தாய், செவிலித்தாய், தாயின் மனநிலை என்ற நிலைகளில் ஆராயப்படுகிறது.

## தாய் பற்றிய உவமை

சோழ நாட்டின் நீர் வளம், பிள்ளை ஈன்று பல மாதங்கள் செல்லினும் பால் சுரக்கும் தாயின் மார்பு போல, மிகுதியான நீர் வளத்தையுடையது என்ற உவமையை,

**"புனிறு தீர் குழவிக்கு இலிற்று முலை போலச்**
**சுரந்த காவிரி மரம் கொல் மலி நீர்"**(புறம்.68;8-9)

எனும் புறநானூற்று பாடல் உணர்த்துகிறது. புலவரின் வறுமையைக் குறிப்பிடும் இடத்தில்,

> **“பாஅல் இன்மையின் தோலொடு திரங்கி,**
> **இல்லி தூர்ந்த பொல்லா வறு முலை**
> **சுவைத்தொறு அழூஉம் தன்மகத்து முகம் நோக்கி”** (புறம்.164;3-5)

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. உடல் மெலிந்த தாயின் வறிய முலையைச் சுவைக்குத்தோறும் பால் காணாமல் குழந்தை அழுகின்றது. அக்குழந்தையின் முகத்தைப் பார்த்து கலங்கிய கண்களோடு பெருந்தலைச் சாத்தனாரின் மனைவி வருந்துவாள். இதில் புலவரின் வறுமை நிலைமையைக் குறிப்பிடத் தாய்ப்பால் இல்லாத அவல நிலைச் சுட்டிக்காட்டப்படுகிறது. மேலும், தாயிடம் பால் இல்லாமையால் உண்ணுதலை வெறுத்தக் குழந்தையோடு வீட்டில் வறுமையுற்றிருக்கும் தன் மனைவியை நினைந்து, செல்வேன் என்று பெருங்குன்றூர் கிழார் பரிசில் நீட்டித்த மன்னனிடம் கூறுகிறார். இதனை,

> **“பாஅல் இன்மையின் பல்பாடு சுவைத்து,**
> **முலைக்கோள் மறந்த புதல்வனொடு,**
> **மனைந் தொலைந்திருந்த என் வாணுதற் படர்ந்தே”** (புறம்.211;20-22)

என்ற அடிகள் சுட்டுகின்றன. இதனால் குழந்தைப் பாலில்லா தாயின் மார்பை வெறுத்து அழும் காட்சிகள் புலப்படுகிறது. தாய்போல் குழந்தையைப் காப்பாரில்லை என்பதைப் பரணரும், புறத்திணை நன்னாகனாரும்,

> **“தாய் இல் தூவாக் குழவி போல”** (புறம்.4;18,379;15)

என்ற அடியில் சுட்டிக்காட்டியுள்ளனர். வெற்றி பெற்ற மன்னர்களின் பகை நாட்டு நிலைமையைக் குறிப்பிட இவ்வடி உமையாக்கப்பட்டுள்ளது. இதைப் போல, எழினி இறந்ததால் அவன் உறவினர் படும் வருத்தம், ஈன்றத் தாயால் கைவிடப்பட்ட குழந்தையைப் போன்றிருந்தது. இதனை,

> **“பொய்யா எழினி பொருது களம் சேர**
> **ஈன்றோள் நீத்த குழவி போல”** (புறம்.230;6-7)

என்ற அடிகளில் உவமையாக்கப்பட்டுள்ளன. மேலும், உணவைக் காணாது அழும் குழந்தையின் அழுகையை நிறுத்தக் காட்டில் உறையும் மறப்புலி வருகின்றது என்று சொல்லி அச்சமுறுத்தியும், நிலாவைக் காட்டியும் அவற்றால் தணிக்க இயலாது வருந்தினாள் பெருஞ்சித்திரனாரின் மனைவி என்பதனை,

**"உள் இல் வறுங் கலம் திறந்து, அழக்கண்டு,**
**மறப் புலி உரைத்தும், மதியம் காட்டியும்"** (புறம்.160;17-18)

என வரும் அடிகள் புலப்படுத்துகின்றன. இதனால் வளத்திற்கும் வறுமைக்கும் தாய்ப்பால் உவமையாக்கப்பட்டுள்ளதும், புலவர்களின் வறுமையான வாழ்வில் மனைவி, பால் இல்லாமல் தவிக்கும் குழந்தைகளின் அழுகையை நிறுத்தப் படும் பாடும் புலப்படுகிறது.

**கருவுற்றத் தாய்**

கருவுற்ற மகளிர் புளிப்பு, உவர்ப்பு போன்ற சுவையுடையப் பொருள்களை மிகவும் விரும்பி உண்ணும் பழக்கம் சங்க காலம் முதல் இருந்து வருகிறது. சிலர் மண், சாம்பல் போன்றவற்றை உண்ண விருப்பம் கொண்டிருந்திருக்கின்றனர். அவ்வகையில் சேரமான் இரும்பொறையின் வீரத்தைக் குறிப்பிடும் புறநானூற்றுப் பாடலில் கருவுற்ற மகளிர் மண் விரும்பி உண்டுள்ளதை,

**"வயவுறு மகளிர் வேட்டு உணின் அல்லது,**
**பகைவர் உண்ணா அரு மண்ணினையே"**(புறம்.20;14-15)

இப்பாடல் அடிகள் காட்டுகின்றன. இதனால் சேர மன்னனின் நாட்டை எப்பகைவராலும் கொள்ள முடியாது என்பதும், கருவுற்ற மகளிர் மண் விரும்பி உண்பர் என்பதும் பெறப்படுகிறது.

கருவுற்ற மகளிருக்கு குழந்தைப் பிறக்கும்பொழுது, ஏற்படும் நோவு பேறுகால நோவு ஆகும். ஊரில் திருவிழா தொடங்கிய வேளையில், கட்டில் பின்னுவோனின் மனைவிக்கு பேறுகால நோவு உண்டாவதை,

**"சாறு தலைக்கொண்டென, பெண் ஈற்று உற்றென"** (புறம்.82;1)

என்ற அடியில் ஆசிரியர் குறிப்பிடுகிறார். நெடுஞ்சேரலாதனின் மனைவியர் பதுமன் தேவியும், நற்சோனையும் ஈன்றெடுத்த புதல்வர்களான நார்முடிச்சேரல், ஆடுகோட்பாட்டு சேரலாதன், கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஆகியோர் நான்கு, ஐந்து, ஆறு ஆகிய பதிற்றுப்பத்துப் பாடல்களில் பாடப்பட்டு, பாராட்டப்பட்டுள்ளனர். இது அரசமாதேவியர் சிறந்த புதல்வர்களை ஈன்றப் பெருமைக்குரியவர்கள் என்பதை உணர்த்துகிறது.

அரசியல் அறிவு உட்பட்டப் பிற குணங்களுடன் கூடிய சிறந்த கல்வியைக் கற்று, ஈடில்லாப் புகழுக்குரிய புதல்வனைப் பெற்ற பெருமைக் கொண்ட செய்தியை,

**"காவற்கு அமைந்த அரசு துறை போகிய**
**வீறு சால் புதல்வற் பெற்றனை"** (பதிற்று.74;20-21)

இப்பதிற்றுப்பத்து அடிகள் காட்டியுள்ள விதம் சிறப்பிற்குரியதாக உள்ளது. இதனால் பெண்ணின் பேறுகால நோவும், புதல்வனைப் பெற்றுத் தந்த பெருமையும் அறியப்படுகின்றன.

**மகவு ஈன்ற தாய்**

மகவு ஈன்ற தாய்க்கு சத்து நிறைந்த அளவான உணவு வகைகளைக் கொடுத்தல், உடலில் ஈரம் படாமல், ஒரு குறிப்பிட்ட வெப்பத்துடன் இருத்தல், ஒப்பனை நலன் தவிர்த்தல் போன்ற சில வரன்முறைகள் விதிக்கப்பட்டுள்ளன. அதன் படி அண்மையில் மகவு ஈன்ற எயிற்றி, வெப்பம் கருதி, மான் தோல் படுக்கையில் குழந்தையுடன் முடங்கிக் கிடக்கும் காட்சியை,

**“மான்தோல் பள்ளி மகவொடு முடங்கி,**
**ஈன்பிணவு ஒழியப் போகி”** (பெரும்.89-90)

என்ற பெரும்பாணாற்றுப்படைப் பாடல் அடிகள் வெளிக்காட்டுகின்றன. அண்மைக்காலத்தில் மகவு ஈன்றுள்ள மகளிர் ஐயவி என்னும் வெண்சிறு கடுகைப் பூணுவதில்லை என்பது,

**“புனிற்று மகள் பூணா ஐயவி”** (பதிற்று.16;3-4)

எனும் அடியால் தெரிகிறது. இதிலிருந்து மகவு ஈன்ற தாயின் செயலை அறிய முடிகிறது.

**செவிலித்தாயின் அன்பு**

செவிலித்தாய் என்பவள் குழந்தையின் வளர்ப்புத்தாயாக இருப்பவள். வளர்ப்புத்தாயாக இருப்பினும், குழந்தையின் மீது மிகுந்த அக்கறையும், பற்றும், பாசமும் கொண்டு அன்பு நிறைந்தவர்களாக இருப்பர். இவ்வன்பின் காரணமாக அக்குழந்தைகள் அவர்களைத் தழுவி, தாயாகப் பாவித்திருப்பர்.

**“தளர்நடை வருத்தம் வீட, அலர்முலைச்**
**செவிலிஅம் பெண்டிர்த் தழீஇ, பால்ஆர்ந்து”** (பெரும்.250-251)

என்ற அடிகளில் குழந்தையின் வளர்ப்புத் தாயாகிய செவிலித்தாயைத் தழுவிப் பால் உண்டு உறங்கும் அளவிற்கு அத்தாய் குழந்தையின் மீது மிகுந்த அன்புக் கொண்டவளாக இருந்திருக்கிறாள். இதனால் தாயன்புப் போன்று செவிலித்தாயும் அன்பு நிறைந்தவளாக இருந்திருக்கிறாள் என்பது பெறப்படுகிறது.

**தாயின் மனநிலை**

தாயின் அன்பு ஈடு இணையில்லாதது. பாகுபாடற்றது. இத்தன்மை கொண்ட தாயும் தன்(நன்கு கற்ற) பிள்ளைகளிடத்து அதிகப் பற்றுக் கொண்டவளாகத் திகழ்வாள். இதனைப் புறநானூறு,

**“பிறப்பு ஓர் அன்ன உடன் வயிற்றுள்ளும்,**

**சிறப்பின் பாலால், தாயும் மனம் திரியும்"** (புறம்.183;3-4)

என்று குறிப்பிடுகின்றது. இதனால் கல்வியின் சிறப்பால் கற்ற மகனைத் தாய் பெரிதும் விரும்புவாள் என்பது அறியப்படுகின்றன.

**மகளிரின் வீரவுணர்வு**

சங்க காலத்தில் வீரவுணர்வும், மன உறுதியும் படைத்த மறக்குடி மகளிர் வாழ்ந்திருக்கிறார்கள். இவர்கள் "மூதின் மகளிர்"(புறம்.279;1) மறக்குடித்தாய் என்று அழைக்கப்பட்டார்கள். இவர்களிடம் மறப்பண்பு மிகுந்து அரசு, நாடு பற்றிய பண்புகள் செறிந்து காணப்படுகின்றன. இதனை, **"மறங்கடைக் கூட்டிய குடிநிலை"** என்று தொல்காப்பியமும் (பொருள்.இளம்.புறத்.4),

**"அடல்வேல் ஆடவர்க் கன்றியும் அவ்விரல்**
**மடவரல் மகளிர்க்கும் மறம் மிகுத்தன்று"** (பு.வெ.8;கொளு-21)

என்று புறப்பொருள் வெண்பாமாலையும் குறிப்பிட்டுள்ளன.

சங்க காலத்தில் "வேந்தர்களிடையேயும் குறுநில மன்னர்களிடையேயும் ஒற்றுமை நிலவாமல் இன, நாட்டு எல்லை ஆகியவற்றின் அடிப்படையில் பகைமையும் போரும் நிலவி வந்தன" என்று முனைவர் நா.பழனிவேலு அவர்கள் (சங்கப் புற இலக்கியங்களில் சமூகச் சித்திரிப்புகள்,ப.26) குறிப்பிட்டுள்ளார். இது போன்ற போர்க்காலச் சூழலில் மறக்குடித்தாய் தன் மகனைப் போருக்கு அனுப்பி வைக்கும் நிலையை,

**"கெடுக சிந்தை, கடிது இவள் துணிவே;**
**மூதில் மகளிராதல் தகுமே!"** (புறம்.279;1-2)

என்ற பாடலில் காண முடிகிறது. இவ்வாறு பெண்களின் வீரத்தைப் பெண்களே பாராட்டும் மாண்பு போற்றுதற்குரியதாக உள்ளது.

சங்க கால மகளிர் போரின் பொருட்டு தன் மகன், கணவன் ஆகியோர் இறந்துவிட்டால் அதற்காக வருந்தியழாமல், பெருமையோடு கண்ணீர் சிந்துபவர்களாக இருந்துள்ளனர். நின் மகன் எங்கு உள்ளான் என்று விசாரித்தப் பெண்ணிடம், புலி இருந்து பின் பெயர்ந்து சென்ற கற்குகைப் போல அவனைப் பெற்ற வயிறு இது என்று கூறியத்தாய் செருக்களம் சென்றுப் பார் என்கிறாள். இவ்வாறு தாய் தன் மகனின் வீரம் பற்றி கூறும் பெருமையை,

**"புலி சேர்ந்து போகிய கல் அளை போல,**
**ஈன்ற வயிறோ இதுவே;**
**தோன்றுவன்மாதோ, போர்க்களத்தானே"** (புறம்.86;4-6)

என்ற பாடல் அடிகள் புலப்படுத்துகின்றது. தன்மகன் வீரன் என்று புகழக்கேட்டத் தாய், பிள்ளையைப் பெற்ற காலத்திலும் பெருமகிழ்ச்சி அடைந்ததை,

**"ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்"** (குறள்.69)

எனும் குறளில் வள்ளுவர் கூறியிருக்கிறார். வெண்மையான நரைத்த கூந்தலையுடைய மறக்குடி முதுப்பெண் தன் இளைய மகன், களிற்றினைக் கொன்று தானும் வீழ்ந்தான், என்பதனை அறிந்த தாய் ஈன்ற பொழுதினும் உவகைக் கொண்டு பின் மிகுந்த கண்ணீர் கொண்டு அழுகிறாள். இதனை,

**" 'வால் நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்**
**களிறு எறிந்து பட்டனன்' என்னும் உவகை**
**ஈன்ற ஞான்றினும் பெரிதே"** (புறம்.277;2-4)

என்ற புறநானூற்றுப் பாடல் வெளிக்காட்டுகிறது.

முதுமையான வீரத்தாய் தன் மகன் புறமுதுகிட்டு மாண்டான் என்று கூறக்கேட்டச் செய்தியை நம்ப மறுத்து, அது உண்மையானால் அவன் பாலுண்ட மார்பை அறுத்தெறிவேன் என்ற வீர ஆவேசத்துடன் கையில்

வாளேந்திக் கொண்டு செறுக்களம் சென்று தன் மகனைத் தேடும் மாண்பு கொண்டவளாகத் திகழ்கிறாள். அங்கு மார்பில் விழுப்புண் பட்டு உடல் வேறு வேறாகச் சிதைந்த தன் மகனின் நிலைக் கண்டு, அவனைப் பெற்ற நாளில் கொண்ட மகிழ்ச்சியினும் பேருவகைக் கொண்டாள். இச்செய்தியை,

**"நரம்பு எழுந்து உலறிய நிரம்பா மென் தோள்,**
**....  ....  ....  ....**
**ஈன்ற ஞான்றினும் பெரிது உவந்தனளே!**(புறம்.278)

என்ற புறநானூற்றுப் பாடல் உணர்த்துகிறது. சினம் கொண்ட தாய் உண்மையறிந்து பெருமகிழ்ச்சி அடையும் சிறப்பு இதில் புலப்படுத்தப்பட்டுள்ளது.

போர்க்களத்தில் படைகளுக்கிடையில் வீரன் ஒருவனின் உடல் வெட்டுண்டு சிதைந்து வேறுபட்டது. பின்னிட்டு ஓடாத கொள்கையினை உடைய அவ்வீரனின் தாய், தன் மகனின் மறமாண்பைக் கண்டு, அன்பு மிகுதியால் வற்றிய முலைகளில் பால் ஊறிச் சுரந்த காட்சியை,

**"சிறப்புடையாளன் மாண்பு கண்டருளி,**
**வாடு முலை ஊறிச் சுரந்தன-**
**ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே"**(புறம்.295;6-8)

இப்புறநானூற்றுப் பாடலால் அறிய முடிகிறது. இதனால் ஆண் மகனை ஈன்று புறம் தந்த பெருமைச் சங்ககால தாய்க்கு உரியதாக இருந்திருக்கிறது.

அச்சம் விளைவிக்கின்ற போர்க்களத்தில் தம் தலைவன், புதல்வர்கள் என அனைவரும் இறந்தனர் என்ற செய்தியைக் கேட்டப் பெண் அடைந்த துக்கத்தைக் காட்டிலும், போரில் வீரமரணம் எய்தினார்கள் என்று நினைந்து நெகிழ்ச்சியடைந்ததை,

**"எறிந்து களம் படுத்த ஏந்து வாள் வலத்தர்**
**....  ....  ....  ....**
**கூற்றுக் கண்ணோடிய வெருவரு பறந்தலை"**(புறம்.19;12-16)

என்ற பாடல் புலப்படுத்துகிறது. இச்செய்திகளினால் மகளிரின் வீரவுணர்வு குறித்து அறியப்படுகிறது.

இதன் வழியாக கருவுற்ற மகளிர் மண் விரும்பி உண்பதும், மகளிரின் பேறுகால நோவு மற்றும் மகவு ஈன்ற தாய் நீராடி தெய்வத்தை வணங்கும் செயல்கள் வெளிப்படுகிறது. தாயின் மார்பில் ஊறும் பால் சோழ நாட்டின் நீர் வளத்திற்கும், புலவரின் வறுமையைக் குறிப்பிடும் இடத்திற்கும் உவமையாகக் காட்டப்பட்டுள்ளது. ஒரு வயிற்றுப் பிள்ளைகள் இருவரில் கல்வி கற்றப் புதல்வனைத் தாய் அதிகம் விரும்புவதும் வளர்ப்புப் பிள்ளையிடம் செவிலித்தாய் அன்பு காட்டுவதும், புலனாகிறது.

வீரமகனை ஈன்ற தாயின் பெருமையும், வீரமரணம் அடைந்தான் மகன் என்ற செய்தியறிந்த தாயின் நிலைமையும் பற்றி அறிந்து கொள்ள முடிகிறது. கணவன், புதல்வன் என அனைவரும் இறந்துபோன நிலையில் அவர்களின் வீர மரணத்தை எண்ணிப் பெருமை அடையும் மறக்குடித்தாயின் வீரம் புலப்படுகிறது. இதனால் சங்கப்புற இலக்கியங்களில் இடம் பெறும் தாய்மார்களின் அன்பு, பெருமை, வீரம் போன்றவற்றை அறிய முடிகின்றன.

**மகளிரின் ஊடல்**

சங்க கால மக்களின் வாழ்க்கை அகம், புறம் சார்ந்த வகையில் அமைந்திருந்தது. இதில் அகம் சார்ந்தப் பதிவுகள் புற இலக்கியங்களில் காணப்படுகின்றன.

களவு நிலையிலும் கற்பு நிலையிலும் காதலர்களிடையே மாறுபாடு தோன்றுதல் உண்டு. அம்மாறுபாடு 'பிணக்கம்' என்றும், 'ஊடல்' என்றும் கூறப்படும். உடலுதல் என்பதற்கு மாறுபடுதல் என்பது பொருள். அச்சொல்லின் அடிப்படையில் தோன்றியது ஊடல் ஆகும். மாறுபாடாகிய ஊடலை நீக்கிக் கூடுங்கால், அக்கூட்டம் தலைவன் தலைவியருக்கு மிகுந்த

இன்பத்தினைச் செய்யும். ஆதலால் காதலர் வாழ்வில் ஊடல் இன்றியமையாதச் சிறப்புடையதாக அமைந்துள்ளது.

ஊடல் என்பதற்கு ‘தலைவன், தலைவி ஆகியோருக்கு இடையே உண்டாகும் பிணக்கு, பொய்ச்சினம், ஊடுதல், வெறுத்தல், பகைத்தல்’ என்று பல பொருள்களில் தமிழகராதிகள் விளக்கம் தந்துள்ளன. சங்க இலக்கியப் பொருட்களஞ்சியம் ‘காதலர்க்கிடையே எழும் அன்புப்பூசல்’ என்றுப் பொருள் குறிப்பிட்டுள்ளது.

தலைவன் தலைவியர்க்கிடையே தோன்றும் மாறுபாடு அதன் இயல்பு நோக்கி ‘புலவி, ஊடல், துனி’ என்னும் பெயர்களால் வழங்கப்படுகிறது என்று வாழ்வியல் களஞ்சியம் குறிப்பிட்டுள்ளது.

காதல் இன்பம் மிகுதற்கு உதவியாகும் ஊடலை இலக்கண நூலாசிரியர்கள் ஐந்திணைக்குரிய உரிப்பொருள்களுள் ஒன்றாகக் குறிப்பிட்டுள்ளார்கள். ஊடலும் ஊடல் நிமித்தமும் மருதத்திணைக்குரிய உரிப் பொருளாகத் தொல்காப்பியமும், பின்னர்த் தோன்றிய அக இலக்கண நூல்களும் வரையறுத்துள்ளன.

### புலவியும் ஊடலும்

‘புலவி அண்மைக் காலத்தது, ஊடல் அதனின் மிக்கது’, என்று தொல்காப்பியப் பொருளதிகார உரையில் இளம்பூரணர் விளக்கியுள்ளார். புலவி என்பது எளிதில் மாறக்கூடியதாகவும், ஊடல் என்பது எளிதில் மாறாததாகவும் இருப்பதாகும். நீக்கினாலும் எளிதில் நீங்காத ஊடலை ‘உணர்த்த உணரா ஊடல்’ என்றும், எளிதில் நீக்கப்படும் ஊடலை ‘உணர்த்த உணரும் ஊடல்’ என்றும் இலக்கண நூல்கள் குறிப்பிடுகின்றன. தலைவன் தலைவியோடு ஊடல் கொள்ளும் நிலையினைத் தொல்காப்பியர்,

**"உணர்ப்பு வரை இறப்பினும், செய்குறி பிழைப்பினும்**
**புலத்தலும் ஊடலும் கிழவோற்குரிய"**(தொல்.பொருள்.கற்பு-15)

என்று கூறியுள்ளார். தலைவன் ஊடுதற்குரிய காரணங்களுள் 'உணர்ப்புவரை மிகுதலைக் கற்புக் காலத்திற்குரியதாகவும், செய்குறி பிழைத்தலைக் களவுக் காலத்துக்குரியதாகவும்' நச்சினார்க்கினியர் கூறியுள்ளார். மேலும் புலவியும் ஊடலும் பெரும்பாலும் கற்பு காலத்திற்கும், சிறுபான்மைக் களவு காலத்திற்கும் உரியதாகக் காணப்படுகின்றன.

**திருக்குறளில் ஊடல்**

தலைவன் தலைவியரிடையே தோன்றும் மாறுபாட்டின் வெவ்வேறு நிலைகளைக் குறித்தமைந்த ஊடல் தன்மைகளின் இயல்பு நலங்களை வள்ளுவர் சுட்டியுள்ளார். முன் தோன்றும் ஊடல் பின் தோன்றும் கூடலுக்கு அடிப்படையானது. தலைவனும் தலைவியும் மகிழ்ந்திருத்தலுக்கு ஏற்றதாய் அமைந்து இன்பஞ் செய்தலை, 'ஊடலுவகை' என்னும் அதிகாரம் விளக்குகிறது. ஊடல் நீங்கித் தலைவன் தலைவியர் கூடி மகிழும் சிறப்பினை,

**"ஊடுதல் காமத்திற்கு இன்பம் அதற்கின்பம்**
**கூடி முயங்கப் பெறின்"**(குறள் -1330)

எனத் திருவள்ளுவர் குறிப்பிட்டுள்ளார்.

ஊடற் காலத்தில் தலைவனுக்கும் புலவி உரியது என்பதை, இறையனார் அகப்பொருள்,

**"உணர்ப்பு வயின் வாரா ஊடல் தோன்றின் புலத்தல்தானே**
**கிழவற்கும் வரையார்"**(இ.அ.50)

என்று கூறியுள்ளது. தலைவிக்கு ஊடல் தோன்றும் நிலைக்களன்களாக, தலைவனின் பரத்தையர் நாட்டம், வரைவு கடாதல், பிரிவாற்றமை போன்றவைகளைக் குறிப்பிட முடியும்.

தலைவன் காமக்கிழத்தியரின் மேல் கொண்ட நாட்டத்தின் காரணமாக அயல்மனை, அயற்சேரிக்கு செல்லுதல், பரத்தையரோடு தேர் மீதேறி நகர்புறத்திற்குச் செல்லுதல், மகிழ்ந்திருத்தல் பொருட்டு இளமரக்கா இடங்களுக்குச் செல்லுதல், புனலாடுதல் பொருட்டு நீர் நிலைகளுக்குச் செல்லுதல் போன்ற செயல்களினால் மகிழ்ந்திருப்பான். தலைவனின் இச்செயல்பாடுகளினால் தலைவியிடம் ஊடல் தோன்றும். இதனை நம்பியகப்பொருள்,

> **"தழீஇய அயல்மனைத் தலைவன் பிரியும்"** (நம்பி.64)
> **"அவனயற் சேரியின் அகலும் என்ப"** (நம்பி.65)
> **"இளமரக் காவின் விளையாடற்கும்**
> **புனலா டற்கும் புறநகர்ப் போகும்"** (நம்பி.66)
> **"ஊடல் அவ்வழிக் கூடும் கிழத்திக்கு"** (நம்பி.67)

என்ற நூற்பாக்களில் குறிப்பிட்டுள்ளது.

வள்ளியை மணந்த காரணத்தினால் முருகப்பெருமானை விட்டு தேவசேனை ஊடல் கொண்டு பிரிந்துச் செல்கிறாள். அவ்வேளையில் தேவசேனையின் பின் சென்ற முருகப்பெருமான் தன் தலையில் சூடியிருந்த, பூமாலை அவளின் பாத அடியில் படியும்படியாக வீழ்ந்து வணங்குகிறார். இச்செயலால் தேவசேனை ஊடல் தீர்க்கிறாள். ஊடலைத் தணிக்கும் பொருட்டு செய்த இச்செயல்,

> **"இகலின் இகந்தாளை, அவ் வேளை தலைக்கண்ணி**
> **திருந்து அடி தோயத் திறை கொடுப்பானை"** (பரி.9;36-37)

என்ற பரிபாடல் அடிகளில் பதிவாகியுள்ளது. இதனால் தலைவி தலைவன் மேல் கொள்ளும் ஊடலின் தன்மைகள் வெளிப்படுகின்றன.

### ஊடல் கொண்ட மகளிரிடம் ஏற்படும் மாற்றங்கள்

'நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை' போன்ற எண்வகை மெய்ப்பாடுகளுக்கு ஆட்படும்போது மனிதன்

உடலில் மாற்றங்கள் நடப்பது இயல்பு. அதுப்போல் ஊடல் கொண்ட மகளிரும் மாற்றத்திற்கு ஆளாவது இயல்பானது. இவ்வூடல் காலங்களில் தலைவன் மீது சினம் கொண்டவர்களாகவும், பொய்யான வெறுப்பு கொண்டவர்களாகவும் இருப்பது மகளிரின் இயல்பாகும்.

பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியின் சினம் உரிமை மகளிரின் ஊடல் கொண்ட ஒளி திகழும் முகத்தின் எதிரே மட்டும் தணியட்டும் என்று காரிக்கிழார் பாடியுள்ளதை,

**"செலியர் அத்தை, நின் வெகுளி - வால் இழை**
**மங்கையர் துனித்த வாள் முகத்து எதிரே"**(புறம்.6;23-24)

என்ற அடிகளிலும், சோழன் நலங்கிள்ளி மென்மையான இயல்பால் மகளிர்க்குத் தாழ்ந்து நின்றதை, **"மென்மையின் மகளிர்க்கு வணங்கி"** எனும் அடியிலும்(புறம்.68;6), தலைவன் சிவந்த கண்களை உடைய மகளிருடன் சிறிதாகிய ஊடலுடன் கலந்தான் என்பது,

**"அசெங்கண் மகளிரொடு சிறுதுனி அளைஇ"**(புறம்.366;14)

என்கின்ற அடியிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. ஊடல் கொண்ட மகளிரின் முகம் மாற்றம் பெறுதல், கண் சிவத்தல் போன்ற செயல்களினால் மென்மையிலும் வன்மையானவர்களாகக் காணப்படுவார்களே தவிர, உள்ளத்தால் மென்மையானவர்களாகவே திகழ்ந்திருக்கிறார்கள் என்பது புறநானூற்று செய்திகள் வழி அறியப்படுகின்றன.

**தலைவியின் வயப்படுத்தும் பாங்கு**

பெண்கள் பெரும்பாலும் மென்மைத் தன்மையுடனும், அழகு நலத்துடனும் விளங்குபவர்கள். இவர்கள் ஆடை, அணிகலன்கள் மற்றும் உடல் அமைப்பால் மற்றவர்களின் கவனத்தை ஈர்ப்பவர்கள். மெல்லிய பூவால் நெய்யப்பட்ட ஆடையையும் நுண்ணிய பூண்களையும் அணிந்து,

தலைவனைத் தன் வயமாக்கும் வளைந்த இடையினையும் சிறந்த கற்பையும் உடைய மடந்தையாகிய மனைவி தன் அழகால் தலைவனைத் தன் வயமாக்கும் தன்மையை,

> **“ஒண்பூங் கலிங்கம் உடீஇ, நுண்பூண்**
> **வசிந்து வாங்கு நுசுப்பின், அவ்வாங்கு உந்தி,**
> **கற்புடை மடந்தை தன்புறம் புல்ல”** (புறம்.383;11-13)

என்ற அடிகள் காட்டுகின்றன. நறுமணம் கமழ்ந்து தழைத்தக் கூந்தலையும், தேன் போன்ற சொற்களையும் கொண்டு ஆராய்ந்த அணிகலன்களை அணிந்த மகளிர் தலைவனோடு சேர்ந்து இருத்தற்குக்காலம் பார்த்திருந்ததை,

> **“தெரி இழை மகளிர் பாணி பார்க்கும்**
> **பெரு வரை அன்ன மார்பின்,**
> **செரு வெஞ் சேஎய்”** (புறம்.209;17-19)

என்ற அடிகள் உணர்த்துகின்றன. இதனால் மகளிர் தங்கள் அழகால் தலைவனை வயப்படுத்தும் பாங்கு அறியப்படுகிறது.

**ஊடல் மகளிரின் சினம்**

மனைவி தன் கணவனை மட்டும் உயிராகக் கொண்டு வாழ்பவள். அவன் நலனைத் தன் நலனாகக் கருதுபவள். ஆதலால் தலைவி தலைவனோடு உரிமையாக ஊடற்சினம் கொள்கிறாள். நல்ல மக்கள் செல்வத்தையும், புகழையும், நிறைந்த அறிவையும் பெற்ற காதல் மகளிர் ஊடல் கொண்டு சினந்து பார்க்கும் பார்வைக்குத் தலைவன் அஞ்சும் தன்மை உடையவன். இத்தன்மையை,

> **“ஒள் நுதல் மகளிர் துனித்த கண்ணினும்”** (பதிற்று.57;13)

என்ற அடி தெளிவுப்படுத்துகிறது. மகளிர் ஆடும் துணங்கைக் கூத்தில் மன்னன், அவர்களுக்குக் கை கொடுத்து சேர்ந்தாடும் நிலைக்கண்டு மன்னனின் தேவி ஊடல் கொள்கிறாள். இதனை,

**"நளிந்தனை வருதல், உடன்றனள் ஆகி;**
**உயலும் கோதை, ஊரல்அம் தித்தி,**
**ஈர் இதழ் மழைக்கண், பேர் இயல் அரிவை"**(பதிற்று.52;16-18)

என வரும் பதிற்றுப்பத்து அடிகள் உணர்த்துகின்றன. தலைவி ஊடலால் சினம் கொள்ளும் நிலையும், அதற்குத் தலைவன் அச்சம் கொள்ளும் தன்மையும் இருந்திருக்கிறது.

**தலைவியின் பிரிவாற்றாமை**

அன்பு மிகுதியால், பிரிந்து சென்ற தலைவனை எண்ணி தலைவியின் அணிகலன்கள் நழுவி விழுவதைச் சங்கப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. இதில் புறப்பாடலான பதிற்றுப்பத்தில் செல்வக்கடுங்கோ வாழியாதனின் தேவி மன்னனின் பிரிவால் உறக்கமில்லாமல் இருந்து, பசிய பொன்னாற் செய்த இழை நழுவுவதையும், அரண்மணையின் உயர்ந்த சுவரில் மன்னன் பிரிந்து சென்ற நாட்களைக் கோடிட்டு எழுதியதால், இயல்பாகச் சிவந்த விரல் மேலும் சிவக்கப் பெற்றதையும்,

**"பாயல் இன்மையின் பாசிழை ஞெகிழ,**
**.... .... .... ....**
**செவ் விரல் சிவந்த, அவ் வரிக் குடைச்சூல்"**(பதிற்று.68;15-18)

என்ற அடிகள் சுட்டுகின்றன. இதனால் தலைவனின் பிரிவால் அணிகள் நழுவுவதும், தலைவி சுவரில் கோடிட்டு எண்ணும் வழக்கமும் சங்க காலத்தில் இருந்துள்ளதை அறிய முடிகிறது.

**ஊடல் மகளிரின் செயல்கள்**

ஊடல் கொண்ட காலங்களில் மகளிர் கோபம் கொண்டு, வெறுப்பால் சில செயல்களைச் செய்திருக்கிறார்கள். அவ்வகையில் மென்மைத் தன்மை வாய்ந்த மகளிர் ஊடலின் போது 'மது' உண்டு அணிகலன்களை அறுத்தெறிந்த செய்தியை மதுரைக்காஞ்சியில்(அடி-679-782) மாங்குடி

மருதனார் சுட்டியுள்ளார். இதனால் ஊடல் கொண்ட மகளிர் மது அருந்துபவர்களாகவும், அணிகலன்களை அறுத்தெறியும் இயல்பு உடையவர்களாகவும் இருந்திருக்கிறார்கள்.

இதன் வழியாக ஊடல் கொண்ட மகளிரின் மென்மை, முகம் ஒளி பெறுதல், கண் சிவத்தல், சினம் கொள்ளுதல், அணிகள் நழுவுதல் போன்ற செயல்பாடுகள் சங்கப் புற இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன என்பது தெளிவாகிறது. மகளிர் தலைவனின், அன்பை அதிகரிக்கச் செய்வதற்கும், நல்வழிப்படுத்துவதற்கும் உரிமையோடு ஊடல் கொண்டிருந்திருக்கின்றனர். ஊடல் கொண்ட மகளிரைக் கண்டு தலைவன் அஞ்சும் நிலையும் காணப்பட்டிருக்கிறது.

**பரத்தமை**

சங்க இலக்கியங்கள் அன்பு, பண்பு, பாசம் நிறைந்த இல்லற மகளிரின் பல்வேறு ஒழுக்க நெறிகளைக் குறிப்பிட்டுள்ளது. இதைப்போன்று இச்சை, இன்பம் துய்த்தல், பொருள் பற்று ஆகியவற்றில் நாட்டம் கொண்ட வரையறை மற்றும் கட்டுப்பாடற்ற பரத்தை மகளிரைப் பற்றிய கருத்துக்களையும் பல நிலைகளில் பதிவு செய்துள்ளது.

மானுட சமூகம் தாய்வழிச் சமூகத்திலிருந்து தந்தைவழிச் சமூகம் உருவான காலக்கட்டத்தில் கற்பு நெறி வலியுறுத்தப்பெற்றது. இந்நிலையில் பரத்தமை உருவாகியிருக்க வேண்டும். ஆண்களின் இச்சையாலும் பெண்களின் தேவைகளாலும் பாலியல் நிலைக்கு ஆட்பட்ட மகளிர் பரத்தை மகளிராகக் கருதப்பட்டனர். இம்மகளிர் பொது மகளிர், பொருட்பெண்டிர், பரத்தையர் என்று அழைக்கப்பட்டனர். இப்பரத்தை மகளிர் குறித்த செய்திகள் சங்கப் புற இலக்கியங்களில் காணப்படுகிறது.

சங்கப் புற இலக்கியங்கள் குறிப்பிடும் மகளிரில் பரத்தை மகளிர் எனும் ஒரு பிரிவினர் இருந்துள்ளனர். நிறைவேறாத இன்ப வேட்கையைத் தணித்துக் கொள்ள ஆடவர் கொண்டிருந்தப் பற்பல தொடர்புகளுள் பரத்தையர் தொடர்பும் ஒன்றாகும்.

திருமண உறவு இல்லாது, ஆடவரோடு இணைந்து வாழும் மகளிர் 'வரைவில் மகளிர்' என அழைக்கப்பட்டனர். இதில் 'வரைவு' என்பது திருமணத்தைக் குறிக்கும் சொல்லாகும். 'வரைவில்' என்பது திருமணம் அல்லாத மகளிரைக் குறிப்பதாக உள்ளது. இத்தகைய பரத்தை மகளிரை நாடும் ஆடவனைப் 'பரத்தன்' என்று குறிப்பிடுவதை,

**"மாயப் பரத்தன் வாய்மொழி நம்பி"** (அகம்.146;9)

**"பெண்ணியலார் எல்லாரும் கண்ணின் பொதுஉண்பர்**
**நண்ணேன் பரத்த நின்மார்பு"**(குறள்.1311)

என்ற அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. இதனால் ஆண் மகன் மகளிரைப் பரந்து நாடியதன் காரணமாக பரத்தமை உண்டாயிற்று என்பது பெறப்படுகிறது.

**பரத்தமைக்கான காரணங்கள்**

வாழ்க்கைச்சூழல், பொருளாதார நிலை, உணர்வு மேலீடு போன்ற பல்வேறு காரணங்களால் சங்க காலத்தில் சில மகளிர் பரத்தமை நிலைக்கு ஆட்பட்டிருக்கின்றனர். இதற்கான காரணங்களான நான்கு நிலைகளை,

- "பொருளாதாரத் தேவை. இது வாழ்வதற்குப் பொருளீட்டும் ஒரு வழியாக அமைகிறது.
- அதிகப்பாலுணர்வு கொண்ட பெண்கள் அல்லது பல வகையான இன்பங்களை விரும்பும் பெண்கள்.

- நெருக்கமில்லாத கடமையுணர்வு, இருக்க வேண்டிய அவசியமில்லாத ஒருவனுடன் எப்போதாவது இன்பம் அடைகின்ற வழி.
- அனைத்து காரணங்களுக்கும் பின்னே உள்ள ஒரு சக்தி வாய்ந்த காரணி ஆண்கள் கொடுக்கும் ஊக்கமாகும். வாடிக்கையாளர் இல்லையெனில் பரத்தையரும் இருக்க மாட்டார்கள்".

என்று ராம்பால் அவர்கள்(S.N. Rampal; Indian woman and sex P.78) தெளிவுப்படுத்தியுள்ளார். சங்க இலக்கியப் பாடல்களில் பரத்தையர்கள் தலைவன், தலைவியின் ஊடலுக்குப் பின்னணியாக விளங்கியுள்ளனர். "பரத்தை என்ற சொல் 13 இடங்களிலும், பரத்தமை என்ற சொல் ஒரே ஒரு இடத்திலும் பயன்படுத்தப்பட்டிருப்பதாக" கேபி.அழகம்மை அவர்கள் (சமூக நோக்கில் சங்க மகளிர்,ப.205)குறிப்பிட்டுள்ளார்.

'கற்பு பாடல்களில் மூன்றில் ஒருபங்கு பரத்தைப் பாடல்களாக இருத்தலின் சங்க காலத்தில் இத்துறைப் பாடல்களுக்கு இருந்த நன்மதிப்பை ஒருவாறு அறியலாம் என்று வ.சுப.மாணிக்கம் அவர்கள் (தமிழ்க்காதல்,ப.291) கூறியுள்ளார். கற்பு வாழ்க்கையில் கூற்றுக்கு உரியவளாகப் பரத்தையைத் தொல்காப்பியம் சுட்டுகிறது.

**"பாணன் கூத்தன் விறலி பரத்தை**
**யாணம் சான்ற அறிவர் கண்டோர்"** (தொல்.பொருள்.இளம்.செய்.நூ-182)

சங்ககாலத்தில் பரத்தையர்கள் செல்வம் மிக்க நகரங்களில் வாழ்ந்து வந்துள்ளனர். பரத்தையரை நாடிக் கூடியுள்ள ஆடவர்கள் பெரும்பாலும் மிகுந்த செல்வம் மிக்கவாகளாக இருந்திருக்கிறார்கள். 'பரத்தையை அரிவை, ஊரன்பெண்டிர், மகளிர், மங்கை என்ற பொது நிலையிலும், கணிகை, கொண்டிமகளிர், ஏதிலாள், ஒருத்தி, பரத்தை, பிறள், விலைநலப்பெண்டிர்,

விலைக்கணிகை', என்ற சிறப்பு நிலையிலும் சங்கப்பாடல்கள் (ஐ.இராமராசா, தமிழ் இலக்கியத்தில் ஊடல், முனைவர் பட்ட ஆய்வேடு, பக்.185-186) கூறுகின்றன. இதில் பரத்தை, விலைக்கணிகை, விலைநலப் பெண்டிர், கொண்டி மகளிர் என்ற பெயர்கள் கொண்டு அழைப்பதை,

> **"பரத்தை உள்ளதுவே: பண்புறு கழறல்,**
> **தோள் புதிது உண்ட பரத்தை இல் சிவப்புற**
> **நாள் அணிந்து, உவக்கும் சுணங்கறை யதுவே"** (பரி.9;18-20)
> **"மாயப் பொய் கூட்டி மயக்கும் விலைக் கணிகை"** (பரி.20;49)
> **"விலைநலப் பெண்டிரின் பலர்மீக் கூற"** (புறம்.365;8)
> **"நெஞ்சு நடுக்குறூஉக் கொண்டி மகளிர்"** (மதுரை.583)

என வரும் சங்கப்பாடல்கள் தெளிவுப்படுத்துகின்றன. இவர்களில் போரின் போது பகைநாட்டிலிருந்துக் கொண்டு வரப்பட்ட மகளிர், 'கொண்டி மகளிர்' என அழைக்கப்பட்டனர். 'இவர்கள் வேறுவழியின்றி இவ்விழிந்த வாழ்வை மேற்கொண்டனர்' என முனைவர் அ.தட்சிணாமூர்த்தி அவர்கள் குறிப்பிட்டுள்ளார். போரில் வெற்றி பெற்றவர்கள் பகைநாட்டிலிருக்கும் பொருட்களோடு பெண்களையும் கவர்ந்து வந்தனர் என்பதை, **"கொண்டி மகளிர் உண்துறை மூழ்கி"** என்ற இப்பட்டினப்பாலை அடியும்(246), மகளிர் அடிமைப் படுத்தப்பட்டுக் கொண்டு வரப்பட்டதை,

> **"பல் இருங் கூந்தல் முரற்சியால்**
> **குஞ்சர ஒழுகை பூட்டி"** (பதிற்று. பதி.5;16-17)

என்ற பதிற்றுப்பத்தின் பாடல் அடிகளும் எடுத்துரைக்கின்றன.

பரத்தைப் பெண்டிர் 'பொருட்பெண்டிர்', 'இருமனப்பெண்டிர்' எனக் குறிப்பிடுவதை,

> **"பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்**
> **ஏதில் பிணம்தழீஇ யற்று"** (குறள்.913)
> **"இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்**

**திருநீக்கப் பட்டார் தொடர்பு”**(குறள்.920)

என்று வள்ளுவரும் தெரிவித்துள்ளார். இப்பொருட்பெண்டிர் என்போர் தம்மை நாடி வருபவர்களிடம் போலியான அன்புக் காட்டி, செல்வத்தைப் பறிக்க இன்மொழி பேசி நடிப்பதை மதுரைக்காஞ்சியில் மாங்குடி மருதனார் குறிப்பிட்டுள்ளார். இவர்களின் வாழ்க்கை, தேனை நுகர்ந்து நீங்கும் வண்டின் வாழ்வினைப் போன்றது என்றும், பழமரம் தேடும் பறவையின் வாழ்வினைப் போன்றது என்றும் குறிப்பிடுவதை,

**“நுண்தாது உண்டு, வறும் பூத் துறக்கும்**
**மென்சிறை வண்டினம்மான, புணர்ந்தோர்,**
**.... .... .... ....**
**பழம் தேர் வாழ்க்கைப் பறவை போல”**(மதுரை.573-576)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. இதனால் பொருட்பெண்டிர் பொருட்களைப் பெறுவது மட்டும் தங்களது குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டு இருந்திருக்கின்றனர் என்பது பெறப்படுகின்றன.

**காமக்கிழத்தியர்**

திருமணமான ஒரு ஆண், கண்ணி ஒருத்தியைத் தனக்கேயுரியவளாகக் கொண்டு வாழ்க்கை நடத்தியுள்ளான். இக்கண்ணிக்கு ‘காமக்கிழத்தி’ என்று பெயராகும். ஒருத்திக்கு ஒருவன் என்ற முறைமைக் கொண்ட சமூகத்தில், ஒருத்தியை மட்டும் மணந்த ஆண் பரத்தையரோடு தொடர்பு கொண்டு வாழ்ந்துள்ளான். இவ்வாறான வாழ்க்கையில் ஒருவன் தனக்கே உரிய ஒருத்தியைக் காமக்கிழத்தியர் என்ற பெயரில் கொண்டு வாழ்ந்ததை,

**“கண்ணிய காமக்கிழத்தியர் மேன”**(தொல்.பொருள்.இளம்.கற்.நு.10;14)

என்ற தொல்காப்பிய நூற்பாவும், கோவலனோடு மட்டும் வாழ்ந்து மகப்பேறு பெற்ற மாதவியின் சிறப்பைச் சிலப்பதிகாரம், மணிமேகலை ஆகிய காப்பியங்கள் மூலம் அறிய முடிகின்றன. மேலும் இக்கருத்து,

**“ஒருவன் தனக்கே உரிமை பூண்டு**
**வருகுலப் பரத்தையர் மகளி ராகி**
**காமுக்கு வரைந்தோர் காமக் கிழத்தியர்”** (நம்பி.113)

என்ற நம்பியகப்பொருள் நூற்பாவால் விளக்கப்படுகிறது. இதனால் காமக்கிழத்தியர் என்று அழைக்கப்படுவதன் பொருள் பெறப்பட்டது. “போர் மேவிய சமூகத்தில் போரால் ஆண்கள் பலர் இறந்து போனதால் பெண்களின் தொகை அதிகமானது. ஒருவன் ஒருத்தியை மணம்செய்து கொள்ளும் கோட்பாட்டால் ஆடவர், பெண்டிரைக் காமக்கிழத்தியாகவும், பரத்தையாகவும் வைத்துக் கொண்டனர்” என்று பரத்தையர்கள் உருவானதற்கான காரணங்களை க.திலகவதி அவர்கள் (சங்ககால மகளிர் வாழ்வியல்,ப.45) சுட்டிக்காட்டியுள்ளார்.

பரத்தையர்கள் அரசர், செல்வந்தர் ஆகியோருக்கும், தங்களை நாடி வரும் காமுகர்களுக்கும் இன்பமளிக்கும் பெண்களாக வாழ்ந்து வந்துள்ளனர். ஏனைய பெண்களோடு ஒப்பிடும் பொழுது இவர்கள் மதிப்பிழந்தவர்களாகக் காணப்பட்டாலும், சமுதாயத்தில் செல்வாக்குப் பெற்ற வாழ்வை வாழ்ந்திருக்கின்றனர். பழங்காலச் சமுதாயம் இவர்களின் ஒழுக்கம் இழிவானது என்பதைச் சுட்டியுள்ளது. திருவள்ளுவரும் இப்பரத்தையர் நிலையைக் கடிந்து உரைத்துள்ளார்.

பரத்தையர்கள் பிள்ளைப்பேறு பெறும் உரிமையற்றவர்களாக இருந்திருக்கிறார்கள். இவர்கள் பிள்ளைப் பெற்றதாக சங்க கால இலக்கியங்களும் குறிப்பிடவில்லை. ஓர் ஆண்மகன் முறையாகத் திருமணம் செய்துகொண்ட மனைவியின் மூலம் பெறும் குழந்தைக்கு மட்டும் குலச்சிறப்பும், சொத்துரிமையும் உண்டு. பரத்தையர் குழந்தைப்பேறு பெற்றாலும், இவர்களுக்குப் பிறந்த குழந்தைகள் தலைவனின் குடியுரிமையைப் பெற வாய்ப்பில்லை என்பதை,

**“தட மருப்பு எருமைப் பிணர்ச் சுவல் இரும் போத்து”**(நற்.330)

எனத் தொடங்கும் நற்றிணைப் பாடலில் தோழி சுட்டுவதாக அமைந்துள்ளது. இவ்வாறான நிலையில் பரத்தை, தன் தலைவனின் மகனைத் தன் மகனாக பாவித்து மனம் மகிழ்ந்தச் செய்திகளை,

**“நாயுடை முது நீர்க் கலித்த தாமரைத்**
**.... .... .... ....**
**மகன் தாய் ஆதல் புரைவது- ஆங்கு எனவே”**(அகம்.16)

என்ற அடிகளிலும், பரத்தை தன் தலைவனின் மகனுக்கு மோதிரம் அணிவித்த செய்தியை, தலைவி புதல்வனோடு உரையாடுவதன் மூலம் தெரிவிப்பதை,

**“சுறா ஏறு எழுதிய மோதிரம் தொட்டாள்**
**குறி அறிந்தேன்; ‘காமன் கொடி எழுதி’ என்றும்”**(கலி.84;23-24)

என்கின்ற பாடல் அடிகளிலும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. பரத்தையின் காரணமாக பிரிவோன், மனைவியின் மாதவிடாய் கழிந்த பின் பன்னிரண்டு நாள்களுக்கு அவளை விட்டுப் பிரியக்கூடாது என்ற கட்டுப்பாட்டை,

**“பூப்பின் புறப்பாடு ஈராறு நாளும்**
**நீத்தகன்று உறையார் என்மனார் புலவர்**
**பரத்தையிற் பிரிந்த காலையான”**(தொல்.பொருள்.இளம்.கற்.46)

என்ற இந்நூற்பாவில் தொல்காப்பியர் தெளிவுப்படுத்தியுள்ளார். இக்கட்டுப்பாட்டிற்குக் காரணம் மாதவிடாயைத் தொடர்ந்த பன்னிரு நாட்களும் மனைவிக்கு கரு உண்டாவதற்கானக் காலமாக இருப்பதைக் கருத்தில் கொண்டு கணவன் பிரிதல் கூடாது என்று அமைந்ததாகும். இது எஞ்சிய நாள்களில் கணவன் பரத்தையிற் பிரியலாம் என்பதைத் தெரிவிப்பதாக உள்ளது. இவ்வாறான கருத்து நிலவிய போதிலும் பரத்தை ஒழுக்கம் ஆடவர்களால் விரும்பப்படாத நிலையும் இருந்துள்ளது. தீதற்ற உள்ளம் கொண்டு காதலிக்காதவரும், பலவாகிய கருங்கூந்தலுடையவருமான பொதுப்

பெண்டிரின் பொருந்தாத தழுவலில் என் மாலை துவள்வதாகுக, என்று சோழன் நலங்கிள்ளி பாடியதை,

**“தீது இல் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்**
**பல் இருங் கூந்தல் மகளிர்**
**ஒல்லா முயக்கிடைக் குழைக, என் தாரே!”** (புறம்.73;12-14)

என வரும் புறநானூற்றுப் பாடல் அடிகள் தெரிவிக்கின்றன. ‘பரத்தமை, சமுதாயத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட மணஉறவுக்கு வெளியே இன்பங்காணும் வாயிலாக விளங்கிற்று. ஏனெனில் சொத்துரிமைக்கும், குடும்பப்பரம்பரை உரிமைக்கும் இடையூறு செய்யாத ஒரு தனியுரிமையாக இது திகழ்ந்தது’ என்று கா.சிவத்தம்பி அவர்கள் (ஆராய்ச்சி மலர்-3, இதழ்-2, ப.348) குறிப்பிட்டுள்ளார்.

பரத்தையர்கள் வாழ்க்கை வசதிகள் பல எய்தி செல்வாக்குப் பெற்றிருந்த போதிலும் இல்லற மகளிர்க்கான சமுதாய மதிப்பினை இழந்து வாழ்ந்துள்ளனர். இவர்கள் விலைக்கணிகை, விலைநலப்பெண்டிர், கொண்டி மகளிர் எனவும் திருவள்ளுவர் காலத்தில் பொருட்பெண்டிர், இருமனப்பெண்டிர் எனவும் அழைக்கப்பட்டள்ளது தெளிவாகிறது.

பரத்தையர் திருமணமான ஒரு ஆடவரோடு காமக்கிழத்தியராக இருந்தும் வாழ்ந்துள்ளனர். சமூகத்தில் பிள்ளைப்பேறு பெறும் வாய்ப்பில்லாதவர்களாகவும், சொத்துரிமை மறுக்கப்பட்டவர்களாகவும் இருந்துள்ளனர். பரத்தமை விரும்பப்பட்ட காலக்கட்டத்தில் சோழன் நலங்கிள்ளியால் அவ்வொழுக்கம் வெறுக்கப்பட்டமையும் இதனால் தெரிய வருகிறது. இதன் வழியாகப் பரத்தையர் ஒழுக்கம் இழிவானது என்று கருதினாலும், இவ்வொழுக்கம் சமுதாயத்தில் இயல்பான ஒன்றாகக் கருதப்பட்டு வந்துள்ளது என்பது பெறப்படுகிறது.

தொகுப்புரை

- இல்லறம் என்பது திருமணத்திற்குப் பின் கணவன், மனைவி ஆகிய இருவரும் இணைந்து வாழும் அன்பு வாழ்க்கையாகும்.
- சங்க காலத்தில் இல்லறப் பெண்கள் தங்கள் கணவனுக்குக் கட்டுப்பட்டவர்களாகவும், கணவன் மீது மாறாத அன்புக் கொண்டவர்களாகவும், கணவன் சொல்லும் எந்தவொரு சொல்லுக்கும் மதிப்பு கொடுப்பவர்களாகவும் இருந்திருக்கிறார்கள்.
- தமிழர் பண்பாட்டில் தலைசிறந்த அறமாகவும், பாரம்பரிய பண்புகளுள் ஒன்றாகவும் திகழ்வது விருந்தோம்பல். விருந்து என்பதற்குப் புதுமை, புதியோர் என்று பொருள்படும்.
- சங்க காலம் முதல் ஆணும், பெண்ணும் இணைந்தளிக்கும் விருந்தோம்பலில் பெரும்பங்கு மகளிருடையதாக இருந்திருக்கிறது.
- சங்கப் புறப்பாடல்களில் மகளிரின் விருந்தோம்பும் பண்பு அவர்கள் வாழ்ந்த சூழலுக்கேற்ற வகையில் அமைந்து சிறந்துள்ளது என்பது பெறப்படுகிறது.
- மகளிரின் இல்லற ஒழுக்கப் பண்புகளில் கற்பு சிறந்ததாகக் கருதப்படுகிறது. கற்பு என்பதற்கு மகளிர் கற்பு, கல்வி, தியானம், ஆணை, கதி, உறுதி, புரிசை, வேலைப்பாடு, நீதிநெறி, கற்பனை, தலைவனும் தலைவியும் முறைப்படி மணந்து மேற்கொள்ளும் இல்லற ஒழுக்கம் என்று பலவாறாகப் பொருள்படுகின்றது.
- இலக்கியங்களில் கற்பு குறித்த செய்திகள் காணப்படுகின்றன. கற்புடைய மகளிரின் மேன்மை, கணவனுக்குப் பெருமை சேர்க்கக்கூடியதாக இருந்திருக்கிறது. கற்பு மகளிர் கணவனைப்

பேணுவதை பெரும்பாக்கியமாகக் கருதியிருக்கிறார்கள். கற்பில் சிறந்த பெண்களை அருந்ததியோடு ஒப்பிடும் பாங்கு இருந்திருக்கிறது.

- அரச மகளிர் அழகு, குணம், தோற்றம், கற்பு ஆகியவற்றில் சிறந்து விளங்கி இருந்திருக்கிறார்கள். இம்மகளிர் அரசாட்சி மேற்கொண்டதற்கான சான்றுகள் இல்லை.
- புற நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ள மறக்குடி மகளிர் தாயன்பு, பெருமை, வீரவுணர்வு நிறைந்தவளாகக் காணப்பட்டிருக்கிறார்கள். சங்க கால மகளிர் வீரவுணர்வு, நாட்டுப்பற்றுக் கொண்டவர்களாவும், சமூகக் கடமைகளில் அக்கறைக் கொண்டவர்களாவும் திகழ்ந்திருக்கிறார்கள். மகளிர் போருக்கு செல்லவில்லையானாலும், போருக்காகப் புகழ்மிக்கப் புதல்வர்களை ஈன்று தரும் பெருமைக்குரியவர்களாகத் திகழ்ந்திருக்கிறார்கள்.
- சங்கப் புற இலக்கிங்களில் மகளிர் தலைவனின் அன்பை அதிகரிக்கச் செய்வதற்கும், நல்வழிப்படுத்துவதற்கும் உரிமையோடு ஊடல் கொண்டிருந்திருக்கின்றனர். ஊடல் என்பது புலவி, ஊடல், துனி என்னும் பெயர்களால் வழங்கப்பட்டிருக்கிறது.
- இச்சை, இன்பம் துய்த்தல், பொருள்பற்று ஆகியவற்றில் நாட்டம் கொண்ட வரையறை மற்றும் கட்டுப்பாடற்ற பரத்தை மகளிர் இருந்திருக்கின்றனர். இவர்கள் பொதுமகளிர், பொருட்பெண்டிர், காமக்கிழத்தியர் என்று அழைக்கப்பட்டுள்ளனர். பரத்தை மகளிர் திருமணம் செய்து கொண்டதற்கான சான்றுகள் இல்லை.

இதன் வழி சங்கப்புறப் பாடல்களில் மகளிர் தலைவனோடு இணைந்து இல்லறம் காத்து, விருந்தோம்பியவர்களாகவும், கற்பில் சிறந்தவர்களாகவும், தாய்மைப் பண்புடன் வீரம் நிறைந்தவர்களாகவும், தலைவன் நெறிமாறும்

காலங்களில் ஊடல் கொண்டு நல்வழிப்படுத்துபவர்களாகவும், சூழல் காரணமாக சிலர் பரத்தமை நிலைக்கு ஆட்பட்டவர்களாகவும் திகழ்ந்திருக்கிறார்கள் என்பது பெறப்படுகின்றன.

# இயல் - 2

# சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் பழக்க வழக்கங்கள்

# இயல் - 2

## சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் பழக்க வழக்கங்கள்

தனிமனிதனிடம் இயல்பாக அமைந்திருக்கின்ற நடத்தை சார்ந்த செயல்கள் ‘பழக்கம்’ ஆகும். உதாரணமாக, ஒருவர் பதநீர் அருந்தும் பழக்கமுடையவராக இருப்பார். ஆனால், பதநீர் சார்ந்த வேறு பொருள்களாகிய வெல்லம், கள், கற்கண்டு போன்ற பொருள்களை உண்ணமாட்டார். இது அவருடைய பழக்கம் என்று கூற முடியும். இப்பழக்கம் கற்கும் செயலாகவும், சமூக வளர்ச்சியின் ஒரு கூறாகவும் அமைகிறது.

‘நனவுடன் தொடங்கிய செயல் நாளடைவில் நனவின்றியே நிகழக் கூடியதாகி விடும் செயலையே பழக்கம் என்பர்’ என்று கலைக்களஞ்சியம் (தொகுதி-7,ப.29) குறிப்பிடுகிறது. பழக்கம் செயல்களை எளிய முறையில் பிழையில்லாமல் நடைபெறச் செய்வதுடன் காலம், முயற்சி ஆகியவை வீணாகாமல் இருக்கச் செய்கிறது. இதனால் நல்ல பழக்கங்களைக் குழந்தைகளுக்கு இளமையிலேயே கற்றுக்கொடுக்க வேண்டுமென்றும், அவர்களுடன் அதிகமாகப் பழகும் பெற்றோர், ஆசிரியர் ஆகியோர் செய்ய வேண்டிய கடப்பாடுகள் குறித்தும் கல்வி, உளவியல், மருத்துவம் போன்ற துறைகளைச் சார்ந்த ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுகின்றனர். ‘நல்ல பழக்கங்களை அமைத்துக் கொள்ளக் குழந்தைப் பருவமே ஏற்றது’ என்ற எஸ்.பி.ஆதிநாராயணனின் (மனித உள்ளம், ப.171) கருத்து ஏற்றுக்கொள்ளக் கூடியதாக உள்ளது.

‘பழக்கம்’ எனும் சொல்லுக்குரிய பொருண்மைகளாக அமைதியான குணம், அறிமுகம், ஒழுக்கம், பயிற்சி, வழக்கம் ஆகியவற்றைக் கழக

அகராதி (ப.655) கூறுகிறது. இச்சொல்லிற்குப் புறநானூற்றில் பழகுதல், பயிற்சியதால் என்ற வகையில் பொருள் அமைந்திருக்கிறது. இதனை,

> **“கேட்டல் மாத்திரை அல்லது, யாவதும்**
> **காண்டல் இல்லாது யாண்டு பல கழிய,**
> **வழு இன்று பழகிய கிழமையர் ஆயினும்,**
> **அரிதே, தோன்றல்!…..”** (புறம்.216;1-4)

என்ற அடிகளில் காண முடிகின்றன. இதில் வடக்கிருந்த கோப்பெருஞ்சோழன் பழகிய நட்பால் பிசிராந்தையாரின் பண்புகளைக் கூறுவதாகச் செய்தி அமைந்துள்ளது. எனவே பழக்கம் செயல்முறையின் ஆரம்ப கால நிலையைக் குறிப்பிடுவதாக உள்ளது.

**வழக்கம்**

பழகிப்போன செயல் சமூகத்தால் ஏற்றுக்கொள்ளப் பெற்று வழங்கி வருவது வழக்கம் எனப்படுகிறது. அதாவது இப்பழக்கத்தின் தொடர்ச்சியான நிலை வழக்கமாகும். வழக்கம் என்ற சொல் பழங்கால நூல்களில் சமூகம் சார்ந்த செயல்களைக் குறிப்பதாக இருந்துள்ளது. தொல்காப்பியர்,

> **“முந்நீர் வழக்கம் மகடூஉ வோடில்லை”** (தொல்.இளம்.பொருள்.அகத்.37)

என்ற நூற்பாவில், பொருள் தேடிச் செல்லும் கணவனோடு மனைவி உடன் செல்லும் வழக்கம் இல்லை எனக் குறிப்பிட்டுள்ளார். பரிபாடல் வழக்கத்தை,

> **“தோள் அணி, தோடு, சுடர் இழை, நித்திலம்;**
> **பாடுவார் பாடல், பரவல், பழிச்சுதல்,**
> **ஆடுவார் ஆடல், அமர்ந்த சீர்ப் பாணி,**
> **நல்ல கமழ் தேன் அளி வழக்கம் எல்லாமும்”** (பரி.10;115-118)

எனக் குறிப்பிட்டுள்ளது. செயல், ஒழுக்கம் ஆகியவற்றால் உருவாவது வழக்கமாகும். இதனை, ‘ஒரு இனக் குழுவிலுள்ள பலருடைய மன எழுச்சி, உணர்ச்சி, விருப்பு, வெறுப்பு ஆகியவற்றுடன் இணைந்து நிற்பதாகும். பண்டைக்காலம் முதல் இடையின்றித் தொடர்ந்து வழக்கில் வந்ததாக

இருந்தால் தான் ஒரு வழக்கம் நிலைத்து நிற்கும். சமூகத்தில் அதிகமாகப் பின்பற்றப்படும் பழக்கமான நடவடிக்கையே வழக்கமாகும்' என்று செ.பழனிச்சாமி அவர்கள் (புறநானூற்றில் தமிழர் பண்பாடு,ப.91) குறிப்பிடுகின்றார். வழக்கத்தின் இயல்பு 'ஒரு நிலையான நடவடிக்கை, வழிமுறை, சமூகப் பண்பு சரி தவறு என்ற தீர்ப்பு' ஆகிய மூன்று காரணங்களால் அமைவதாகக் கூறுகிறார் கிஸ்பர்ட்(சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள்,ப.54). இதில் முதலில் தனிமனிதனாலும், காலப்போக்கில் சமுதாயத்தில் உள்ள பல மனிதர்களாலும் அமைப்புகளாலும் உருவாகின்றன என்று குறிப்பிடப்பட்டுள்ளது தெரிகிறது.

மேலும், வழக்கம் மனிதன் வாழும் சமூதாய வாழ்க்கையில் முதற்கட்டுப்பாடாக உள்ளது. 'மக்கள் எல்லோரும் ஒன்றுபடவும் அவர்களுடைய நடவடிக்கைகளை ஒத்த தன்மைபெறச் செய்யவும் சுயநல எண்ணங்களைக் கட்டுப்படுத்தவும், அத்தகைய கட்டுப்பாட்டிற்கு ஆட்படாதவர்களை ஒதுக்கித்தள்ளவும், தேவையான திறமையும் உறுதியும் வாய்ந்த வழக்கங்களை உருவாக்கிக் கொண்ட சமூகங்கள் தாம் நிலைத்து நிற்கும் போட்டியில் வெற்றிபெற்றுப் பிழைத்து நிற்கின்றன' என்று பாஸ்சில் கிஸ்பர்ட் (சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகளில், ப.234) குறிப்பிடுகின்றார். இவருடைய கருத்துக்கேற்ப வழக்கம் தானாகச் செயல்படுதல், கட்டாயப்படுத்திச் செயல்பட வைத்தல் ஆகிய இரண்டு வெவ்வேறான பண்புகள் கொண்டுள்ளதை அறிய முடிகிறது.

வழக்கம், சமூகத்தின் குறிக்கோள், தனித்தன்மை, தேவைகள், கண்ணோட்டம் ஆகியவற்றால் தோன்றுகிறது. இதனைத் 'தனி மனிதன் ஒருவன் பழக்கத்தால் திரும்பத் திரும்பச் செய்து வரும் ஒரு செயலைப் பல

மனிதர்கள் ஒன்றாகக் கூடிச் செய்கின்ற போது அது வழக்கம் எனக் குறிக்கப்படுகிறது’ என்பர் க.த.திருநாவுக்கரசு(வள்ளுவன் கண்ட மனிதம், ப.60). இதனால் இக்கருத்துக்களைக் கொண்டு சிந்திக்கும்போது பழக்கம் என்பது ஒரு தனிமனிதனுடன் இணைந்த ஆரம்ப நிலையாகவும், வழக்கம் என்பது சமுதாயத்துடன் இணைந்த தொடர்நிலையாகவும் அமைந்திருப்பதை அறிந்து கொள்ள முடிகிறது.

மரபு

மரபு என்பது பழக்கம், வழக்கம் ஆகிய சொற்களுடன் உறவு கொண்ட மற்றொரு சொல்லாகும். இது வழக்கமாகப் பல தலைமுறைகளாய்ப் பின்பற்றப்படுவது. இதனை,

**“எப்பொருள் எச்சொலின் எவ்வாறு உயர்ந்தோர்**
**செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே”** (நன்.388)

என்ற நன்னூல் நூற்பாவினால் அறிய முடிகிறது. சமுதாயம் ஒவ்வொன்றும் அதற்குரிய தனித்துவம் கொண்ட மரபுகளை மீறாமல் கடைப்பிடிப்பவையாகத் திகழ்கின்றன. ‘மரபினை மீறுவது சட்டபடி குற்றமில்லை எனினும் சமுதாய நீதிப்படி குற்றமாகக் கருதப்படுகிறது. இதனால் மரபினை மீறுவோர் சமுதாயத்தால் தனித்து வைக்கப்படுகின்றனர். அவர்களுக்குரிய தண்டனையைச் சமூகம் என்ற கூட்டு நிறுவனம் விதிக்கின்றது’ என்று முனைவர் க.காந்தி (தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், ப.15) குறிப்பிடுகிறார்.

பழக்கம், வழக்கம், மரபு ஆகிய மூன்று சொற்களும் ஒரே இனமாக அமைந்து காணப்படுகின்றன. ஒன்றைத் தொடர்ந்து மற்றொன்று அமைவது. இவற்றை மாற்றி அமைப்பது கடினமான செயலாகும். இடம், காலம், சூழ்நிலைகளுக்கு ஏற்றாற் போல் உருவாவன. மேலும், ‘பழக்கம் தொடக்க

நிலையாகவும், வழக்கம் தொடர்நிலையாகவும், மரபு பண்பாட்டின் முதிர்நிலையாகவும் வகைப்படுத்தலாம்’ என முனைவர் க.காந்தி அவர்கள் (பக்.15-16) சுட்டியுள்ளார்.

தனிமனிதனின் தனிப்பட்ட பழக்கங்கள் காலமாற்றத்தால் சமூகம் ஏற்கும் வழக்கமாக மாற்றம் பெற்று, அடுத்த தலைமுறையும் கடைப்பிடிக்கும் முறைகளில் விளங்கப்பெற்ற நிலையான மரபாகப் போற்றப்படுகின்றன. இவ்வகையில் சங்கப் புற இலக்கியங்களில் இடம் பெறும் மகளிரின் பழக்க வழக்க நிலைகளைப் பற்றி ஆராயும் நோக்கில் இவ்வியல் அமைகிறது.

**மகளிரின் பழக்க வழக்கங்கள்**

பழங்கால மகளிரின் பழக்க வழக்கங்களைச் சங்கப்புற நூல்கள் மிகத் தெளிவாக எடுத்துக் கூறுகின்றன. அப்பழக்க வழக்கங்கள் அக்கால மகளிரின் வாழ்க்கை மேம்பாட்டை அறிய பயனுள்ளதாக அமைகின்றன. சங்கப்புற நூல்களான புறநானூறு, பதிற்றுப்பத்து, பொருநராற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மதுரைக்காஞ்சி, மலைபடுகடாம், என்ற நூல்களில் மகளிருடைய பழக்கவழக்கங்களாக கள் தயாரித்தல், வழங்குதல், பருகுதல், கைம்மை நிலை, அன்றாடச் செயல்பாடுகள் போன்றவை பதிவாகியுள்ளன.

**புறப்பாடல்களில் மகளிர் பழக்கங்கள்**

சங்க கால மக்கள் மது அருந்தும் பழக்கங்களில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்திருக்கின்றனர். மது என்றால் ‘கள்’ என்று பொருள்படும். சங்க கால மகளிர் தலைவன், அரசன், புலவர் ஆகியோர் மது அருந்துவதற்காகக் கோப்பை ஏந்திச் செல்லும் பழக்கமுடையவர்களாக இருந்துள்ளனர். இவர்கள் கள் தயாரித்தல், கள் விற்றல் போன்ற செயல்களில் ஈடுபட்டவர்களாக இருந்ததோடு, கள் பருகும் பழக்கம் கொண்டவர்களாகவும் இருந்திருக்கின்றனர்.

மது என்பதற்கு ‘கள், தேன், மகரந்தம், இனிமை, அமுதம், பால், இளவேனில், அசோகமரம், திருமாலால் கொல்லப்பட்ட ஓர் அரசன்’ என்றெல்லாம் தமிழ் திருமகள் அகராதி பொருள் கூறுகிறது. ‘கள்’ என்பதற்கு அபிதான சிந்தாமணி, ‘தென்னை முதலிய மரத்தின் பாளைகளிருந்தும், வேர் கிளைகளிலிருந்தும் ஒழுகும் நீர், தென்னங்கள், பனங்கள், ஈச்சங்கள், அத்திக்கள், வேப்பங்கள்’ என்று பொருள் கூறுகிறது.

இலக்கியங்களில் ‘கள்’ பற்றியப் பதிவுகள் இடம் பெற்றுள்ளன. உழத்தியப்பெண்கள் வயல்களில் உழைக்கும் உழவர்களுக்கு, தங்கள் கைகளால் மட்டு வார்த்துக் கொடுத்ததை,

**“வளைக்கையால் கடைசியர் மட்டு வாக்கலின்**
**திளைத்தவர் பருகிய தேறல்”**(*சீ.சி.50*)

என்ற சீவகசிந்தாமணி அடிகள் குறிப்பிடுகிறது.

மகளிர் பருகிய கள் அவர்களின் உடலில் கலந்து மயக்கம் ஏற்படுத்தியதை,

**“கற்பனை என்ன ஓடிக் கலந்தது கள்ளின் வேகம்”**(க.இ.24;526)

என்னும் கம்பராமாயணப் பாடல் அடியால் அறிய இயல்கிறது. மது அருந்தி மயங்கிய நிலையில் இருந்த அம்மகளிர் தங்களின் ஆடை, அணிகலன்கள் நழுவி விழுவதையும் அறியாமல் (கம்பராமாயணம்,பாடல்-528-529) இருந்துள்ளனர். மதுவின் மயக்கத்தால் வரம்பு மீறியப் பாடல்களை உரத்த குரலில் பாடியும், தவறான அபிநயத்துடன் ஆடியும், தன் நிலை மறந்தவர்களாகக் (கம்பராமாயணம்,பாடல்-530-533) காணப்பட்டுள்ளனர்.

கள் குடிப்பவர்களின் சொல் துன்பத்தைத் தரும் என்பதை, “கள்ளுண்பான் கூறும் கருமப் பொருளின்னா” என்று இன்னா நாற்பது(33;1)

குறிப்பிட்டுள்ளது. கள்ளுண்பவனைப் பெற்றத் தாயும் வெறுப்பாள் என்று திருவள்ளுவர் (குறள்-923) குறிப்பிட்டுள்ளார். 'கள்' அளவுக்கு அதிகமாகப் பருகப்பட்டதால் அறங்கள் தவறி தீமைகள் உருவாயின. இத்தகைய நிலைகளைக் களைய நீதி இலக்கியங்களில் அறங்கள் போதிக்கப்பட்டன.

**சங்க இலக்கியங்களில் கள் பற்றிய செய்திகள்**

வீரநிலைக்காலச் சமுதாய மக்களின் வாழ்வோடு பின்னிப் பிணைந்ததாகக் 'கள்' இருந்துள்ளது. வயலில் உழும்போது, வயதான எருதுகள் சேற்றில் செல்ல வலிமையற்றுத் தோன்றும் நிலையில், அதன் சோர்வைப் போக்கி அவற்றிற்கு ஒலி எழுப்பி உற்சாகமூட்டும் பொருட்டு உழவர்கள் கள்ளினை உண்டு ஆரவாரம் செய்கிறார்கள். இதனை,

**"அள்ளல் தங்கிய பகடுஉறு விழுமம்**
**கள் ஆர் களமர் பெயர்க்கும் ஆர்ப்பே"** (மதுரை.259-260)

இம்மதுரைக்காஞ்சி அடிகள் தெரிவிக்கின்றன. பாண்டிய நாட்டில் கள் உண்பவர்களின் உறைவிடம் நாட்டிற்குப் புறத்தேயிருந்ததை,

**"கட் கொண்டிக் குடிப்பாக்கத்து,**
**நற் கொற்கையோர் நசைப் பொருந!"** (மதுரை.137-138)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. இதனால் கள் உண்பவர்கள் எழுப்பும் ஒலியும், அவர்கள் நாட்டின் புறத்தில் தங்கியிருப்பதும் தெளிவாகிறது.

நாரைப் பிழிந்தெடுத்த கள்தெளிவைப் பண்ணிசைக்கும் யாழ்கொண்ட பாணர் உறவினர்களுக்குப் 'பிட்டங்கொற்றன்' எனும் குறுநில மன்னன் பருகக் கொடுத்ததை,

**"நார் பிழிக்கொண்ட வெங் கட் தேறல்**
**பண் அமை நல் யாழ்ப் பாண் கடும்பு அருத்தி"** (புறம்.170;12-13)

என்ற அடிகளில் உறையூர் மருத்துவன் தாமோதரனார் சுட்டியுள்ளார். இதில் பாணர் சுற்றம் என்ற போது, அதில் பாடினியும் அடங்குவள். ஆகவே,

பாடினிக்கும் கள் வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது. மலையமான் திருமுடிக்காரி, நாள்தோறும் புதிய கள் உண்டு மகிழ்ந்ததை,

**"நாள் கள் உண்டு, நாள் மகிழ் மகிழின்,**
**யார்க்கும் எளிதே"** (புறம்.123;1-2)

என்று கபிலர் புறப்பாடலில் குறிப்பிட்டுள்ளார். மதுரை நகரில் இடந்தோறும் கள்ளும், இறைச்சியும் சமைக்கப்படும் காட்சி,

**"களம் தோறும் கள் அரிப்ப**
**மரம் தோறும் மை வீழ்ப்ப**
**நிண ஊன் சுட்டு உருக்கு அமைய"** (மதுரை.753-755)

என்றவாறு வருணிக்கப்பட்டுள்ளது. இதனால் கள் இறைச்சியோடு சேர்த்துப் பருகி, உண்ணும் வழக்கம் சங்க காலத்தில் இருந்ததை அறிய முடிகிறது. கள்ளுடன் இறைச்சியைச் சேர்த்துண்டு சுவை கண்ட மக்கள், அக்கள் விற்கும் இடத்தை அறியச் செய்ய, கொடியை நட்டு விளம்பரப் படுத்தியிருக்கின்றனர். அக்கொடிகள் மகிழ்தரு கொடி, விற்றல் என்றப் பொருளில் அமைந்த நொடைக்கொடி, கள்கொடி, நெடுங்கொடி என்றப் பெயர்களில் அமைந்திருந்ததை,

**"கள்ளின் களி நவில் கொடி"** (மதுரை.372)
**"நறவு நொடைக் கொடி"** (ப.பாலை-180)
**"கட் கொடி நுடங்கும் ஆவணம்"** (பதிற்று.68;10)
**"நெடுங்கொடி நுடங்கும் நறவுமலி மறுகில்"** (அகம்.126;10)

என்கின்ற சங்கப்பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. இதனால் உடல் வருத்தம் தீரவும், மகிழ்வான நேரங்களில் கள்ளும் இறைச்சியும், கலந்து உண்ட செய்தியும், கள் விற்கப்படும் இடத்தில் கொடிகள் அசைந்தாடும் காட்சியும் அறிய முடிகிறது.

### கள் தயாரித்தல்

சங்க காலப் பெண்கள் வீடுகளில் கள் தயாரித்துள்ளனர். ஆடவர்கள், இல்லங்களில் தயாரித்த கள்ளை விரும்பிப் பருகினார்கள் என்பது, **'இல் அடு கள்'** (பெரும்.142) என வரும் அடியால் தெரிய வருகிறது.

### கள் தயாரிக்கும் முறை

குற்றாத 'கொழியல்' அரிசியைக் கழியாகக் கிளறி, கூழாக்கி, பெரிய 'பிளா' எனப்படும் ஒரு வகையானத் தட்டில் ஆர வைத்து முளை விட்ட நெல்லை இடித்து அதனுடன் சேர்த்து ஒரு சாடியில் ஊற்றி, இரண்டு நாள்களுக்கு ஊற விட்டு, பின் அதனை வேக வைத்து விரலால் அலசி 'நெய்யரி' எனப்படும் சல்லடையால் வடிகட்டி கள் தயாரித்திருக்கின்றனர். இது விரலால் நன்கு அலசிப் பிழியப்படுவதால் 'நறும்பிழி' என்று அழைக்கப்பட்டுள்ளது.

**'கள் அடு மகளிர்'** (பெரும்.339), **'அரியற் பெண்டிர்'** (அகம்.157;1) என்ற சொற்கள் சங்க கால மகளிர் கள் தயாரித்தலில் சிறந்திருந்த நிலையைச் சுட்டுவதாக உள்ளது. இவ்வாறு மகளிரால் இல்லங்களில் தயாரிக்கப்பட்ட கள் சங்க காலத்தில் வீர மறவனின் நினைவாக நடப்பட்ட நடுகல்லுக்குப் படைத்து வழிபட்டதை,

> **"இல்அடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்**
> **புடைநடு கல்லின் நாட்பலி ஊட்டி"** (புறம்.329;1-2)

இப்புறநானூற்றுப் பாடல் அடிகள் தெரிவிக்கின்றன. கள் சமைக்கின்ற மகளிர் கிண்ணங்களைக் கழுவியதனால் வடிந்த நீர் குழம்பிச் சேறானதை,

> **"கள்அடு மகளிர் வள்ளம் நுடக்கிய**
> **வார்ந்து உகு சில்நீர் வழிந்த குழம்பின்"** (பெரும்.339-340)

என்ற அடிகளின் மூலம் அறிய முடிகிறது. இதனால் மகளிர் அதிகமான அளவில் கள் சமைத்துள்ளனர் என்பது புலனாகிறது. வீரன் ஒருவன், மகளிர் தங்கள் இல்லத்தில் சமைத்த கள்ளைப் பருகியதற்கான பழைய கடனைத் தீர்த்தான் என்பதை,

**"நாள்ஆ தந்து, நறவுநொடை தொலைச்சி,**
**இல்அடு கள்இன் தோப்பி பருகி"** (பெரும் 141-142)

என்னும் அடிகள் தெளிவுபடுத்துகின்றன. இதனால் இல்லத்தில் சமைத்த கள் விருந்தினர்களுக்கு மட்டுமல்லாது, விற்பனைக்காகவும் இருந்துள்ளது என்பது புலனாகிறது.

கள் நிறைந்த குடம் 'தசும்பு' என்றழைக்கப்பட்டது. தசும்பு என்பதற்கு குடம், கொப்பரி, பொன், விமானகலசம் என்று கழக அகராதி (ப.510) பொருள் கூறுகிறது. இக்கள் குடம் உறி என்றழைக்கப்படும் தொங்கும் நிலையிலமைந்த, ஏறா ஏணியில் வைக்கப்பட்டதைப் பதிற்றுப்பத்து(43;33) குறிப்பிடுகிறது. குடத்தில் வைத்த கள்ளைப் பருகி வீரர்கள் வெற்றியைக் கொண்டாடி மகிழ்ந்திருந்தனர். அக்குடத்தின் மேல் மாலையைக் கட்டி வைத்து, சாந்தினைப் பூசிவைக்கும் மரபு இருந்திருக்கிறது. இம்மரபை,

**"நிறைந்து நெடிது இராத் தசும்பின்"** (பதிற்று.43;34)
**"சாந்து புறத்து எறிந்த தசும்பு துளங்கு இருக்கை"** (பதிற்று.42;11)
**"துளங்கு தசும்பு வாக்கிய பசும் பொதித் தேறல்"** (மலை.463)

என்ற அடிகள் குறிப்பிட்டுள்ளன. மூங்கில் குழாய்க்குள் நிரப்பப் பெற்ற முற்றிய தேனால் செய்யப்பட்ட கள்ளை நிரம்பப் பருகி மலைவாழ் மக்கள் மகிழ்ந்திருந்த செய்தியை,

**"வேய்ப் பெயல் விளையுள் தேக்கட் தேறல்**
**குறைவு இன்று பருகி, நறவு மகிழ்ந்து"** (மலை.171-172)
**"திருந்து அமை விளைந்த தேக்கள் தேறல்"** (மலை.522)

எனும் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. இதனால் மகளிர் கள் தயாரித்த செயலையும், கள் சேமித்து வைத்த செய்தியையும் அறிய முடிகிறது.

**கள் வழங்குதல்**

மகளிர் அரண்மனைகளில் மன்னனுக்கும், வரும் விருந்தினருக்கும் கள் வழங்கியுள்ளனர். அவ்வாறு வழங்கும் போது மகளிர் அணிகலன்களை அணிந்து, பொன்னால் செய்த கிண்ணங்களில் கள் வழங்கியுள்ளார்கள். கார்மேகம் போன்ற கருங்கூந்தல் கொண்ட நல்லணிகலன்களை அணிந்த பெரிய மாளிகையில் உலாவரும் மகளிர் புன்னகையோடு பொற்கிண்ணம் நிறைய கள்ளினை வார்த்துப் பருக கொடுத்திருக்கின்றனர். இதனை,

> **“மழை என மருளும் மகிழ்செய் மாடத்து,**
> **இழைஅணி வனப்பின் இன்நகை மகளிர்,**
> **போக்குஇல் பொலங்கலம் நிறைய, பல்கால்,**
> **வாக்குபு தரத்தர, வருத்தம் வீட”** (பொரு.84-87)

என்ற அடிகளில் முடத்தாமக் கண்ணியார் பாடியுள்ளார். இதைப்போல பொன் வட்டில்களில், மணம் நாறும் தேறலை, மன்னனைச் சந்திக்க வரும் விருந்தினர்களுக்கு அளித்திருக்கின்றனர். தேறல் என்பதற்குத் தெளிவு, தெளிந்த கள் என்பது பொருள். இதனை,

> **“இலங்கு இழை மகளிர் பொலங்கலத்து ஏந்திய**
> **மணம் கமழ் தேறல் மடுப்ப நாளும்”** (மதுரை.777-778)

இம்மதுரைக்காஞ்சி அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. மேலும், குளிர்ச்சி பொருந்திய, மிக்க மணமுடைய மதுவினை வளையணிந்த மகளிர், பொற்கலத்தில் ஏந்தி ஊட்டுவதை,

> **“ஒண் தொடி மகளிர் பொலங்கலத்து ஏந்திய**
> **தண் கமழ் தேறல் மடுப்ப”** (புறம்.24;31-32)

என்ற புறப்பாடலில் மாங்குடிக் கிழார் குறிப்பிடுகிறார். யவனர்களால் குப்பிகளில் கொண்டுவரப்பட்ட மணம் நாறும் குளிர்ந்த மதுவினைப்

பொன்னாலாகிய கிண்ணத்தில் ஏந்தி, ஒளி பொருந்திய மகளிர் பாண்டியன் இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நன்மாறன் என்ற மன்னனுக்குத் தருவதனை,

**"யவனர் நன் கலம் தந்த தண் கமழ் தேறல்**
**பொன் செய் புனை கலத்து ஏந்தி, நாளும்**
**ஒண் தொடி மகளிர் மடுப்ப"** (புறம்.56;18-20)

என்கின்ற அடிகளில் மதுரைக் கணக்காயனார் மகன் நக்கீரனார் புலப்படுத்தியுள்ளார்.

பசிய இழையணிந்த மகளிர் பன்னாடையால் வடிக்கப்பட்ட கள்ளின் தெளிவை, பொற்கிண்ணங்களில் எடுத்துக் கொடுக்க, மன்னன் உண்டு மகிழ்ந்ததை,

**"பாசிழை மகளிர் பொலங்கலத்து ஏந்திய**
**நார்அரி தேறல் மாந்தி"** (புறம்.367;6-7)

எனும் அடிகள் தெரிவிக்கின்றன. இதன் வழியாக அரசர், புலவர், விருந்தினர் என அனைவருக்கும் மகளிர் 'மது' வழங்கியுள்ளனர் என்பதும், பொன்னால் செய்த கலத்தில் 'கள்' வழங்கப்பட்டுள்ளன என்பதும் அறிய இயல்கிறது.

**கள் பருகுதல்**

சங்க காலத்து மகளிர் சிலர் கள்ளுண்ணும் பழக்கம் உடையவர்களாக இருந்துள்ளனர். ஔவையார் அதியமானைப் பற்றிப் பாடும்போது,

**"சிறிய கட் பெறினே, எமக்கு ஈயும்; மன்னே!**
**பெறிய கட் பெறினே,**
**யாம் பாட, தான் மகிழ்ந்து உண்ணும்; மன்னே!"** (புறம்.235;1-3)

எனப் பாடியுள்ளார். இதில் அதியன் குறைந்த அளவு கள் கிடைக்கும் பொழுது, அதைப் புலவர்களுக்கு மட்டும் (ஔவையாருக்கு) தருவான். அதிகளவு கள் கிடைக்கும்போது, அதைப் புலவர்களுக்குத் தந்து எஞ்சியதை அவன் உண்பான் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது. இது புலவரும்,

புரவலரும் பால் வேறுபாடின்றிக் கள் பருகி மகிழ்ந்த காலத்தைக் காட்டுகிறது. இதைப்போல் பெருஞ்சித்திரனார் வெளிமானைக் 'கள் காமுறுநன்'(புறம்.238;5) எனப் பாடுவது அவர்களுக்கிடையில் வேறுபாடில்லாத நெருக்கம் இருந்த தொடக்கக் காலச் சமுதாயத்தைக் காட்டுவதாக உள்ளது.

மதுரைக் காஞ்சிப் பாடல் மின்னல் நுடங்குவது போன்ற வடிவினையுடைய மகளிர், மது உண்டு, கணவரைப் புலந்து பேரணிகலன்களை அறுத்து எறிவதால், பருத்த வடமாக விளங்கிய முத்து மாலைகளின் முத்துகள் கீழே சிதறி விழுந்திருந்த காட்சியை,

> **"மின்னு நிமிர்ந்தனையர் ஆகி, நறவு மகிழ்ந்து,**
> **மாண் இழை மகளிர், புலந்தனர், பரிந்த**
> **பரூஉக் காழ் ஆரம் சொரிந்த முத்தமொடு"** (மதுரை.679-681)

இவ்வடிகள் தெளிவுப்படுத்துகின்றன. இதனால் மகிழ்ச்சி மற்றும் சினம் கொண்ட நேரங்களில் மகளிர் மது பருகிய பழக்கம் உடையவர்கள் என்பது தெரிய வருகிறது.

இதனால் மது என்பதற்கான பொருள் விளக்கமும், இலக்கியங்களில் மக்கள் 'கள்' பயன்படுத்தப்பட்ட நிலை மற்றும் விற்கப்படும் இடங்கள் பற்றியும் அறியப்பட்டது. மகளிர் இல்லங்களில் கள் தயாரித்தமையும், அவற்றை விலைக்கு விற்றும், விருந்தினர்களுக்கு வழங்கியும், நடுகல்லிற்குப் பலியிட்டும் உள்ளனர் என்பது பெறப்பட்டது. பல அணிகலன்களையணிந்த மகளிர் பொன்னால் செய்த வட்டில்களில் மன்னர், விருந்தினர், பாணர் ஆகியோருக்குக் கள் வழங்கியமையும், மகிழ்ச்சி மற்றும் சினம் கொண்ட நேரங்களில் கள்ளைப் பருகியிருந்தமையும் புலனாகிறது. எனவே கள் சமைத்தல், வழங்குதல், விற்றல், பருகுதல் போன்ற பழக்க வழக்கச் செயல்பாடுகளில் மகளிர் ஈடுபட்டுள்ளமை புலப்படுகிறது.

**கைம்மை நிலை**

'கைம்மை என்றால் கணவனை இழந்த நிலைமை, கைம்பெண், சிறுமை, அறியாமை என்றும், 'கைம்பெண்' என்றால் கணவனை இழந்தவள்' என்றும் தமிழகராதி விளக்கம் (கழகத் தமிழகராதி,ப.389) தருகிறது. இக்கைம்பெண்கள் தற்காலங்களில் 'விதவை' என்று குறிக்கப்படுகிறார்கள். பழங்கால நூல்களில் இச்சொல் காணப்படவில்லை. விதவை என்ற சொல் 'வைதவ்யம்' என்னும் வடசொல்லால் குறிக்கப்பட்டது. இதனடிப்படையில் 'விதவை' என்ற சொல் காலப்போக்கில் தோன்றியுள்ளது என்பது பெறப்படுகிறது.

> **"காதலி இழந்த தபுதார நிலையும்**
> **காதல னிழந்த தாபத நிலையும்"**(தொல்.பொருள்.77)

என்பது தொல்காப்பிய நூற்பா ஆகும். இதில் தபுதார நிலை என்பது மனைவி இழந்த கணவன் நிலையாகவும், தாபத நிலை என்பது கணவனை இழந்த மனைவியின் நிலையாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. தொல்காப்பியம் ஆண், பெண் ஆகிய இருவரின் நிலையையும் குறிப்பிட்டுள்ளது. சங்க இலக்கியம் கணவனை இழந்த கைம்பெண்ணின் நிலைப்பாடுகள் குறித்து மட்டும் குறிப்பிட்டுள்ளது. கணவனை இழந்த மகளிர் மூவகையான நிலைகளில் சமுதாய ஒழுக்கங்களைக் கடைப்பிடித்திருக்கின்றனர். செயல் அடிப்படையில் அவர்கள் தலை, இடை, கடை (முனைவர் கா.சிவகாமி, சங்க இலக்கியக் கைம்மை மகளிரும் சமூகவியலார் நோக்கும், ப.11) என மூன்று நிலைக் கற்பினராக வாழ்ந்துள்ளமைக்கான சான்றுகள் உள்ளன.

**தலை நிலை**

கணவன் இறந்தான் என்பதை அறிந்ததும் உடனுயிர் நீக்கும் மனைவி தலைக் கற்புடையவர். இதனை, 'பாண்டியன் நெடுஞ்செழியன் கோவலனைக்

கொன்றது தவறென்றுணர்ந்து உயிர் துறந்ததை, அறிந்ததும் அரியணை அருகில் வீற்றிருந்த பெருங்கோப்பெண்டு தானும் உயிர்விடுகிறாள்’ எனும் இளங்கோவடிகளின் கூற்றால் அறிய முடிகிறது. இதனை,

**“மன்னவன் செல்வழிச் செல்கயான் எனத்**
**தன்னுயிர் கொண்டு அவன் உயிர்தேடினள் போல்**
**பெருங்கோப் பெண்டும் ஒருங்குடன் மாய்ந்தனள்”** (சிலம்பு.25;84-86)

என்னும் அடிகள் குறிப்பிடுகின்றன.

தம் கணவன்மீது வைத்திருக்கும் அன்பு மிகுதியினால், கணவன் இறப்பை ஏற்றுக்கொள்ள முடியாத நிலையில் மகளிர் உடன் உயிர் நீத்துள்ளது பற்றிச் சங்கப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. போரின் காரணமாகப் போர்க்களத்தில் இறந்த வீரர்களின் பெண்டிர் குளிர்ந்த நீரில் மூழ்காது, பசிய கீரைகளை உண்ணாது  கணவராகிய வீரர்களின் மார்பினைச் சேர்ந்து உயிர் நீத்தவராய்க் களத்தில் கிடந்தனர் என்பது,

**“உடன் வீழ்ந்தன்றால், அமரே; பெண்டிரும்**
**பாசடகு மிசையார், பனிநீர் மூழ்கார்,**
**மார்பகம் பொருந்தி ஆங்கு அமைந்தனரே”** (புறம்.62;13-15)

இப்பாடல் அடிகளின் வழி தெளிவாகிறது. ஆய் அண்டிரன் இறந்தபோது அவனது உரிமை மனைவியும் உடன் உயிர் நீத்ததை,

**“கோடு ஏந்து அல்குல், குறுந்தொடி மகளிரொடு,**
**காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப,**
**மேலோர் உலகம் எய்தினன்”** (புறம்.240; 4-6)

என்ற அடிகள் காட்டுகின்றன. இதனால் மகளிர் கைம்மை நோன்பு மேற்கொள்ளாது கணவருடன் உயிர் நீத்த செய்தி பெறப்படுகிறது.

**இடைநிலை**

கணவன் இறந்த துன்பம் தாங்காமல் தீப்பாய்ந்து உயிர் நீக்கும் மனைவி, இடைக்கற்பினர் ஆவர். கணவரோடு எரிமூழ்கி இறப்பவளை 'நல்லோள்' எனத் தொல்காப்பியம் குறிப்பிட்டுள்ளது. இதனை,

> **"நல்லோள் கணவனொடு நனியழல் புகீஇச்**
> **சொல்லிடை இட்ட மாலை நிலையும்"** (தொல்.இளம்.புற.19;30-31)

என்ற நூற்பாவினால் அறிய முடிகிறது. தொல்காப்பியக் காலந்தொட்டு, பெண் தீப்பாயும் வழக்கம் இருந்துள்ளது.

மதுரையை ஆண்ட மன்னன் பூதப்பாண்டியன் மனைவியாகிய பெருங்கோப்பெண்டு, தன் கணவன் இறந்து விட்டமையால் மீளாத் துன்பமடைந்து தீப்பாய்ந்து உயிரிழக்க முற்படுகிறாள். அப்போது அங்கிருந்த சான்றோர்கள் அவளுக்கு ஆறுதல் கூறித் தீப்புக வேண்டாம் எனத் தடுக்கின்றனர். அவள் அச்சான்றோர்களை நோக்கி, 'உன் தலைவனோடு நீயும் இறப்பாயாக என்று கூறாமல் அதனைத் தவிர்க்க' என்று கூறும் சான்றோர்களே கையால் பிழிந்த நீர்ச்சோற்றுடன் புளியோடு வேகவைத்த வேளைக் கீரையை உணவாக உட்கொண்டு பாயின்றி வெறுந்தரையில் படுத்துக் கைம்மை நோன்பு நோற்கும் பெண் வகையை விரும்பவில்லை, என்று கூறி, தீப்பாய்ந்து உயிர் துறக்க முற்படுகிறாள். இச்செய்தியை,

> **"பல்சான்றீரே! பல்சான்றீரே!**
> **.... .... .... ....**
> **பெருந் தோட் கணவன் மாய்ந்தென,..."** (புறம்.246)

இப்புறநானூற்றுப் பாடல் வழி தெரிந்து கொள்ள முடிகிறது. இப்பாடல் 'ஆனந்தப்பையுள்' என்ற துறையில் அமைந்துள்ளது. ஆனந்தப்பையுள் என்றால் கணவன் இறந்த பிறகு அதனால் துன்பமுறுவதாகும். கைம்மையினும் தீப்பாய்ந்து இறப்பது மேலானது என்ற எண்ணங்கொண்ட

சங்கப் புலவர்களின் பாடல்கள் இத்துறையில் பாடப்படும். பெருங்கோப்பெண்டுவைப் போல் சாதுவன் மனைவி ஆதிரை என்பாள் தன் கணவன் கடலில் மூழ்கி இறந்துவிட்டான், என்பதைக் கேள்வியுற்றுத் தீப்பாய முயன்றனளாயினும் அத்தீ பொய்கை போலக் குளிர்ந்தது. காரணம் அவள் கணவன் இறக்கவில்லை. இதனை,

> **“ஆதிரை நல்லாள் ஆங்குஅது தான்கேட்டு**
> **.... .... .... ....**
> **ஊர்திரை கொண்டாங்கு உய்ப்பப் போகி”** (மணி.16;22-38)

எனும் மணிமேகலை அடிகள் உணர்த்துகின்றன.

சங்ககால மகளிர், போரில் கணவன் புறங்கொண்டு ஓடினான் என்ற செய்தி கேட்டு வெட்கி உயிர் நீத்துள்ளனர். ஒளியிழந்த கண்களையுடைய பகைவர்களைப் போர்க்களம் விட்டு ஓடச் செய்தான் செழியன். அப்பகைவர்களைப் போர்க்களத்தில் கொல்லாது, அவர்களின் மனைவியர் நாணத்தினால் இறந்து போகுமாறு புறம் ஓடச்செய்தான். இதனை,

> **“புல்லென் கண்ணர்; புறத்தில் பெயர,**
> **ஈண்டு அவர் அடுதலும் ஒல்லான், ஆண்டு அவர்**
> **மாண் இழை மகளிர் நாணினர் கழிய”** (புறம்.78;8-10)

என்ற பாடல் அடிகளால் அறிய முடிகின்றன. இதனால் சங்க காலத்தில் தன் கணவன் வீரனாக இருக்க வேண்டும் என்று தலைவி எண்ணியுள்ள செய்தி பெறப்படுகிறது. ஒரு பெண்ணுக்குக் கணவன்தான் சிறப்புத் தருகிறான். அவனோடு சேர்ந்து வாழும் வாழ்க்கையில் பெண்மை போற்றப்படுகிறது. கணவன் இல்லாத பெண், சமூக மதிப்பை இழக்கின்றாள். கைம்பெண் என்று சமூகம் அவளைப் புறக்கணிக்கின்றது.

> **“கோரிக்கை அற்றுக் கிடக்குதண்ணே இங்கு**
> **வேரிற் பழுத்த பலா”** (பெண்மை,கைம்மைப்பழி-30)

எனும் பாரதிதாசனின் கவிதை அடிகள் இக்கருத்தை விளக்கும் சான்றாக அமைகின்றது. கைம்பெண்களுக்கெனத் தனி உடை வகைகள் இருந்திருக்கின்றன. 'மேலை நாடுகளில் கறுப்பு உடையும், இந்தியாவில் வெள்ளைச் சேலையும் பெண்களின் கைம்மை நிலையை வெளிப்படுத்துவதாக உள்ளது. முற்காலத்தில் சைனாவில் சிவப்பு ஆடைகள் சுமங்கலிகளுக்கும் வெள்ளை ஆடைகள் கைம்பெண்களுக்கும் உரித்தாக இருந்துள்ளன' என்று வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி,4பக்.796) குறிப்பிடுகின்றது. கைம்மையின் துன்பத்தினை,

> **"தன் கணவன் செத்துவிட்டான் மாது**
> **தலையில் கைம்மை என ஓர்- பெருந்**
> **துன்பச் சுமைதனைத் தூக்க வைத்தார் பின்பு**
> **துணைதேட வேண்டாம் என்றார்"** (பெண்மை,கைம்மைப்பழி-30)

என்ற பாடலில் பாரதிதாசன் கூறியுள்ளார். கணவன் இறந்தால் மகளிர் உற்ற நல்ல ஒரு துணையை இழந்துவிடுகிறார்கள் என்பதை,

> **"மேலோர் உலகம் எய்தினன்; ஆகலின்,**
> **ஒண்தொடி மகளிர்க்கு உறுதுணை ஆகி,**
> **தன் துணை ஆயம் மறந்தனன் கொல்லோ"** (புறம்.229;22-24)

என்னும் அடிகளில் கூடலூர்கிழார் குறிப்பிட்டுள்ளார். இதனால் இலக்கியங்களில் கைம்பெண் குறித்து குறிப்பிட்டுள்ள செய்திகளை அறிய முடிகின்றன.

**கடைநிலை**

தலைக்கற்பு, இடைக்கற்பு ஆகிய இரண்டும் இன்றிக், கைம்மை நோன்பு நோற்று, உடல் வருத்தி, உயிர் வாழ்ந்து, பின் இறக்கும் மகளிர் கடைக் கற்புடையவர் ஆவர். கைம்மை நோன்பு என்பது கீழ்க்காணும் ஐந்து நிலைகளில் அமைந்து காணப்படுகின்றன.

1) அணிகலன்களை நீக்குதல்

2) கூந்தல் கொய்தல்

3) பாயின்றிப் படுத்தல்

4) கட்டுப்பாடான உணவு உண்ணுதல்

5) குறிப்பிட்ட தொழிலை மேற்கொள்ளல்

**அணிகலன்களை நீக்கி, கூந்தல் கொய்தல்**

கைம்மை நோன்புடைய பெண்டிர், தங்களது அணிகலன்களை நீக்கி வாழும் தோற்றத்தினராய்த் திகழ்ந்துள்ளனர். வெளிமான் உயிர் நீத்தபோது, முறையாக அறைந்து அழும் மகளிரின் வளைகள் வாழைப்பூப் போல சிதறி விழுவதை,

> **"அறன் இல் கூற்றம் திறன் இன்று துணிய,**
> **ஊழின் உருப்ப எருக்கிய மகளிர்**
> **வாழைப் பூவின் வளை முறி சிதற"** (புறம்.237;9-11)

என்ற அடிகள் குறிப்பிடுகிறது. போரில் வீரன் ஒருவன் இறந்து போக அவனது மனைவி, பசிய மூங்கில் பட்டை நீக்கினாற் போன்று, வெளுத்திருக்கும் வளையல் இல்லாத வெறுங்கையைத் தலைமேல் வைத்துக்கொண்டு, வீரன் இறந்த செய்தியை அவனது சுற்றத்தார்க்குத் தெரிவிப்பதால் ஏற்படும் துன்பத்தை எண்ணிப் புலம்புகிறாள். இதனை,

> **"பைங் கழை பொதி களைந்தன்ன விளர்ப்பின்,**
> **வளைஇல், வறுங் கை ஓச்சி"** (புறம்.253;4-6)

இப்பாடல் அடிகள் காட்டுகின்றன. கணவன் இல்லாமையால் மழிக்கப்பட்ட மொட்டைத் தலையுடன் கைம்மை நோன்பிருக்கும் அவனின் மனைவி, அணிகலன்கள் நீக்கப்பட்டிருப்பதை,

> **"கொய்ம் மழித் தலையொடு கைம்மையுறக் கலங்கிய**
> **கழி கல மகடூஉப் போலப்**
> **புல்லென்றனையால், பல் அணி இழந்தே"** (புறம்.261;17-19)

**“கழி கல மகளிர் போல”**(புறம்.280;14)

என்ற அடிகள் மூலம் அறிய முடிகிறது. மேலும், கரிகாற் பெருவளத்தான் இறந்து போனதால் அவனுடைய உரிமை மகளிர் அணிகலன்கள் யாவற்றையும் நீக்கினர் என்பதை,

**“கொய்து கட்டு அழித்த வேங்கையின்,**
**மெல் இயல் மகளிரும் இழை களைந்தனரே”**(புறம்.224;16-17)

என்கின்ற அடிகளில் கருங்குழல் ஆதனார் பாடியுள்ளார். இதைப் போல் உரிமை மகளிர் தொடி நீக்கிப் பொழிவிழந்ததை, “தொடி கழி மகளிரின் தொல்கவின் வாடி” என்ற அடியும்(புறம்.238;6), கூந்தல் கொய்து, வளையல் நீக்கியமையை, “கூந்தல் கொய்து, குறுந்தொடி நீக்கி” என்ற இவ்வடியும் (புறம்.250;4) தெளிவுப்படுத்துகின்றன. கணவன் போரில் இறந்துபோனதால், பொலிந்த கண்ணீருடன் மார்பகம் வருந்துமாறு அடித்துக்கொண்டும், அளவற்ற அழுகையால் ஆரவாரித்தும், அறிவு மயங்கியும், ஒள்ளிய நெற்றியையுடைய மகளிர் கைம்மையை மேற்கொள்ள வேண்டி, ஆற்றின் கருமணலையொத்ததும், குவிந்ததும், மெல்லியதுமான கரிய மயிரினைக் களைந்தார்கள் என்பது,

**“ஒள் நுதல் மகளிர் கைம்மை கூர,**
**அவிர் அறல் கடுக்கும் அம் மென்**
**குவை இருங் கூந்தல் கொய்தல் கண்டே”**(புறம்.25;10-14)

என்ற அடிகள் மூலம் அறிய முடிகிறது. இவ்வாறு கூந்தல் கொய்யும் மரபு, இன்று படகர் இன மக்களிடம் காணப்படுகின்றது. இவ்வினத்தைச் சார்ந்த ஆண்கள் இறக்கும்போது அவன் மனைவி பிணத்தருகே நின்று தன் காதணியிலிருந்து சிறிது கம்பியையும் காதோலையிலிருந்து சிறிது ஓலைச் சுருளையும், ஒருகொத்துத் தலைமுடியையும் வெட்டி, தன் கணவனின் ஆடையில் வைத்துக்கட்டுவாள். இது சங்க காலக் கூந்தல் நீக்கத்தின்

எச்சமாகக் காணப்படுகிறது. ‘கைம்மை நோன்பை மேற்கொள்ளும் பெண்டிர் மயிர் மழிக்கும் வழக்கம் பண்டை நாளில் உலகம் முழுவதும் இருந்ததாகத் தெரிய வருகின்றது’ என்று ‘சங்க இலக்கிய ஆய்வுச் சிந்தனைகள்’ என்ற நூலில்(ப.14) குறிப்பிடப்பட்டுள்ளது.

இதனால் அணிகலன் களைதல், கூந்தல் கொய்தல் போன்றவை தங்கள் அழகைக் குறைப்பதற்காக ஏற்படுத்திக் கொண்ட பழக்கம் என்பது அறியப்படுகிறது.

**பாயின்றிப் படுத்தல்**

கைம்மை மகளிர் பருக்கைக் கற்கள் அமைந்த படுக்கையின்மீது பாயுமின்றிக் கிடந்து வருந்தும் நிலை குறித்துப் பூதப்பாண்டியன் மனைவி பெருங்கோப்பெண்டு கூற்றில் பதிவாகியுள்ளது. இப்பதிவை,

> **“பரற் பெய் பள்ளிப் பாய் இன்று வதியும்**
> **உயவல் பெண்டிரேம் அல்லேம் மாதோ”** (புறம்.246;9-10)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றது. மேலும், அழும்பின் கொடிகளினாலும் படுக்கை அமைத்த செய்தியை,

> **“படிவ மகளிர் கொடி கொய்து அழித்த**
> **பொம்மல் அடும்பின் வெண் மணல் ஒரு சிறை”** (நற்.272;2-3)

இந்நற்றிணைப் பாடல் அடிகள் வெளிப்படுத்துகின்றன. இதனால் கணவன் இறந்த பின் சுகமான உறக்கத்தைத் தவிர்க்கும் பொருட்டு இவ்வாறான முறையைக் கடைப்பிடித்துள்ளனர் என்பது தெரிகிறது.

**கட்டுப்பாடான உணவு உண்ணுதல்**

கைம்மை மகளிரின் கட்டுப்பாடான உணவு என்பது நேரம், உண்ணும் உணவு ஆகியவற்றால் உய்த்துணரப்படுகிறது. கணவன் இறந்தபிறகு, உணவு உண்ணும் நேரம் கடந்து உண்பதும், உண்ணும் பொழுதும் அல்லியிடத்து உண்டான புல்லரிசியை உண்பதுமான செய்திகளை,

**“இனியே பெரு வளக் கொழுநன் மாய்ந்தென,**
**பொழுது மறுத்து,**
**இன்னா வைகல் உண்ணும்**
**அல்லிப் படுஉம் புல் ஆயினவே”** (புறம்.248;3-5)
**“சிறு வெள் ஆம்பல் அல்லி உண்ணும்”** (புறம்.280;13)
**“அல்லி உணவின் மனைவியொடு”** (புறம்.250;5)

என்கின்ற அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. மேலும், நல்ல மணம் மிகுந்த நெய் சேர்க்கப்படாது கீரை இடையிடையே சேர்த்து, வெண்மையான எள்ளுத்துவையலையும், கையால் பிழிந்து எடுக்கப்பட்ட நீர்ச் சோற்றுடன், புளி கொண்டு சமைத்த வேளைக் கீரையையும், கைம்மை மகளிர் உணவாகக் கொண்டு வாழ்ந்துள்ளனர். இதனை,

**“காழ் போல் நல் விளர் நறு நெய் தீண்டாது,**
**அடை இடைக் கிடந்த கை பிழி பண்டம்,**
**வெள் எட் சாந்தொடு, புளிப் பெய்து அட்ட**
**வேளை வெந்தை, வல்சி ஆக”** (புறம்.246;5-8)

என்ற பாடல் அடிகளில் காண முடிகின்றன. இவ்வாறான உணவு முறை, உடல் காக்கும் நிலையினதாக இல்லை. உயிர்காக்கும் நிலையினதாக மட்டும் அமைகின்றது. உள்ளக் கிளர்ச்சிக்கு உணவு இடங்கொடுக்கக் கூடாது, என்ற நிலையில் சுவையற்ற உணவை இம்மகளிர் நேரம் கடந்து உண்டுள்ளனர் என்பது இதன் வழியாகப் பெறப்படுகிறது.

**கைம்மை மகளிரின் தொழில்**

கைம்மை மகளிரின் தொழிலாக நூல் நூற்றல் குறிப்பிடப்படுகிறது. இதனை, அவர்களின் வாழ்க்கைக்குத் தேவையான பொருள் ஈட்டும் தொழிலாகக் கருத முடிகிறது. கைம்மை மகளிர் வெளிப்புறங்களுக்குச் செல்லாமல் வீட்டில் இருந்தவாறே செய்யும் பணியாக இத்தொழில் உள்ளது. இவர்களைப் ‘பருத்திப் பெண்டிர்’ எனத் தொழில் அடிப்படையில் புறநானூறு சுட்டியுள்ளதை,

**“பருத்திப் பெண்டின் பனுவல் அன்ன”**(புறம்.125;1)
**“பருத்திப் பெண்டின் சிறுதீ விளக்கத்து”**(புறம்.326;5)

இவ்வடிகள் மூலம் அறிய முடிகின்றன. இன்றைய நடைமுறையில் சேலம் மாவட்டத்தில் சில இனத்தவரிடம் காணப்படும் ஒரு பழக்கமாக, கைம்பெண்டிர் நூல் நூற்கும் தொழில் உள்ளது. இது அன்றைய பழக்கத்தின் எச்சம் என முடிவு செய்ய வாய்ப்பாக அமைகின்றது. இவ்வாறாக, கடைக்கற்பினர் ஐந்து நிலைகளில் கைம்மை நோன்பு மேற்கொண்டு தங்களை ஒரு துன்பமயமான வாழ்வில் ஆட்படுத்திக்கொண்டு வாழ்ந்துள்ளனர் என்பது இப்புறப்பாடல்கள் வழியாகத் தெளிவாகிறது. இம்மூவகை மகளிரையும் பற்றி மணிமேகலை,

**“காதலர் இறப்பின் கனைஎரி பொத்தி**
**ஊதுலைக் குருகின் உயிர்த்து அகத் தடங்காது**
**இன்னுயிர் ஈவர்; ஈயா ராயின்**
**நன்னீர்ப் பொய்கையின் நளிஎரி புகுவர்;**
**நளிஎரி புகாஅ ராயின் அன்பரோடு**
**உடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடன் படுவர்**
**பத்தினிப் பெண்டிர்”**(மணி.2;42-48)

என்று தெளிவுபடுத்தியுள்ளது. இதனால் கற்புடை மகளிர் கணவரை இழந்த நிலையில் தலை, இடை, கடை என மூவகையினராகச் சமூகத்தில் வாழ்ந்ததைச் சங்க இலக்கியங்கள் வழி அறிய முடிகிறது.

சங்க இலக்கியத்தில் கைம்மை என்ற கோட்பாடு பெண்ணுக்கு மட்டுமே விதிக்கப்பட்டிருக்கிறது. கைம்மை மகளிர் ‘ஆளில் பெண்டிர்’, ‘தொடிகல மகளிர்’, ‘கழிகல மகளிர்’, ‘பருத்திப் பெண்டிர்’ என்று சுட்டப்பட்டிருந்தது இதனால் புலப்படுகிறது. கைம்மையினும் உடன் உயிர் மாய்தல், உடன்கட்டை ஏறுதல், வெட்கி உயிர் நீத்தல் போன்றவற்றை மகளிர் கடைப்பிடித்திருந்த செய்தி பெறப்படுகிறது. கணவன் இறந்த பிறகு அணிகலன்களை நீக்கிக் கூந்தல் கொய்தல், உணவுக்கட்டுப்பாடு, நேரம்

கடந்த உணவு, பாயின்றிப் படுத்தல் போன்ற கைம்மை நோன்புகளை மேற்கொண்டு வாழ்ந்திருக்கின்றனர். கைம்பெண்கள் சமூகத்தால் தாழ்த்தப்பட்டவர்களாகவோ, தரக்குறைவாகவோ நடத்தப்பட்டதாகச் சங்க இலக்கியங்களில் பதிவாகவில்லை. அதே நிலையில் சமூகத்தின் முக்கிய நிகழ்ச்சிகளான திருமணம், குடும்ப நிகழ்ச்சிகள் போன்றவற்றில் பங்கு பெற்றதாகவும் குறிப்பிடவில்லை என்பது புலனாகிறது.

**கலந்தொடா மகளிர்**

பெண்கள் பூப்புற்றிருக்கும் நாட்களில் பலவீனமானவர்களாகவும், தூய்மையற்றவர்களாகவும் இருப்பர். இவர்கள் இந்நாள்களில் கலம் முதலிய எந்தப் பொருள்களையும் தொட மாட்டார்கள். இக்காரணத்தினால் சங்க காலத்தில் இவர்கள் ‘கலந்தொடா மகளிர்’ என்று அழைக்கப்பட்டனர். தற்காலத்திலும் அவர்களை மூன்று நாள்களுக்கு ஒரு தனியிடத்தில் வைத்திருப்பது தமிழ்நாட்டில் சில பகுதி வாழ் மக்களின் வழக்கமாக உள்ளது.

பெண்கள் மாதவிடாய் நேரங்களில் வீட்டின் புறத்தில் இருப்பது, எக்கலங்களையும் தொடாமல் இருப்பது அக்காலக் குடும்பப் பண்பாக இருந்திருக்கிறது. இதனை, ‘மாத விலக்குக் கொண்ட மகள் ஒருத்தி இனிய பழந்தரும் மரத்தின் அடியில் போய் நின்றால் அம்மரத்தின் பழம் கசப்பாக மாறிவிடும். அவள், விதைக்கும் தானியத்தைத் தொட்டால் அது முளைக்காது. வளரும் பூச்செடியருகில் சென்றால் அச்செடி வாடி வதங்கிவிடும்’ என்று வி.எஸ்.வி.இராகவன் அவர்கள் (யுவாங்சுவாங் ப.155) குறிப்பிட்டுள்ளார். தற்காலங்களிலும் தமிழகத்தின் இல்லங்களில் இது ஒரு பழக்கவழக்கமாகவும், நம்பிக்கையாகவும் கடைபிடிக்கப்பட்டு வருகிறது.

இதனால் இயற்கையின் படைப்புகள் மாத விலக்கான மகளிரால் பாதிக்கப்படுகின்றன என்னும் செய்தி பெறப்படுகின்றது.

புறநானூற்றில் பேரரசன் குதிரைகள், படைகளைக் கண்டு முன்னோக்கிச் செல்லாமல் தயங்கி நிற்கும் நிலையை, மாத விலக்குண்ட மகளிர் முருகன் கோட்டத்திற்குச் செல்லாமல் தயங்கி, ஒதுங்கி நிற்கும் நிலைக்கு உதாரணமாக்கப்பட்டுள்ளது. இதனை,

**"அணங்குடை முருகன் கோட்டத்துக்**
**கலம் தொடா மகளிரின், இகந்து நின்றவ்வே"** (புறம்.299)

இப்பாடலில் பொன்முடியார் குறிப்பிட்டுள்ளார். இதனால் விலக்குண்ட கலந்தொடா மகளிரின் நிலை வெளிப்படுகிறது.

பூப்புக் காலத்தில் மகளிர் நாணி, விலகி நிற்கும் இவ்வியல்பை ஔவை.சு.துரைசாமிப்பிள்ளையும் சுட்டிக்காட்டியுள்ளார். இக்காலத்தில் மகளிர் கலம் தொடாது விலகி நின்று தாம் விலக்குண்ட நிலையைத் தெரியப்படுத்துவது, தமிழர் மரபாக இருந்திருக்கிறது. மேலும் மகளிர் பூப்புற்ற காலங்களில் புனிதத்தன்மை அற்றவர்களாகவும், எந்த ஒரு பொருள்களையும், பண்டங்களையும் தொடாமல் இருப்பதை வழக்கமாகவும் கொண்டுள்ளனர். இதனை, தற்கால அறிவியல் கண்ணோட்டத்தோடு நோக்கும்போது, இக்காலங்களில் மகளிர் உடல் மற்றும் மனம் பலவீனப்பட்டவர்களாக இருப்பதால் அந்நேரங்களில் சத்தான உணவு மற்றும் ஓய்வு வேண்டியும், எந்த விதமான நோய் தொற்றுகள் ஏற்படாமல் இருக்க வேண்டியும் இந்நிலை கடைப்பிடிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது.

## முதுமக்கள் தாழி

களி மண்ணால் செய்யப்படும் பெரும்பாண்டம் தாழி எனப்படும். சங்க காலத்தில் இறந்தவர்களைத் தாழியில் வைத்துப் புதைக்கும் நிலையைப்

புறநானூறு தெரிவித்துள்ளது. ஐயூர் முடவனார் இறந்துபோன சோழன் கிள்ளி வளவனின் உடலை வைத்து அடக்கம் செய்ய குயவனிடம் தாழி செய்து தருமாறு கேட்கும் நிலையை,

**"கலம் செய் கோவே! கலம் செய் கோவே!**
**.... ..... .... ....**
**மண்ணா, வனைதல் ஒல்லுமோ, நினக்கே?"** (புறம்.228)

என்ற பாடலில் காண முடிகிறது. புறநானூறு குறிப்பிடும் பெண்மகள் ஒருத்தி கணவன் இறந்த நிலையில், இறப்பிலும் கணவனைப் பிரியாதிருக்க வேண்டும் என்ற நோக்கோடு இருவரும் சேர்ந்திருக்கும்படியான பெரிய அகன்ற முதுமக்கள் தாழியைச் செய்து தருமாறு குயவனிடம் வேண்டிக் கேட்கிறாள் என்பதை,

**"வியல் மலர் அகன் பொழில் ஈமத் தாழி**
**அகலிதாக வனைமோ**
**நனந் தலை மூதூர்க் கலம் செய் கோவே!"** (புறம்.256;5-7)

என்னும் அடிகள் குறிப்பிடுகின்றன. இதனால் ஈமக்கிரியைச் செய்யக்கூடிய அகன்ற தாழியை மகளிர் கேட்பதும், இத்தாழிகளில் மகளிரும் அடக்கம் செய்யப்பட்டு இருக்கின்றனர் என்பதும் பெறப்படுகிறது.

**மகளிரின் அன்றாடச் செயல்பாடுகள்**

மகளிரின் வாழ்வில் அவர்களுக்குரிய அன்றாடச் செயல்பாடுகளாகக் காலையில் எழுந்ததிலிருந்து இரவு உறங்கச் செல்லும்வரை தங்களுக்கேயுரிய பல்வேறு செயல்களைச் செய்கின்றனர். அவற்றுள் வாசற்புறத்தைத் தூய்மை செய்தல், வீட்டிலுள்ளத் தன் உறவுகளைப் பேணிப் பாதுகாத்தல், வீட்டில் விளக்கேற்றுதல், இரவு நடை சார்த்திய பின் உறங்குதல் போன்றவை குறிப்பிடத் தகுந்தவையாகும்.

### காலை நேரச் செயல்பாடுகள்

மகளிா் விடியற்காலையில் கண்விழித்து எழுந்தவுடன் முதல் பணியாக வாயிற்புறத்தைக் கூட்டித் தூய்மைப் படுத்தி மாக்கோலம் இடுவதை வழக்கமாகச் செய்திருக்கின்றனா். இவ்வழக்கம் சங்ககாலம் முதல் இன்று வரை மகளிரிடம் காணப்படுகின்றது. இதன்படி ஆதவன் கதிா் விரியும் விடியற்காலத்தில் தன் காலணிகள் ஒலிக்க, காலைச் செயல்களைச் செய்ய விரும்பி இல்லின் புறத்தே வந்து கடை திறக்கும் நிலையை,

> **"புலா்ந்து விரி விடியல் எய்த, விரும்பி**
> **.... .... .... ....**
> **திண் சுவா் நல் இல் கதவம் கரைய"** (மதுரை.664-667)

இவ்வடிகளில் மாங்குடி மருதனாா் புலப்படுத்துகிறாா். இதனால் மகளிா் விடியற்காலை முதலே பணி செய்யத் தொடங்கும் செயல்பாடு தெரிய வருகிறது.

### மாலை நேரச் செயல்பாடுகள்

மாலை நேரத்தில் பெண்கள் வீட்டில் விளக்கேற்றுவது வழக்கமான ஒரு செயலாகும். இதனைத் தற்காலத்தில் தமிழகத்தின் பல குடும்பங்களில் பெரும்பான்மையான பெண்கள் செயல்படுத்தி வருகின்றனா். விளக்கு ஒளியின் மூலம் இருள் அகலவும், இறையருள் பெறவும், நோய்க் கிருமிகள் விலகி, மங்கலம் உண்டாகவும், மகளிரால் மேற்கொள்ளப்படும் செயலாக இது உள்ளது. இதன்படி மாலையில் தம் கணவரின் வருகையை நினைந்து, அவருடன் கூடும் கூட்டத்தை விரும்பியிருந்த மகளிா் சாந்து, சந்தனம், கத்தூரி போன்ற வாசனைப் பொருள்களைக் கொண்டு நீராடி, ஆடைகளுக்குப் புகையூட்டி இல்லத்து வாயிலில் விளக்கேற்றி வைத்துள்ளனா். இதனை,

> **"மென் நூற் கலிங்கம் கமழ்புகை மடுப்ப,**
> **பெண் மகிழ்வுற்ற பிணைநோக்கு மகளிா்**
> **நெடுஞ்சுடா் விளக்கம் கொளீஇ"** (மதுரை.554-556)

என்னும் அடிகள் உணர்த்துகின்றன. இதனால் மகளிர் வாசனைப் பொருள்களைக் கொண்டு நீராடி, மாலையில் விளக்கேற்றி வைத்து, கணவருக்காகக் காத்திருந்த வழக்கம் அறியப்படுகிறது.

**இரவு நேரச் செயல்பாடுகள்**

இரவில் செய்யத்தகும் பணிகளான, குடும்பத்தாருக்கு உணவு வழங்கி, குழந்தைகளைப் பேணி உறங்கச் செய்து, பின்வாயிற் புறம் அடைத்துத் தாங்களும் உறங்கச் செல்வதே, மகளிரின் இரவு நேரச் செயலாக உள்ளது.

பண்டங்களை விற்கும் நெடிய கடைகளை அடைத்து, அணிகலன்களை அணிந்த செருக்கினையுடைய மகளிர் பின்னிரவில் துயில் கொள்ளச் செல்லும் நிலையை,

> **"நொடை நவில் நெடுங்கடை அடைத்து, மடமதர்,**
> **ஒள் இழை, மகளிர் பள்ளி அயர"** (மதுரை.622-623)

என்ற அடிகளால் அறிய முடிகிறது. ஆகவே, 'பின் தூங்கி முன் எழுவாள் பெண்' என்னும் கூற்றிற்கு ஏற்றாற்போல் மகளிர் விடியற்காலையில் எழுந்து பணி செய்ய தொடங்கி, மாலையில் கணவருக்காகக் காத்திருந்து வீட்டில் விளக்கேற்றி, பின்னிரவில் இல்லத்திலுள்ள அனைவரும் உறங்கிய பின்பு கடை சார்த்தித் துயில்கொள்ளச் செல்லும் நிலை வெளிப்படுகிறது. இதன்வழி சங்கப்புற இலக்கியங்கள் குறிப்பிடும் மகளிர் அன்றாட கடமையாற்றும் பொறுப்புணர்ச்சி மிகுந்த செயல்களைச் செய்துள்ளனர் என்பது பெறப்படுகிறது. இது போன்ற பொறுப்புணர்ச்சி மிக்க மகளிரின் குடும்பங்கள் அன்பில் மிளிர்ந்தும், பொருளாதாரத்தில் மேம்பட்டும், சமூகத்தில் உயர்ந்தும் இருந்திருக்கிறது.

**மங்கல அணி**

மகளிரின் வாழ்க்கையில் திருமணத்திற்குப் பிறகு தங்கள் வாழ்நாள் முழுவதும் அணிய வேண்டிய அணிகலனாக இருப்பது மங்கல அணி எனப்படும் தாலியாகும். மங்கலம் என்பதற்குக் 'கலியாணம், சுபம், வாழ்த்து, ஆக்கம், நன்மை, தாலி, நற்செயல், சிறப்பு, மங்கல வழக்கு' என்றப் பொருள்கள் (கழகத் தமிழகராதி,ப.728) கூறப்பட்டுள்ளன. மகளிர் இவ்வணிக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுத்து வந்துள்ளனர். மங்கல அணியான தாலி குறித்து, "தாலி அணிதல் ஆரியர் அறியாத தமிழ்ப்பழக்கம் தமிழ் நாட்டிற்குரிய இப்பழக்கம் பிராமணர்களால் பிற்காலத்தில் தமது சடங்குகளில் சேர்த்துக் கொள்ளப்பட்டது. தாலிக்கு இருவகைத் தத்துவங்கள் இருக்கலாம். சங்கத் தமிழர் தமது சிறார்க்கு ஐம்படைத்தாலி அணிவர்" என்று டாக்டர் ந.சுப்பிரமண்யன் அவர்கள் (சங்ககால வாழ்வியல்,ப.389) குறிப்பிட்டுள்ளார்.

இத்தகைய மங்கல அணிக்கு முக்கியத்துவம் கொடுக்கும் பொருட்டுப் புறப்பாடல் ஒன்று அமைந்துள்ளது. புறநானூற்றுப் பாடலில் ஆய் ஆண்டிரனின் கொடைத் தன்மையை வெளிப்படுத்தும் புலவர், மகளிரின் முக்கிய அணியாகத் திகழும் இழையணி தவிர மற்ற எல்லாவற்றையும் இரவலர்க்குக் கொடையாகக் கொடுத்தான் என்று குறிப்பிட்டுள்ளார். இதனை,

> **"ஈகை அரிய இழை அணி மகளிரொடு**
> **சாயின்று என்ப, ஆஅய் கோயில்"** (புறம்.127;5-6)

இவ்வடிகள் குறிப்பிட்டுள்ளன. இதில் ஈகை நீங்கிய இழை அணி என்பது மகளிர் அணியும் மங்கல அணியாக இருந்திருக்க வேண்டும் என்பது பெறப்படுகிறது. மேலும், சங்கப் புறப்பாடல்களில் மாங்கல்யம், தாலி போன்ற

சொற்கள் இடம் பெறவில்லை. இதை மகளிர் அணிந்ததிற்கானச் சான்றுகள் பதிவாகவில்லை.

**கொடை**

ஒருவருக்கு ஒரு பொருளை மனம் உவந்து அளிப்பது கொடையாகும். இரவலர்களுக்குப் பொருள்களை வாரி வழங்குவதில் பெரும்பான்மையாக ஆண்கள் ஈடுபட்டிருந்தாலும் பெண்கள் இல்லத்தில் உள்ள தானியங்கள், உணவு போன்றவற்றை இல்லம் தேடி வருபவர்களுக்குக் கொடுத்துதவும் மனம் படைத்தவர்களாக இருந்துள்ளனர். இதன்படி, பானை நிறைய தயிர் கொண்டு வந்து தந்த வேட்டுவனுக்கு, உழவர் குடிப் பெண் குளத்திற்குக் கீழுள்ள வயலில் விளைந்த களத்திலிருந்து பெற்ற வெண்மையான நெல்லை முகந்து தருகின்றனர். இதனை,

> **"தயிர் கொடு வந்த தசும்பும், நிறைய,**
> **ஏரின் வாழ்நர் பேர் இல் அரிவையர்**
> **குளக் கீழ் விளைந்த, களக் கொள் வெண்ணெல்**
> **முகந்தனர் கொடுப்ப"** (புறம்.33;3-6)

எனும் அடிகள் வெளிப்படுத்துகின்றன. மேலும் தன்னிடம் உள்ள உணவு, மிகக் குறைவாக இருந்த போதிலும், விருந்தினர் அதிகமாக வந்ததை எண்ணிக் கவலையடையாமல், நீண்ட பெரிய பந்தலின் கீழ் விருந்தினர்களுக்கு முறையாக உணவளித்து உண்பிக்கின்றச் செயலை,

> **"தவச்சிறிது ஆயினும் மிகப்பலர் என்னாள்,**
> **நீள்நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்**
> **இற்பொலி மகடூஉப் போல"** (புறம்.331;5-9)

என்ற அடிகளில் உறையூர் முதுகூத்தனார் குறிப்பிட்டுள்ளார். கண்டீரக்கோ என்ற அரசன், நாட்டில் இல்லாதபோது, அரசனின் மனைவி வரும் இரவலர்களின் தகுதிக்கேற்ப யானைகளைப் பரிசிலாகத் தந்தனுப்பிய செய்தியை,

**“புன் தலை மடப் பிடி பரிசிலாக,**
**பெண்டிரும் தம் பதம் கொடுக்கும்”** (புறம்.151;4-5)

என்ற அடிகளால் அறிய இயல்கிறது. இதனால் இருப்பதை முறையறிந்து வழங்கும் பழக்கமுடையவர்களாகவும் தங்களால் இயன்ற பொருள்களைக் கொடுக்கும் கொடை உள்ளம் கொண்டவர்களாகவும் மகளிர் திகழ்ந்துள்ளனர் என்பது தெரிகிறது.

**மலர் சூடுதலும், வெறுத்தலும்**

பெண்களின் கூந்தலுக்குத் தனிச் சிறப்புண்டு. அது அவர்கள் சூடும் வாசனைப் பூக்களால் சிறந்து விளங்குகிறது. மகளிர் இன்பமான நேரங்களில் மலர் சூடியும், துன்பக் காலங்களில் மலர் வெறுத்தும் இருந்துள்ளனர்.

கணவரோடு கூடிய மகளிர் விருப்பத்துடன் பூவை அணிகின்றனர். கணவரைப் பிரிந்த மகளிர் தம் தலையில் பூச்சூடாமல் இருந்துள்ளனர். இதனை,

**“சாமெனில் காதல் நோதல்**
**தன்னவன் தணந்த காலைப்**
**பூதனும் புனைதல் இன்றிப்**
**பொற்புடன் புலம்ப வைகி”** (சீவகசிந்தாமணி.1598)

என்று திருத்தக்கதேவர் குறிப்பிட்டுள்ளார். கணவரைப் பிரிந்திருக்கும் மகளிர் வருத்த மேலீட்டினால் கண்ணீர் சிந்திக் கலங்குகின்றனர். இத்தகைய செயலை,

**“புணர்ந்தோர் பூஅணி அணிய, பிரிந்தோர்**
**பைதல் உண்கண் பனி வார்பு உறைப்ப”** (புறம்.194;3-4)

என்ற அடிகளில் பக்குடுக்கை நன்கணியார் பாடியுள்ளார். போர்ப்பூவைச் சூடி வருமாறு போர்ப்பறை ஒலித்ததால், கணவரைப் பிரிந்து தனித்திருக்கும் மனை மகளிர் இனிப்பூச் சூடமாட்டார் எனக் கருதிய பூவிற்கும் பெண், பிற மகளிர் வாழும் மனைகளுக்குச் செல்கின்றாள். இதனை,

**“நிறப் படைக்கு ஒல்கா யானை மேலோன்**
**....   ....   ....   ....**
**பிறர் மனை புகுவள் கொல்லோ,**
**அளியல் தானே, பூவிலைப் பெண்டே!”** (புறம்.293)

எனும் புறநானூற்றுப்பாடல் தெரிவிக்கின்றது. இதில் மகளிர் பூக்கொள்ளாமைக்குக் காரணம், போருக்குச் செல்லும் கணவன், எப்பொழுது திரும்பி வருவான் என்று ஏக்கம் கொண்ட வருத்த மேலீட்டைக் காட்டுகின்றது. இவ்வருத்தத்தோடு மகளிர் போர் வீரனுக்கு மாலை சூட்டிப் போருக்கு அனுப்பி வைக்கும் வழக்கத்தைக் கொண்டிருப்பதை, **“கொடுங்குழை மகளிர் கோதை சூட்டி”** என்ற அடி(புறம்.304;1) சுட்டிக்காட்டுகிறது.

மேலும், நெடுங்கிள்ளி பகைநாட்டின் மதிற்கதவு அடைத்திருந்த காரணத்தினால் மகளிர் பூவின்றி வெறுங்கூந்தலை முடிக்கின்றனர் என்னும் செய்தியை, **“மகளிர் பூ இல் வறுந் தலை முடிப்பவும்”** இவ்வடி(புறம்.44;6-7) புலப்படுத்துகிறது. இதைப்போல் ஒல்லையூர் நாட்டு வள்ளல் சாத்தன் இறந்ததால், அவ்வூர் மக்கள் வருத்தத்தைக் கீழ்க்காணுமாறு தெரிவிக்கின்றனர்.

**“இளையோர் சூடார்; வளையோர் கொய்யார்;**
**நல் யாழ் மருப்பின் மெல்ல வாங்கி,**
**பாணன் சூடான்; பாடினி அணியாள்”** (புறம்.242;1-3)

இதில் வீரர்கள் பூச் சூடமாட்டார்கள், வளையல் அணிந்த இளமகளிர் சூடும் பொருட்டு மலர் பறிக்கமாட்டார்கள், பாணன் தன் நல்ல யாழின் தண்டினால் கொடியை வளைத்துப் பூப்பறித்துச் சூடிக் கொள்ளமாட்டான். பாடினியும் பூச்சூடிக் கொள்ளமாட்டாள் என்ற செய்திகள் இடம் பெற்றுள்ளன. இதனால் நாட்டில் போர் நடக்கும்போதும், போரினால் தோல்வியுறும் போதும் மகளிர்

மலர் வெறுத்துள்ளனர் என்பதும், மற்ற நாட்களில் மலர்விரும்பி அணியும் பழக்கமுடையவராகவும் இருந்துள்ளனர் என்பதும் பெறப்படுகிறது.

## தொகுப்புரை

- ❖ பழக்கம் என்பது ஒரு தனிமனிதனைச் சார்ந்த தொடக்கநிலை எனவும், வழக்கம் என்பது சமுதாயம் சார்ந்த தொடர்நிலை எனவும் அறிந்து கொள்ளப்படுகிறது.
- ❖ மது என்பதற்குக் கள், தேன், மகரந்தம், அமுதம், இனிமை, பால், இளவேனில், அசோகமரம், திருமாலால் கொல்லப்பட்ட ஓர் அரசன் என்ற பல பொருள்கள் இருந்திருக்கின்றன.
- ❖ இலக்கியங்களில் கள் பற்றிய செய்திகளும், சங்க கால மகளிர் கள் சமைத்தல், அதனை வழங்குதல், விற்றல் மற்றும் பருகுதல் போன்ற செயல்பாடுகளை மேற்கொண்டுள்ளனர் என்பதும் பெறப்படுகின்றன.
- ❖ ‘கைம்மை மகளிர்’ - ஆளில் மகளிர், கழிகல மகளிர், தொடிகல மகளிர் பருத்திப்பெண்டிர் என்ற பெயர்களில் குறிப்பிடப்பட்டிருக்கின்றனர்.
- ❖ கைம்மை மகளிர் கணவனுடன் உயிர் நீத்தல், உடன் தீப்பாய்தல், கைம்மை நோன்பு இருத்தல் போன்ற செயல்களைக் கடைப்பிடித்துள்ளனர்.
- ❖ பெண்கள் வீட்டு விலக்கான காலங்களில் கலந்தொடாது வீட்டின் புறத்தே ஒதுங்கி இருத்தல் என்ற வழக்கத்தை கொண்டவர்களாக இருந்திருக்கின்றனர்.
- ❖ சங்க காலத்தில் இறந்தவர் உடலை அடக்கம் செய்வதற்காக முதுமக்கள் தாழி செய்யும் வழக்கம் இருந்திருக்கிறது.

- சங்க கால மகளிர் அன்றாடக் கடமைகளாக வாசற் புறத்தைத் தூய்மை செய்தல் முதல் பின்னிரவு உறங்கும் வரை மிகுந்த பொறுப்புணர்ச்சியுடன் செயலாற்றும் பாங்குடையவர்களாகத் திகழ்ந்திருக்கின்றனர்.
- மகளிர் தங்களிடம் இருக்கும் பொருள்களை முறையறிந்து கொடுக்கும் கொடை உள்ளம் படைத்தவர்களாகவும், இன்ப காலங்களில் மலர்சூடியும், துன்ப காலங்களில் மலர் வெறுத்தும் வாழ்ந்திருக்கின்றனர்.

இதன் வழியாக, சங்க கால மகளிரின் பழக்க வழக்கங்கள் தனிமனித அடிப்படையிலும், மரபு சார்ந்த நிலையிலும், கொடைத்தன்மையுடன் சூழ்நிலைகளுக்கேற்ப வாழ்ந்து குடும்பம் மற்றும் சமூக உயர்விற்கு வழி வகுத்துள்ளனர்.

# இயல் - 3

# சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் சடங்குகளும் நம்பிக்கைகளும்

# இயல் - 3

## சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் சடங்குகளும் நம்பிக்கைகளும்

சங்ககால மக்கள் பல்வேறு விதமானச் சடங்கு முறைகளையும், நம்பிக்கைகளையும் கொண்டிருந்தனர். இதில் சடங்கு என்பது நிகழ்த்தப்படுவது, நம்பிக்கை என்பது முன்னோர்களால் வழி வழியாகப் பின்பற்றப்படுவது ஆகும். சமயம் என்பதனை அடியொட்டி ஏற்படுத்தப்பட்டது சடங்காகும். மனிதன் பின்பற்றிய செயல் முறைகளில் புனிதத்தன்மைக் கருதி உருவாக்கியதில் சடங்கும் ஒன்றாகும். இச்சடங்கு முறைகள் புனிதத் தன்மைக்குத் தீங்கு நேராமல் பாதுகாக்கச் சமூகத்தினரால் மேற்கொள்ளப்பட்டு வருகிறது.

'ஒரு செயலின் காரணமாகவும், மரபு வழியாகச் சந்ததி, பின் சந்ததி ஆகியோரால் பின்பற்றப்படும் வழக்காகவும் நம்பிக்கை உள்ளது' என்று வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி-11,பக்.220-221) குறிப்பிட்டுள்ளது. இத்தகைய நம்பிக்கைகளால் பல்வேறு பகுதிகளில் வாழும் மனித இனங்களின் பண்பாடுகள் வெளிப்படுகின்றன. 'ஒரு மனிதனின் தன்னல உணர்வும், சமுதாய உணர்வும் நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன' என்று செ.பழனிச்சாமி அவர்கள் (புறநானூற்றில் தமிழர் பண்பாடு,ப.102) கூறியுள்ளார். இந்நம்பிக்கைகள் நடைமுறை வாழ்வில் மக்களிடம் அதிகமாகவும், இலக்கியங்களில் குறைவாகவும் காணப்படுகின்றன. இத்தகையச் சடங்குகளும் நம்பிக்கைகளும் சங்கப்புற நூல்களில் காணப்படுகின்றன. இவற்றில் மகளிர் மேற்கொண்ட சடங்குகளையும் நம்பிக்கைகளையும் வெளிப்படுத்தி ஆராய்வதாக இவ்வியல் அமைகிறது.

**சடங்குகள்**

சடங்கு புதிதாக ஒன்றை கண்டுபிடித்துத் திடீரென்று செய்யப்படுவதல்ல. மக்களிடம் காலங்காலமாக நிலைபெற்று அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட, வகையில் நிகழ்த்தப்படுவதாகும். இவ்வாறு நிகழ்த்தப்படுவதற்கான காலம், இடம் நிகழ்த்தப்பட்டதற்குப் பின் ஏற்படும் விளைவுகள், பலன்கள் ஆகியவற்றைச் சமூகம் அறிந்த நிகழ்வாகச் சடங்குகள் அமைகின்றன.

மக்கள் இறைவனை மகிழ்வுறச் செய்ய வேண்டும் என்ற நோக்கில் சில சடங்கு முறைகளை மேற்கொண்டு வருகின்றனர். ‘புனிதத்தன்மையை மக்கள், இறைவன் என்னும் பெயரால் மனித உருவமாக்கியும், மனித உணர்வுகளாக்கியும் வழிபட முற்படுவதால் இறைவனுக்கும் மனமுண்டு என எண்ணி இறைவனின் மனத்தை நிறைவு செய்யும் பொருட்டு மேற்கொள்ளப்பட்ட செயல்கள் சடங்குகளாயின’ என்று பக்தவத்சல பாரதி (பண்பாட்டு மானிடவியல், ப.524) குறிப்பிடுகிறார்.

மனிதனின் வாழ்வியல் நிகழ்வுகளில் பெரும்பாலும் சடங்குகள் நிகழ்த்தப்படுகின்றன. மக்கள், வாழ்வில் மேற்கொள்ளும் சடங்கு முறைகளை மிகவும் நுணக்கமாகவும் ஆழ்ந்து உற்றுநோக்கியும் ஆராய்ந்து அவற்றைத் ‘தகுதிப் பெயர்ச்சிச் சடங்குகள்’ என்று மானிடவியல் அறிஞர் அர்னால்டு வான் கென்னப் (பண்பாட்டு மானிடவியல், பக்தவச்சல பாரதி,ப.525) வரையறைச் செய்துள்ளார். இச்சடங்குகள் மக்களை ஒரு நிலையிலிருந்து மறுநிலைக்கு அறிமுகப்படுத்தக் கூடியதாகும். இவை ஒன்றோடொன்று சேர்ந்தும், பிரிந்தும், நிலை மாறியும் காணப்படுகின்றன. இதனால் இவை சேர்ப்புச் சடங்குகள்(incorporate rites), பிரித்தல் சடங்குகள்(Seperation

rites), நிலைமாற்றுச் சடங்குகள்(transitional rites) என அமையப்பெற்றுள்ளன.

சிற்றிலக்கியங்களில் தமிழர்களின் நிலைகள் பல தகுதிப் பெயர்ச்சி நிலைகளாகச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. உதாரணமாக ‘குழந்தைப் பருவத்தைக் காப்பு, செங்கீரை, தாலப்பருவம், சப்பாணி, முத்தப்பருவம், வருகை, அம்மானை, சிறுபறை, சிற்றில், சிறுதேர்’ என்று வகைப்படுத்தியிருப்பது தகுதிப் பெயர்ச்சி நிலையின் அடிப்படையிலாகும். இதைப்போல் பெண்களின் பருவத்தைப் ‘பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண்’ என்று வகைப்படுத்தியிருப்பதும் தகுதிப் பெயர்ச்சி என்ற கருத்தின் அடிப்படையிலாகும்.

மனித வாழ்க்கையில் பிறப்பு முதல் இறப்பு வரைப் பல்வகையானச் சடங்கு நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. இச்சடங்குகள் பிறப்பு, பெயர்சூட்டுதல், காது குத்துதல், பிறந்தநாள் விழா, பூப்படைதல், திருமணம், வளைகாப்பு, குழந்தைப்பிறப்பு, இறப்பு, இறுதிச்சடங்கு, நினைவு நாள் என்னும் நிகழ்வுகளின் கீழ் நடத்தப்படுகின்றன. இதில் தமிழ் மக்களின் சடங்குகள் சமூகம், பொருளாதாரம், சமயம், அரசியல், அர்ப்பணிப்பு, கலை, அழகியல் ஆகியவற்றைச் சார்ந்து அமைகின்றன.

ஒவ்வொரு சமயத்திலும் நிகழும் சடங்குகளும் வழிபாட்டு மரபுகளும் அச்சமூகத்தை ஒன்றிணைக்கும் சக்தியாக செயல்படுகின்றன. பெரும்பாலும் இந்நிகழ்வில் சமயம் சார்ந்த தனி மனிதர் மட்டுமல்லாமல் கூட்டமாகச் சேர்ந்த சமூகமும் இடம் பெறுகின்றன. இச்சமயச் சடங்குகளும் வழிபாட்டு மரபுகளும் சமூகத்தில் உள்ள அனைத்து மனிதர்களையும் இணைத்து அவர்களுக்கிடையே ஒற்றுமையை வலுப்படுத்துகின்றன. இத்தகைய

சடங்குகளில் மகளிர் ஈடுபாடு கொண்டவர்களாக இருந்துள்ளனர். அவை பிறப்புச்சடங்குகள், இறப்புச் சடங்குகள், வழிபாட்டுச் சடங்குகள் என்ற வகையில் அமையப் பெற்றுள்ளன.

### பிறப்புச் சடங்குகள்

மனித வாழ்வின் அனைத்து நிலைகளிலும் சடங்குகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. அவற்றில் குழந்தைப் பிறந்த உடன் மேற்கொள்ளும் சடங்குகள் பிறப்புச் சடங்குகளாகும்.

### புனிற்று மகளிர்

அண்மைக் காலத்தில் மகவு ஈன்றுள்ள மகளிர் 'புனிற்று மகளிர்' என அழைக்கப்படுவர். கருவுற்ற மகளிர் மகப்பேற்றிற்குப் பிறகு குளத்தில் நீராடி, தங்கள் மீது வீசும் புலால் நாற்றத்தை நீக்கி, தெய்வத்தை வணங்குவதை, ஒரு சடங்காக அக்காலத்தில் கடைப்பிடித்துள்ளனர். இதன்படி மகவு ஈன்ற தாய் பூசைக்கு வேண்டிய பொருட்களோடு, பால்சோற்றைப் படையலாகக் கொண்டு யாழில் செவ்வழிப்பண் வாசிக்க, அதற்கேற்ப முழவும், சிறுபறையும் ஒலிக்கச்செய்து, முதுமகளிரோடு சென்று கடவுளை வழிபட்ட காட்சியை,

> **"நல்மா மயிலின் மென்மெல இயலி,**
> **கடுஞ்சூல் மகளிர் பேணி, கை தொழுது,**
> **பெருந்தோட் சாலினி மடுப்ப"** (மதுரை.608-610)

என்னும் பாடல் அடிகள் புலப்படுத்திக் காட்டுகின்றன. இதனால் புனிற்று மகள் மேற்கொண்ட பிறப்புச் சடங்குகளை அறிய இயல்கிறது.

### வழிப்பாட்டுச் சடங்குகள்

மனிதனின் வாழ்க்கைக்கு இன்றியமையாததாக இருப்பது தெய்வ வழிபாடு. இறைவனுடன் தொடர்பு கொண்டு வாழ வேண்டும் என்பது வழிபாட்டின் நோக்கமாக அமைகிறது. மனிதன் தன்னுடைய குறைகளை நீக்கவும், தேவைகளை வேண்டவும் இறை வழிபாட்டினை மேற்கொள்கிறான்.

மலர்கள், வாசனைப் பொருள்கள் ஆகியவற்றைக் கொண்டும், பிரார்த்தனைச் செய்தும், பல்வேறு உருவங்களை அமைத்தும் கடவுளை வணங்குகிறார்கள்.

வழிபாடு என்பதற்கு 'அப்பியாசம், ஆராதனை, தாழ்மை, வணக்கம், தொண்டு, பூசனை, வழிபடல் என்றும், வழிப்படுதல் என்பதற்கு வணங்குதல், பின்பற்றுதல், நேர்ப்படுதல், கீழ்ப்படுதல், வழிநடக்கத்துவக்கல்' என்றும் தமிழ் அகராதிகள் பொருள் தந்துள்ளன. தமிழ் நாட்டு மக்கள் எந்த ஒரு செயலைத் தொடங்கும் பொழுதும், உழைப்பின் பயன் கருதியும், சுற்றத்தாருடன் சேர்ந்து விழாக் கொண்டாடும் பொழுதும் முதலில் தெய்வ வழிபாடு மேற்கொள்வதை வழக்கமாகக் கொண்டுள்ளனர்.

'இயற்கையிடமும் மரணத்திற்குப் பின்வரும் நிலையிடமும் மனிதன் கொண்ட அச்சமே வழிபாட்டிற்கு அடிப்படைக் காரணம்' என்கிறார் உளவியல் பேரறிஞரான சிக்மண்ட் பிராய்டு. 'கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்' என்ற பழமொழி மக்களிடையே வழங்கப்பட்டு வரும் ஒன்றாகும். நல்லது நடந்தால் தெய்வ அருள் என்றும் தீயவை நடந்தால் அது தெய்வத்தின் கோபம் என்றும் நம்பினர். இதில் அதிக உடன்பாடு கொண்டவர்கள் பெண்களாவர். நாட்டுப்புறவியல் இலக்கியம் பெண்கள் இறைபக்தி உடையவர்களாக இருக்க வேண்டும் என்பதை,

**"வெள்ளிக் கிழமையிலே வீடுபூரா மெழுகணுன்டி**
**ஆடி அமாவாசையிலே ஆண்டவனைக் கும்பிடனும்**
**கார்த்திகை தீபாவளியில் கடவுளை நீ கும்பிடனும்"** (நா.வியல்,செ.ப.,ப.213)

என்று சுட்டிக்காட்டியுள்ளது. சங்க கால மகளிர் இறைப்பக்தியில் நம்பிக்கைக் கொண்டு வாழ்ந்துள்ளனர். தங்கள் வாழ்க்கையில் தீமைகள் நேராமலிருப்பதற்காகவும், தாங்கள் மேற்கொள்ளும் செயல்கள் வெற்றியடையவும், மறுபிறப்பு வாழ்க்கை இனிமையாக அமைதல் கருதியும்

அச்சம் காரணமாகவும், இறை வழிபாடு, நடுகல் வழிபாடு போன்றவற்றை மேற்கொண்டுள்ளனர்.

### இறை வழிபாடு

சங்க காலத் தமிழ் மக்கள் குறிப்பிட்ட சமயங்களின் பெயரில் கடவுள் நம்பிக்கையை உருவாக்கவில்லை. இதனால் சமயம் சார்ந்தப் பூசல்கள், வெறிகள் இருந்ததாகச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடவில்லை. தொடக்கக் காலத்தில் கடவுள் வழிபாடு இயற்கையை அடியொட்டியதாக அமைந்திருந்தது. சிலப்பதிகாரத்தின் கடவுள் வாழ்த்துப் பாடலில் 'ஞாயிறு போற்றுதும்', 'திங்களைப் போற்றுதும்', 'மாமழைப் போற்றுதும்' எனச் சூரியன், நிலவு, மழை ஆகியவற்றைப் போற்றி இளங்கோவடிகள் பாடியுள்ளது இங்கு நினைவில் கொள்ளத்தக்கதாக உள்ளது. இவ்வியற்கை வழிபாடு காலப்போக்கில் உருவ வழிபாடாக மாற்றம் பெற்றது.

சங்க காலத்தில் முறைப்படுத்தப்பட்டச் சமயத்தின் வளர்ச்சியைத் தொல்பொருள் சான்றுகள் கொண்டு அறியப்படுகின்றன. தெய்வங்களின் பெயர்களையும், வழிபாட்டு முறைகளையும் பாட்டும் தொகையும் சுட்டிக் காட்டுகின்றன. தொல்காப்பியர்,

> **"மாயோன் மேய காடுறை உலகமும்
> சேயோன் மேய மைவரை உலகமும்
> வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
> வருணன்மேய பெருமணல் உலகமும்
> முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்
> சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"** (தொல்,அகத்,இளம்.நூ-5)

என்ற நூற்பாவில் நானிலக் கடவுள்களை நிலத்துக்கேற்பத் திருமால், முருகன், இந்திரன், வருணன் என முறைப்படுத்திக் காட்டியுள்ளார். மேலும், ஐந்திணைக் கருப்பொருட்கள் பற்றி குறிப்பிடும் தொல்காப்பியர், தெய்வத்தை முதலாவதாக வைத்துக் குறிப்பிட்டுள்ளதை,

**“தெய்வம் உணாவே மாமரம் புட்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப”**(தொல்.அகம்.இளம்.நூ.20)

என்ற இந்நூற்பாவின் வழி அறிய முடிகிறது. கடவுள் என்ற சொல்லாட்சியினை, **‘கடவுளும் வரையார்’**, **‘கடவுள் வாழ்த்தொடு’** என்றவாறு தொல்காப்பியர் (தொல்.பொருள்.புற,நூ.22,26) சுட்டிக்காட்டியுள்ளார். இதனால் இறைவன் குறித்த வழிபாடுகள் தொல்காப்பியர் காலந்தொட்டு இருந்துள்ளதை உணரமுடிகிறது.

மதுரைக்காஞ்சியில் தெய்வங்களின் திருக்கோவில்களுக்குச் சென்று வழிபாடு நிகழ்த்தியிருக்கும் மகளிர் தங்களை அணிகலன்களாலும், மணப்பொருட்களாலும் ஒப்பனைச் செய்துக்கொண்டு வருவது, ஒளி வடிவுடைய தெய்வங்கள் மண்ணில் இறங்கி வருவதைப் போன்றுள்ளது என்பதை,

**“நாள் மகிழ் இருக்கை காண்மார், பூணொடு**
**.... .... .... ....**
**மணம் கமழ் நாற்றம் தெருவுடன் கமழ”**(மதுரை.443-447)

என்ற அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. மேலும், மாடங்களின் மீது நின்று விழாவைக் காணும் மகளிரின் முகம், மேகத்தின் இடையில் மறைந்து தோன்றும் நிலவினைப் போன்று ஒளிர்வதை,

**“நிரை நிலை மாடத்து அரமியம் தோறும்**
**மழைமாய் மதியின் தோன்றுபு மறைய”**(மதுரை.451-452)

எனும் அடிகள் குறிப்பிடுகின்றன. இதனால் வழிபாடு நிகழ்த்தச் செல்லும் மகளிரின் ஒப்பனை நலமும், விழாக் காட்சியும் பற்றி அறிய முடிகிறது. மேலும், சங்கப்புற இலக்கியங்களில் சிவபெருமான், திருமால், முருகன், கொற்றவை வழிபாடுகள் மற்றும் புத்த வழிபாடு போன்ற செய்திகளும், இத்தெய்வங்களை மகளிர் வழிபட்ட முறைகளும் இடம் பெற்றுள்ளன.

### சிவபெருமான்

சைவ சமயக் கடவுளான சிவபெருமானை முக்கண் செல்வன்(புறம்.6;18,அகம்.181;16), ஆலமர் செல்வன்(சிறு.97), ஆல்கெழு கடவுள்(திரு.256,புறம்.198;9), காரியுண்டிக் கடவுள்(மலை.83), கணிச்சி மணிமிடற்றோன்(புறம்.56;2), நீலமணிமிடற்றோன்(புறம்.91;6), மழுவாள் நெடியோன்(மதுரை.455), நீள்நிமிர்சடை முதல்வன்(புறம்.166;12) என்ற பெயர்கள் கொண்டு சங்க காலத்தில் வழிபட்டுள்ளனர். சிவபெருமானின் கோயிலை,

**"முக் கட் செல்வர் நகர் வலம் செயற்கே!"** (புறம்.6;18)

என்ற புறநானூற்று அடி சுட்டிக்காட்டுகிறது. சிவபெருமான் உமையம்மையை ஒரு பாகமாக விருப்பத்தோடு பொருந்தப்பெற்று, முக்கண்களைக் கொண்டு, முப்புரங்கள் எரித்த செய்தியை நக்கீரர்,

**"உமைஅமர்ந்து விளங்கும், இமையா முக்கண்,**
**மூஎயில் முருக்கிய, முரண்மிகு செல்வனும்"** (திரு.153-154)

என்ற திருமுருகாற்றுப்படைப் பாடலில் பாடியுள்ளது தெரிகிறது. நீர், நிலம், தீ, வளி, ஆகாயம் என்ற ஐம்பெரும்பூதங்களைச் சிவபெருமான் ஒருசேர படைத்த பெருமையை மதுரைக்காஞ்சி அடிகள்(453-455) விவரிக்கின்றன. மேலும் நவிர மலையை உறைவிடமாகவும், நஞ்சை உணவாகவும் உண்ட இறைவனின் இயல்பை,

**"பேர் இசை நவிரம் மேஎய் உறையும்"** (மலை.82)

இவ்வடிகளில் பெருங்குன்றூர் பெருங்கௌசிகனார் குறிப்பிட்டுள்ளார். 'வேத வழக்கிற்கு பிற்பட்ட இதிகாச, புராண காலத்தில் சிவ, விட்டுணு வழிபாடு மிகவும் சிறப்படைந்தது' என்று க.கைலாசபதி அவர்கள் (பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும் ப.18) கருத்துத் தெரிவித்துள்ளார்.

அதியமான் நெடுமானஞ்சியோடு நட்பு கொண்டிருந்த ஔவையார்க்கு, நீண்ட ஆயுட்காலத்தைக் கொடுக்கும் நெல்லிக்கனியை அதியன் கொடுத்த போது, அதனைப் பெற்றுக் கொண்ட ஔவையார் ‘சிவபெருமானைப் போல நிலைபெற்று வாழ்க’ என்று வாழ்த்தியதை,

> **“பால் புரை பிறை நுதற் பொலிந்த சென்னி**
> **நீலமணி மிடற்று ஒருவன் போல**
> **மன்னுக பெரும! நீயே”** (புறம்.91;5-7)

என்ற புறநானூற்றுப் பாடல் அடிகள் தெரிவிக்கின்றன. இதனால் சிவன் பற்றிய பதிவுகளை அறிய முடிகிறது.

### திருமால்

திருமால் என்றால் விட்டுணு, அரசன் என்பது பொருளாகும். சங்க கால மக்கள் திருமாலை, முல்லைத் திணைக்குரியக் கடவுளாகவும், காக்கும் கடவுளாகவும் கொண்டு வழிபட்டுள்ளனர். மாயோன், நெடியோன் எனும் தமிழ்ப்பெயர்களால் திருமால் அழைக்கப்பெறுவதை,

> **“புகழ்தல் உற்றோர்க்கு மாயோன் அன்ன”** (புறம்.57;2)
> **“மாயோன் மேய ஓண நல் நாள்”** (மதுரை.591)
> **“நீல்நிற உருவின், நெடியோன் கொப்பூழ்”** (பெரும்.402)
> **“நிலம் தரு திருவின் நெடியோன் போல”** (மதுரை.763)

என்ற புறப்பாடல்களில் காண முடிகிறது. ‘சங்ககால மாயோன் வழிபாட்டினின்று (திருமால்) வைணவச் சமயமும், சேயோன் வழிபாட்டினின்று (சிவன்) சைவச் சமயமும் தோன்றின’ என்று ஞா.தேவநேயன் அவர்கள் (தமிழர் மதம்,ப.37) குறிப்பிட்டுள்ளார். தொடக்கக் காலத்தில் திருமால் வழிபாடு ஒரு இனத்தைச் சார்ந்தவர்களுக்குக் குறிப்பாக, முல்லை நிலத்தார்க்கு உரியதாக இருந்தது. பின் பிற இனத்தாருக்கும் உரித்தானது.

காலப்போக்கில் இவ்வழிபாடு ‘விட்டுணு’ எனும் பெருந்தெய்வ வழிபாடாகவும் மாறியது.

திருமாலுக்குரிய ஓண நாள் விழாவை மதுரைக்காஞ்சியும்(அடி-591), பாம்புப் படுக்கையில் அயர்ந்த தன்மையைப் பெரும்பாணாற்றுப்படை, **“பாம்பணைப் பள்ளி அமர்ந்தோன்”**(பெரும்.373) என்ற அடியிலும் குறிப்பிட்டுள்ளன.

சேர நாட்டில் உள்ள திருமால் கோயிலில் மக்கள் கூட்டமாகச் சென்று வழிபட்டு, வரம்பெற்ற நிலையை,

**“குன்று தலைமணந்து, குழூஉக் கடல் உடுத்த**
**....          .....          ....          ....**
**நெஞ்சு மலி உவகையர் துஞ்சு பதிப் பெயர”**(பதிற்று.31;1-10)

என்ற பதிற்றுப்பத்துப் பாடல் அடிகள் சிறப்பித்துக் காட்டியுள்ளன. இப்பாடலில் திருமால் வழிபாட்டில் உண்ணா நோன்பு இருந்து வரம் வேண்டிய மக்கள் கூட்டம், தன் மார்பில் திருமகளைக் கொண்ட திருமாலின் திருவடிகளை நெகிழ்ந்து வணங்கி, அவரவர் இருப்பிடங்களுக்குச் சென்ற செய்தி வெளிப்படுகின்றன. திருமாலை மகளிர் தனியாக வழிபட்ட செய்திகள் புறப்பாடல்களில் இடம்பெறவில்லை ஆயினும், பதிற்றுப்பத்துப் பாடலில் மக்கள் திருமாலுக்கு வழிபாடு நிகழ்த்தியக் காட்சி இடம்பெற்றுள்ளது. மக்கள் என்பதில் ஆண், பெண் ஆகிய இருபாலரும் அடங்குவர். இதிலிருந்து மகளிர் திருமாலுடன் உறைந்திருக்கும் திருமகளையும் சேர்த்து வழிப்பட்டுள்ளனர் என்பது புலப்படுகிறது.

## முருக வழிபாடு

சங்க கால மக்கள் குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகப்பெருமானை முதன்மையானத் தெய்வமாகப் போற்றி வழிபட்டனர். முருகு என்றால் ‘அழகு’

என்பது பொருள். இதனால் முருகன் அழகு, அன்பு, காதல் கொண்ட தெய்வமாகப் போற்றப்பட்டுள்ளான். இக்கடவுளை ‘முருகு, முருகன், சேஎய், செய்யோன், நெடுவேள், வேலன், குறிஞ்சிக்கிழவன்’ என்ற சொற்களால் வழங்கப்பட்டுள்ளதைப் புற இலக்கியங்கள் (புறம்.56;14, பதிற்று.26:12, திரு.244, மதுரை.181,611), (புறம்.16;12,23;4), (திரு.271, பெரு.458), (புறம்.56;8), (புறம்.55;19), (மதுரை.611), (திரு.267) தெரிவிக்கின்றன.

திருமுருகாற்றுப்படை முருகனின் அறுபடை வீடுகளான ‘திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருஆவினன்குடி, திருவேரகம், முருகன் குடியிருக்கும் குன்றுகள், பழமுதிர்ச்சோலை’ என்ற இடங்களில் எழுந்தருளியிருக்கும் சிறப்புகள் குறித்து நக்கீரரால் பாடப்பட்டுள்ளது சிறப்பிற்குரியதாகும். இதில் முருகனின் ஆறுமுகச் சிறப்புகள் குறித்தும், பன்னிரு கைகளின் செயல்பாடுகள் குறித்தும், தெய்வானை, வள்ளிக்குக் கணவனானது குறித்தும் செய்திகள் இடம்பெற்றுள்ளன. மேலும், திருப்பரங்குன்றத்தில் முருகனுக்குக் கோயில் இருந்த காட்சியை,

**“செருப்புகன்று எடுத்த சேண்உயர் நெடுங்கொடி**
**.... .... .... ....**
**குன்றுஅமர்ந்து உறைதலும் உரியன், அதாஅன்று”** (திரு.67-77)

என்ற அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் முருகனைப் பற்றியும், முருகனுக்குக் கோயில் இருந்த காட்சிப் பற்றியும்,

**“வெண் தலைப் புணரி அலைக்கும் செந்தில்**
**நெடுவேள் நிலைஇய”** (புறம்.55;18-19)
**“அணங்குடை முருகன் கோட்டம்”** (புறம்.299;6)

என்ற புறநானூற்று அடிகள் குறிப்பிடுகின்றன. இத்தகைய முருகனுக்குக் குறமகள், தன் கையில் சிவந்த நூலைக் காப்பாகக் கட்டி படையலிட்டு வழிபடுவதற்குரிய மூல மந்திரத்தை ஓதி, மலர்களையும் வெண் பொரியையும்

தூவி, குருதியில் கலந்த தூய வெள்ளரிசியைப் பலிப் பொருளாக வைத்து, மலைப் பக்கத்தில் அமைந்த தனது ஊர் மக்கள் பசி நீங்கியும், பிணி அறுத்தும், பகையின்றியும், வசியும் வளமும் பெற்றுச் சிறக்கவேண்டுமென்று கைகூப்பி வணங்கியதை,

**"மாண்தலைக் கொடியொடு மண்ணி அமைவர,**
**.... .... .... ....**
**முருகுஆற்றுப் படுத்த உருகெழு வியல்நகர்"** (திரு.227-244)

என்ற அடிகளில் நக்கீரர் புலப்படுத்தியுள்ளார். இதனால் குறமகள் முருகனுக்கு நிகழ்த்திய வழிபாட்டு முறைகளை அறிய முடிகிறது.

**கொற்றவை**

கொற்றவை என்பதற்கு 'துர்க்கை, வெற்றிச் சிறந்தோள், உமை, வீரத்திருமகள்' என்று பலவாறு பொருளமைகிறது. வீரம், வெற்றி, செழிப்பு, சீற்றம் ஆகியவற்றிற்குக் காரணமாக அமையும் தெய்வம் 'கொற்றவை' என மக்களால் நம்பப்பட்டது. சக்தியின் மறுவடிவமாக கொற்றவை விளங்கியுள்ளாள். இதனை,

**"வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ**
**இழைஅணி சிறப்பின் பழையோள் குழவி"** (திரு.258-259)

என்று குறிப்பிடுவதால் அறிய இயல்கிறது. கொற்றவையின் உருவச் சிறப்பைச் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். பவளம் போன்ற இதழும், முத்துப் பற்களும், கையில் திரிசூலத்துடன் வீரவாள் கொண்டும், காலில் வீரக்கழல் அணிந்து புன்முறுவலுடன் தோற்றமளிக்க கூடியவளாகக் கொற்றவை(சிலம்பு.12;56-65) விளங்குகிறாள். இது தாய்த்தெய்வ வழிபாட்டின் தொடக்கமாக இருந்தது. 'இத்தாய்த்தெய்வ வழிபாடு இந்தியாவின் சிந்துவெளி நாகரிகக் காலத்தில் சிறப்புற்று விளங்கியதை மொகஞ்சதாரோ, அரப்பா முதலிய இடங்களில் நிகழ்ந்த

அகழ்வாய்வுகளில் கிடைத்துள்ளச் செய்திகள்’ (தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு, தமிழ்நாட்டு வரலாறு ப.220) தெரிவிக்கின்றன.

சிலப்பதிகாரத்தின் காப்பியத் தலைவியாகியக் கண்ணகியும், மதுராபதி தெய்வமும் தாய்த் தெய்வமேயாகும். கண்ணகி வழிபாடு பெரும்பாலும் பாமர மக்களிடையே நிகழ்த்தப் பெறுகிறது. இதனை, கேரளத்தில் மாற்றம் பெற்ற பகவதி வழிபாட்டின் எச்சமாகக் கருத முடியும். கண்ணகி காளியின் அம்சமாகவும், தாய்த் தெய்வமாகவும் மாறியது போல, மணிமேகலையும் ‘கடல் கெழு செல்வியாக’ மாறித் தெய்வமானதை மணிமேகலைக் காப்பியம் கொண்டு அறிய முடிகிறது.

நாட்டில் மழைபெய்து, நாடு செழிப்படையும் என்ற நம்பிக்கைத் தாய்த்தெய்வ வழிபாட்டின் அடிப்படையில் தோன்றியவையாகும். காவிரி, கங்கை முதலிய ஆறுகளைப் பெண்ணாகக் கருதி வழிபாடு செய்வதும் தாய் தெய்வ வழிபாட்டால் விளைந்தவையாகும். இராமாயணத்தில் வரும் இராமனின் தாய்மார்களை,

**“கைகேி அம்மைக்கும்**
**கௌசல்யா தேவியார்க்கும்**
**நேரான கோசலைக்கும்**
**பெயராக வந்த கண்ணோ”** (ஏட்டில் எழுதாக் கவிதை,ப.38)

என்ற நாட்டுப்புறப்பாடல் விளக்கிக்காட்டுகிறது. பாலை நில மக்கள் தாய்த்தெய்வக் கடவுளான கொற்றவையைக் கடவுளாகக் கொண்டு வழிபட்டனர். தொல்காப்பியர்,

**“மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த**
**கொற்றவைநிலையும் அத்திணைப் புறனே”** (தொல்,பொருள்,இளம்,புறத்.நூ.4)

என்ற நூற்பாவில் கொற்றவைக் குறித்து குறிப்பிட்டுள்ளார். சங்ககால மகளிரின் கொற்றவை வழிபாடு காலத்தால் முற்பட்டதாகும்.

கொற்றவையினைக் குறிக்கும் ‘பழையோள்’ என்ற சொல் பழங்காலத்தில் வழங்கப்பட்டுள்ளது. சங்கத் தமிழர்கள் தாய் தெய்வத்தைப் பழையோள், கொற்றவை என்ற பெயர்கள் கொண்டு வணங்கியுள்ளார்கள் என்பது திருமுருகாற்றுப்படை பாடல்(அடி-259, 258) கொண்டு அறியப்படுகிறது. கொற்றவை அயிரை என்னும் மலையில் உறைபவள் என்பதைப் பதிற்றுப்பத்துப் பாடல்கள் (70;26, 79;17, 88;12) தெரிவிக்கின்றன.

பெண் தெய்வ வழிபாடு, தமிழகத்தில் கொற்றவை வழிபாடாகிக் காலப்போக்கில் வளர்ச்சி அடைந்திருக்க வேண்டும். ‘தாய் தெய்வத்தை ஆரியர் துர்க்கையெனக் கொண்டும், பழந்தமிழர் கானமர் செல்வியைக் கொற்றவையெனக் கொண்டும் வழிபட்டனர்’என்று பி.எல்.சாமி அவர்கள்(தமிழ் இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு, ப.56) குறிப்பிட்டுள்ளார். இதன் வழி சங்ககால மகளிர் தெய்வங்களை வணங்கியும் வாழ்த்தியும் உள்ளனர். தாய்தெய்வ வழிபாட்டின் எச்சமாக கொற்றவையை வணங்கியிருக்கின்றனர்.

### பௌத்தப்பள்ளி வழிபாடு

பௌத்தப்பள்ளி என்பது புத்த மதக் கோயிலாகும். இல்லற மகளிர் தங்களை அணிகலன்களால் அழகு செய்துக்கொண்டு, பாதுகாக்கும் தம் கணவரோடு, தம் சிறு குழந்தைகளின் கைகளைப் பிடித்துக் கொண்டு, பூசைக்குரிய பொருட்களுடன் வழிபாடு நிகழ்த்தப் பௌத்தப்பள்ளிக்குச் சென்ற காட்சியை,

> **“திண்கதிர் மதாணி, ஒண் குறு மாக்களை,**
> **.... .... .... ....**
> **பூவினர், புகையினர், தொழுவனர் பழிச்சிச்**
> **சிறந்து புறங்காக்கும் கடவுட் பள்ளியும்”** (மதுரை.461-467)

என்ற மதுரைக்காஞ்சி அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. இதில் ‘கடவுட் பள்ளி என்பதற்கு பௌத்தர் திருக்கோயில்’ என்று மெய்யப்பன் தமிழகராதி

(ப.278) பொருள் கூறுகிறது. இதனால் மகளிர் தம் குடும்பத்துடன் கோயில்களுக்குத் தங்களை ஒப்பனை செய்து கொண்டு செல்லும் நிலையும், தம் கணவரைச் சார்ந்து செல்லும் நிலையும் வெளிப்படுகிறது.

**அச்ச வழிபாடு**

பழங்கால மக்கள் அச்சத்தின் காரணமாக இயற்கைப் பொருட்களையும் தங்களுக்குத் தீங்கு விளைவிக்கக் கூடியவற்றையும் வழிபட்டனர். அவற்றில் ஒன்றாகப் பாம்பு வழிபாடு இருந்திருக்கிறது. இவை தற்காலங்களிலும் மக்களால் கடைபிடிக்கப்பட்டு வருகிறது. சங்க காலத்தில் பரிசில் நாடிச் செல்லும் பாணர்கள், கூத்தர்கள், விறலியர்கள் நடைப் பயணங்களின் போது, நச்சுத்தன்மைக் கொண்ட பாம்பினால் எந்த ஒரு தீங்கும் ஏற்படாமலிருப்பதற்காக அவற்றைக் கைதொழுதுச் சென்றுள்ளனர். பெண்கள் பாம்பினைக் கடவுளாக எண்ணி, புற்றில் பாலூற்றி பாடலோடு வழிபடும் நிலையை,

> **“புற்று புற்று நாகரே பூமியிடம் கொண்டவரே**
> **மணிப்பிரம்பு போல வால் அழகு நாகரே**
> **சிறு சுளகு போலே படமெடுக்கும் நாகரே**
> **குண்டு முத்துப்போலேப் பல்லழகு நாகரே”** (நா.இ.,கோ.பெரியண்ணன்,ப.230)

என்று நாட்டுப்புற இலக்கியம் குறிப்பிடுகிறது. இதைப்போல் சங்க காலத்தில் செறிந்த வளையலையுடைய விறலியர், பாம்புகள் மனம் மகிழும்படிக் கையால் தொழுது வாழ்த்தியதை,

> **“கரந்து பாம்பு ஒடுங்கும் பயம்புமார் உளவே;**
> **குறிக் கொண்டு, மரங்ங் கொட்டி, நோக்கி,**
> **செறி தொடி விறலியர் கைதொழூஉப் பழிச்ச”** (மலை.199-201)

என்ற மலைப்படுகடாம் பாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. இதில் பரற்கற்களையுடைய பள்ளநிலத்தில் உண்டாகியிருக்கும் வெடிப்புகளில் பாம்பு மறைந்து கிடக்கும் குழிகளை மனத்தால் எண்ணி கொண்டும்,

விலங்குகளிடமிருந்துத் தப்புவதற்கு மரங்களின் மேல் ஏறிப் பார்த்துக் கொண்டும், பாம்புகளைத் தொழுது விறலியர் சென்றனர் என்னும் செய்திகள் கூறப்பட்டுள்ளன. அச்சம் காரணமாக மகளிர் பாம்பு வழிபாடு மேற்கொண்டிருக்கின்றனர். மேலும் அச்சம் தரும் விலங்குகளிடம் இருந்து தற்காத்துக் கொள்ள மரங்களின் மேல் ஏறிப்பார்க்கும் இயல்பும் உடையவர்களாக இருந்திருக்கின்றனர்.

சிவபெருமான், திருமால், முருகன், கொற்றவை ஆகிய தெய்வங்களின் இருப்பிடங்கள், வழிபடும் முறைகள், மகளிர் வழிபட செல்லும் காட்சிகள், அச்சத்தின் காரணமாக வழிபடும் நிலை ஆகியவற்றைப் புறப்பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

**நடுகல் வழிபாடு**

பண்டைக் காலத்தில் போரில் இறந்த வீரனின் நினைவாக வைக்கப்படுவது நடுகல் ஆகும். இறந்தவரை நினைவுப்படுத்தும் விதமாக இக்கற்களுக்கு வழிபாடு நிகழ்த்தி, மகளிர் தொழுது வழிபட்டுள்ளனர். வெட்சித்திணையின் பகுதிகளில் ‘காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல், பெரும்படை, வாழ்த்து’ என்னும் நடுகல் வணக்கத்தின் ஆறு படிநிலைகளைத் தொல்காப்பியர்(தொல்.இளம்.புற.நூ.5;19-21) கூறியுள்ளார். இந்நடுகற்களில் வீரனின் பெயர், பெருமை ஆகியவை எழுதப்பட்டு, கள் தெளித்து, மயிற் பீலி சூட்டப்பட்டிருந்ததை,

> **“மாலை துயல மணியெறிந்து மட்டுகுத்துப்**
> **பீலி அணிந்து பெயர் பொறித்து- வேலமருள்**
> **ஆண்தக நின்ற அமர்வெய்யோற் காகென்று**
> **காண்தக நாட்டினார் கல்”** (பு.வெ..,பொது.உதாரணப்பாடல்-12)

என்ற பாடல் தெரிவிக்கிறது. இதன்படி சங்கப் பாடல்களில் (அகம்.67,புறம்.260;26) நடுகற்கள் அமைக்கப்பட்டுள்ளன. நடுகல் நடப்பட்டிருக்கும் இடத்தில் புடவையால் பந்தல் அமைக்கப்பட்டிருப்பதை,

**“இடம் பிறர் கொள்ளாச் சிறுவழி**
**படம் செய் பந்தர்க் கல் மிசையதுவே”** (புறம்.260;27-28)

என்ற புறநானூற்றுப் பாடலில் வடமோதங்கிழார் பாடியுள்ளார். மேலும் பருக்கைக் கற்கள் கொண்ட இடத்தில் மேடு அமைத்து வேங்கை மரத்தின் கிளைகளில் கொத்தாக இருக்கும் நறிய பூக்களைப் பனையோலையால் அலங்கரித்து நடுகற்களுக்குச் சூட்டுவதை,

**“பரலுடை மருங்கின் பதுக்கை சேர்த்தி,**
**மரல் வகுந்து தொடுத்த செம் பூங் கண்ணியொடு**
**அணி மயிற் பீலி சூட்டி, பெயர் பொறித்து,**
**இனி நட்டனரே, கல்லும்”** (புறம்.264;1-4)
**“போந்தை அம் தோட்டின் புனைந்தனர் தொடுத்து,**
**பல் ஆன் கோவலர் படலை சூட்ட**
**கல் ஆயினையே”** (புறம்.265;3-5)

என்ற புறநானூற்றுப் பாடல்கள் தெரிவிக்கின்றன. இது நடுகற்கள் அமைக்கப்படும் முறைமையினைச் சுட்டிக்காட்டுவதாக அமைந்துள்ளது. இவ்வாறாக அமைக்கப்பட்ட நடுகற்களுக்கு, நாள்தோறும் வழிபாடு நிகழ்ந்துள்ளது. இரவலர்கள், தாங்கள் செல்லும் வழிகளில் இருக்கும் நடுகற்களைத் தொழுதுச்(புறம்.263) சென்றுள்ளனர்.

இல்லாள் ஒருத்தி இறந்த வீரனின் நடுகல்லைத் தொழுது வழிபட்டுள்ளாள். இவள் தன் கணவன் போரில் வெற்றி பெறவும், விருந்தெதிர் பெறவும் வேண்டி நடுகல்லைத் தொழுதுள்ளாள். இக்காட்சியை,

**“நடுகல் கைதொழுது பரவும், ஒடியாது;**
**விருந்து எதிர் பெறுகதில் யானே”** (புறம்.306;4-5)

என்ற பாடலில் அள்ளூர் நன்முல்லையார் குறிப்பிட்டுள்ளார். நடுகற்களை நீராட்டி அதற்கு கள்ளினைப் படைத்து பலியிட்டும் வழிப்பட்டுள்ளனர். இதனை, ஔவையார் அதியமான் இறந்த பிறகு,

**“நடுகல் பீலி சூட்டி, நார் அரி**
**சிறு கலத்து உகுப்பவும் கொள்வன் கொல்லோ”** (புறம்.232;3-4)

என்று பாடியுள்ளதினால் தெரிகிறது. இதில் மயில் தோகைச் சூட்டி, நாரால் அரிக்கப்பட்ட தூய்மையான கள்ளினைச் சிறிய கலத்தில் ஊற்றி படைக்கும் பொழுது, அதனை அதியன் ஏற்றுக் கொள்வதில் ஐயப்பாடுக் கொண்டு ஔவையார் வருந்தும் நிலை குறிப்பிடப்பட்டுள்ளது. இதைப்போல் சிற்றூர்களில் நடுகல்லை நீராட்டி, மணப்பொருட்கள் கொண்டு புகையூட்டி பின், வீடுகளில் நன்றாக சமைக்கப்பட்டக் கள்ளினைப் பலியாகத் தந்து விடியற்காலைப் பொழுதில் வழிபடும் காட்சியை,

**“இல்அடு கள்ளின் சில்குடிச் சீறூர்ப்**
**புடைநடு கல்லின் நாட்பலி ஊட்டி,**
**நல்நீராட்டி, நெய்ந்நறைக் கொளீஇய”** (புறம்.329;1-3)

என்ற பாடல் கொண்டு அறியப்படுகிறது. மறக்குடி மகள் ஒருத்தி போரில் இறந்துபோன வீரன் ஒருவனின் நடுகல்லைத் தெய்வமாக வழிபடுவதை விட, நெல் தூவி வணங்கும் தெய்வம் வேறு எதுவுமில்லை என்று கூறுவதை,

**“கல்லே பரவின் அல்லது**
**நெல் உகுத்துப் பரவும் கடவுளும் இலவே”** (புறம்.335;11-12)

என்கின்ற மாங்குடி கிழார் பாடலில் காண முடிகிறது. இதனால் நடுகற்கள் அமைக்கப்படும் முறைக் குறித்தும், அவற்றை மகளிர் வணங்கியமை குறித்தும் அறிய முடிகிறது.

**இறப்புச் சடங்கு**

இறந்தவர்களை அடக்கம் செய்யும்போது, பல்வேறு விதமான சடங்குகள் மேற்கொள்ளப்படுகின்றன. முதலில் இறந்தவரை இல்லத்தில் நீராட்டி, புத்தாடைப் போர்த்தி, பாடையில் வைத்துப் பின் சுடுகாட்டிற்கு எடுத்துச் செல்வர். சுடுகாட்டில் இறந்தவரின் உடலைச் சிதையின் மீது வைத்து, இடமிருந்து வலமாக மூன்று முறை சுற்றி வந்து எரியூட்டி எரிப்பர் அல்லது புதைப்பர். இவ்வாறான இறுதிச்சடங்கு, அந்தந்த சமூகத்தினரின் வழக்கப்படி அமையும். இறந்தோருக்குத் திதி கொடுக்கும் சடங்கு மாசி மகமன்று, மகாளய அமாவாசையில் ஆற்றங்கரை அல்லது கடற்கரைகளின் ஓரங்களில் அந்தணர்கள் துணைக்கொண்டு நிறைவேற்றப்படும்.

சங்கப்புற இலக்கியங்களில் இறப்புச் சடங்குகளாக, இறந்தாரைப் பாடையின் மீது வைத்துச் சுடுகாட்டிற்குச் செல்லுதல், சுடுகாட்டின் காட்சிகள், தீ மூட்டி எரித்தல், தாழியிற் புதைத்தல், நினைவுச்சடங்குகள் போன்றப் பதிவுகள் காணப்படுகின்றன.

**பாடைக்கட்டுதல்**

காலங்காலமாக இறந்தவரின் உடல் பாடையில் வைத்துக் கொண்டு செல்வது மரபாகும். அதுப்போல் சங்க காலத்திலும் இறந்தவரின் உடலைப் பாடையில் வைத்து சுடுகாட்டிற்கு எடுத்துச் சென்றுள்ளனர். இவ்வாறு எடுத்துச் செல்லும் பாடையினைக் **‘கால்கழி கட்டில்’**, **‘வெள்ளில்’** என்னும் சொற்களால் வழங்கியுள்ளதைப் பின்வரும் புறநானூற்றுப் பாடல் அடிகள் தெரிவிக்கின்றன.

> **“கால் கழி கட்டிலில் கிடப்பித்”** (புறம்.286;4)
> **“வெள்ளில் நிறுத்த பின்றை”** (புறம்.360;17)
> **“வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்”** (புறம்.363;11)

இதனால் சங்க காலத்தில் பயன்படுத்தப்பட்டப் பாடை வழக்கம் பற்றி தெரிகிறது.

**இல்லச் சடங்கு**

இறந்தவரின் உடலுக்கு இல்லத்தில் சில சடங்கு முறைகள் செய்யப்படுகின்றன. இறந்தாரின் தலைமாட்டில் விளக்கேற்றி வைத்தல், இறந்தாரை எண்ணி புலம்புதல், நீராட்டுதல், கோடித் துணி போர்த்துதல் போன்றச் சடங்கு முறைகள் மேற்கொள்ளப்படுகிறது. இறந்தவரின் உரிமை மகளிரும், பிற மகளிரும் அழுது புலம்பி மார்பகங்களில் அடித்துக்கொண்டு, கைவளையல்கள் உடைத்து சிதறிய துன்ப நிலையை,

> **"முலை பொலி ஆகம் உருப்ப நூறி,**
> **மெய்ம் மறந்து பட்ட வரையாப் பூசல்**
> **ஒள் நுதல் மகளிர்"** (புறம்.25;10-12)

என்ற பாடல் அடிகளும், இளவெளிமான் இறந்தபோது, மகளிர் மாரடித்துப் புலம்பியத் துயர வெளிபாட்டை,

> **"ஊழின் உருப்ப எருக்கிய மகளிர்**
> **வாழைப் பூவின் வளை முறி சிதற"** (புறம்.237;10-11)

என்ற பாடல் அடிகளும் காட்சிப்படுத்துகின்றன.

இறந்தவருக்கு இறுதியாகக் 'கோடித்துணி' போர்த்தும் வழக்கம் இன்றும் உள்ளது. தாய்வழிச் சமூகத்தினரால் இச்சடங்குச் செய்யப்படுகிறது. இறந்த சிறுவனின் உடல் மீது தூய வெள்ளாடை போர்த்தியதை,

> **"பலர் மீது நீட்டிய மண்டை என் சிறுவனைக்**
> **கால் கழி கட்டிலில் கிடப்பி,**
> **தூ வெள் அறுவை போர்ப்பித்திலதே!"** (புறம்.286;3-5)

என்ற பாடலில் ஔவையார் பதிவு செய்துள்ளார். இதனால் சங்க காலத்தில் கோடித் துணி வெண்மை நிறம் கொண்டதாக இருந்துள்ளதை அறிய முடிகிறது.

இறந்தவரின் வீட்டில் பறைகள் முழங்குவதுண்டு. இதற்கு நெய்தல் பறையென்றுப் பெயர் வழங்கப்பெற்றது. ஒரு இல்லத்தில் மண முழவும், மற்றொரு இல்லத்தில் சாவுப்பறையும் ஒலிக்கின்றது. இதைக் கேட்ட பக்குடுக்கை நன்கணியார் என்றப் புலவர் உலகைப் படைத்த இறைவனைப் பண்பில்லாதவன் என்று குறிப்பிட்டுள்ளார். இதனை,

> **“ஓர் இல் நெய்தல் கறங்க, ஓர் இல்**
> **ஈர்ந் தண் முழவின் பாணி ததும்ப”** (புறம்.194;1-2)

என்ற அடிகள் விளக்கிக் காட்டுகின்றன. இதனால் இறந்தவர்களுக்கு, இல்லத்தில் செய்யப்படும் சடங்கு முறைகள் குறித்து அறிய முடிகிறது.

**சுடுகாட்டுச் சடங்கு**

சுடுகாடு ‘ஈமப்பெருங்காடு’ என்றும், ‘முதுகாடு’ என்றும் அழைக்கப்படுகிறது. இது கள்ளிச் செடிகளும், முள்ளியும் அடர்ந்து, களர் நிலமாகக் காட்சியளிப்பதை,

> **“கள்ளி போகிய களரி மருங்கின்”** (புறம்.360;16)
> **“கள்ளி வேய்ந்த முள்ளிஅம் புறங்காட்டு”** (புறம்.363;10)

என்ற அடிகள் தெரிவிக்கின்றன. மேலும், ஊர்களுக்கு வெளியிருப்பதால் ‘புறங்காடு’ என்றும் அழைக்கப்படுகிறது. இச்சுடுகாட்டில் பேய்கள், ஆந்தைகள், கழுகுகள் போன்றவைச் சுற்றித் திரியும். பிணங்களைச் சுடும் விறகடுக்கு ‘ஈமம், ஈம விறகு’ எனப்படுகிறது. இதனை,

> **“கரி புற விறகின் ஈம ஒள் அழல்”** (புறம்.231;2)
> **“பெருங் காட்டுப் பண்ணிய கருங் கோட்டு ஈமம்”** (புறம்.246;11)

என வரும் பாடல் அடிகள் தெரிவிக்கின்றன. இவ்வாறு நன்கு உலர்ந்த கரிய விறகுகளை அடுக்கிச் சிதையமைக்கப்படுவதை,

> **“வெள்ளிடைப் பொத்திய விளை விறகு ஈமத்து,**
> **ஒள் அழற் பள்ளிப் பாயல் சேர்த்தி”** (புறம்.245;4-5)

என்றப் பாடலும், புலையனின் ஏவலுக்குப் பின் பிணத்தைச் சுடும் காட்சியை,

> **“புலையன் ஏவ, புல்மேல் அமர்ந்து உண்டு,**
> **அழல்வாய்ப் புக்க பின்னும்”** (புறம்.360;19-20)

என வரும் பாடல் அடிகளாலும் அறிய முடிகின்றன. இறந்தவர்களை எரிக்கும் சடங்கு முறைகள் பற்றி இதனால் அறிய இயல்கிறது.

இறந்தவர்களைத் தாழியுள் வைத்துப் புதைக்கும் வழக்கம் சங்க காலத்தில் இருந்துள்ளது. தாழி, என்றால் ‘அரிதாரம், குடம், சாடி, சிவதை, பரணிநாள்’ என்று அகராதிகளில் பொருள் கூறப்பட்டுள்ளன. மண்ணால் செய்யப்பட்டச் சாடி போன்ற வடிவுடையதாகத் தாழி இருந்துள்ளது. இவ்வாறு அடக்கம் செய்யும் தாழி, இறந்தவரின் பெருமைக்குரிய வகையில் பெரியதாக அமைதல் வேண்டுமென்னும் எண்ணத்தை,

> **“கொடி நுடங்கு யானை நெடுமாவளவன்**
> **தேவர் உலகம் எய்தினன் ஆதலின்,**
> **அன்னோற் கவிக்கும் கண் அகன் தாழி”** (புறம்.228;10-15)

என்ற பாடலில் ஐயூர் முடவனார் அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இப்பாடலில் சோழன் நெடுமாவளவன் இறந்ததால் அவனின் பெரும்புகழ் கூறி, அதற்கேற்பத் தாழி செய்யச்சொல்லும் காட்சி இடம் பெற்றுள்ளது. இதைப்போல், இளவெளிமான் இறந்தபோது,

> **“கவிசெந் தாழிக் குவிபுறத்து இருந்த**
> **செவிசெஞ் சேவலும் பொகுவலும் வெருவா”** (புறம்.238;1-2)

என்று பெருஞ்சித்திரனார் பாடியிருப்பதால், இறந்தவரின் உடல் வைக்கப்பட்டத் தாழியினைக் கவிழ்த்துப் புதைக்கும் முறைப் பற்றி அறியப்படுகிறது. இதனால் இறந்தவரின் உடல் எரியூட்டியும், தாழியிற் வைத்தும் அடக்கம் செய்யப்படும் நிலை அக்காலத்தில் இருந்தது வெளிப்படுகிறது. மேலும், ஆண், பெண் என்று கருதாமல் பிணம் என்பதன் அடிப்படையில் எரியூட்டுதல், புதைத்தல், தாழியில் அடக்கம் செய்தல் போன்ற முறைகளில் இறுதிக்கடன் செய்துள்ளனர் என்பது பெறப்படுகிறது.

**நினைவுச் சடங்கு**

இறந்தவர்களின் நினைவாக மேற்கொள்ளப்படும் சடங்கு நினைவுச் சடங்காகும். சங்க காலத்தில் இறந்தவரை எண்ணி பிண்டமிட்டு வழிபடும் நினைவுச் சடங்கு இருந்துள்ளது. ‘பிண்டம் என்றால் சோறு என்றும், பிண்டம் வைத்தல் என்றால் பிதிர்கடன் செய்தல்’ என்றும் ந.கதிரைவேற்பிள்ளை அவர்களின் தமிழ்மொழி அகராதி பொருள்(ப.1024) தந்துள்ளது. இதன்படி சங்க கால மகளிர் தன் கணவன் இறந்தபிறகு, அவனுக்கு உணவளிக்கும் முறையாகப் பிண்டமிட்டு வழிபாடு நிகழ்த்தியுள்ளார்கள். வேள்எவ்வியின் மனைவி, பிடியின் அடி அளவுக் கொண்ட சிறிய இடத்தை மெழுகி தருப்பைப் புல் பரப்பி அதன்மேல் இனிய சிறு பிண்டம் வைத்து வழிபடுவதை,

> **“பிடி அடி அன்ன சிறு வழி மெழுகி,**
> **தன் அமர் காதலி புல் மேல் வைத்த**
> **இன் சிறு பிண்டம் யாங்கு உண்டனன்கொல்”** (புறம்.234;2-4)

என்ற வெள்ளெருக்கிலையாரின் பாடல் அடிகளிலும், நிரம்பிய கற்பினையுடைய மற்றுமொருப் பெண், தன் கணவன் விண்ணுலகுப் புகுந்த பின்னும் அவனுக்கு உணவிட விரும்புகின்றாள். அதன் பொருட்டாக,

முறத்திணை மெழுகும் அப்பெண் சாணங் கரைக்கத் தனது கண்ணீரையேக் கொண்டாள் என்பதை,

> **“உயர் நிலை உலகம் அவன் புக… வரி**
> **நீறு ஆடு சுளகின் சீறிடம் நீக்கி,**
> **அழுதல் ஆனாக் கண்ணள்**
> **மெழுகும், ஆப்பி கண் கலுழ் நீரானே”** (புறம்.249;11-14)

என்கின்ற பாடல் அடிகளிலும் காண முடிகின்றன. இதன் வழியாக மகளிர் பிண்டமிட்டு வழிபடும் சடங்கு முறைகளை மேற்கொண்டுள்ளனர் என்பது தெரிகிறது. இறந்தோருக்காகச் செய்யப்படும் இல்லச்சடங்கு, சுடுகாட்டுச்சடங்கு, நினைவுச் சடங்குப் போன்றவைகள் சங்கப் புற இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளமைக் குறித்தும், இவற்றில் மகளிர் பங்குப் பெறும் விதம் குறித்தும் இதன் வழியாக அறிய இயல்கிறது.

**நம்பிக்கைகள்**

இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ள நம்பிக்கைச் செய்திகளைக் கொண்டு அந்தந்தக் காலங்களில் வாழ்ந்த மனிதனின் உணர்ச்சிகளைத் தெரிந்துக் கொள்ள முடிகிறது. நம்பிக்கைகளை ‘உளஉருவாக்கம்’ என்று உளவியல் அறிஞராக ஜேம்ஸ்பிஸ்செட் (James Bissett pratt, The psychology of Religious Belif p.32) குறிப்பிட்டுள்ளார். மனிதன் பிறந்தது முதல் இறக்கும் வரையுள்ள நம்பிக்கைகள் அவனது வாழ்வில் கலந்து, காலப்போக்கில் சமுதாய மதிப்பைப் பெறுகின்றன. சமூக அறிவியல் கலைக் களஞ்சியம் ‘ஒரு வளர்ச்சியடைந்த மனிதனிடம் பத்தாயிரக் கணக்கான நம்பிக்கைகளும், நூற்றுக்கணக்கான போக்குகளும், எண்ணிக்கைக்குட்பட்ட சில குறிக்கோள்களும் இருக்கின்றன’ என்று (International Encyclopedia of the social sciences vol.1&2 p.455) சுட்டிக்காட்டியுள்ளது.

நம்பிக்கை என்பது சான்றுகளோடு நிறுவப்படக் கூடியதாகவும், மூடநம்பிக்கை என்பது நிறுவப்பட முடியாததாகவும் உள்ளது. இதன்படி சங்கப்புற இலக்கியங்களில் குறிப்பிடப்படும் மகளிர் விரிச்சி கேட்டல், நிமித்தம் பார்த்தல், கண் துடித்தல், பேய்கள் மற்றும் மறுபிறப்புப் போன்ற நம்பிக்கைகள் கொண்டு வாழ்ந்தமைக்கான ஆதாரங்கள் காணப்படுகின்றன.

**விரிச்சிக் கேட்டல்**

விரிச்சி என்பதற்கு 'வாய்ச்சொல் என்றும், விரிச்சியோர்த்தல் என்பதற்கு நற்சொல் கேட்க விரும்பி நிற்றல்' என்றும் பொருள் (கழகத் தமிழ் அகராதி, ப.857) கூறப்பட்டுள்ளது. ஒரு செயல் தொடங்குவதற்கு முன்பு முதலில் சகுனம் பார்ப்பதென்பது, பழங்காலம் முதல் தற்காலம் வரை மக்களின் நம்பிக்கையாக உள்ளது. இதனைச் சங்க காலத்தில் விரிச்சி எனவும் நற்சொல் கேட்டல் எனவும் கூறுவர். 'வேண்டியப் பொருளின் விளைவைப் பற்றி அறிவதற்காக, இருள் கவியும் மாலைப்பொழுதில் சொல் கேட்டு நிற்பது விரிச்சியாகும்' என்று புறப்பொருள் வெண்பாமாலைக் (பு.வெ.நூ.3) கூறியுள்ளது. இக்காலத்தில் விரிச்சியினை 'அசரீரி' என்று வழங்கப்படுவதாக க.திலகவதி(சங்ககால மகளிர் வாழ்வியல்,ப.289) குறிப்பிட்டுள்ளார். சாதுவன் இறந்துவிட்டான் என்ற செய்தியறிந்து அவன் மனைவி ஆதிரைத் தீப்பாய முற்படுகிறாள். அப்போது, அசரீரி ஒன்றுத் தோன்றிச் சாதுவன் இறக்கவில்லை விரைவில் திரும்புவான் என்றச் சொல் கேட்டு ஆதிரை மகிழ்கிறாள். இதனை,

**"ஆதிரை கேள் உன் அரும்பெறல் கணவனை**
**.... .... .... ....**
**அந்தரம் தோன்றி அசரீரி அறைதலும்"** (மணி.16;37-44)

என்ற அடிகளில் மணிமேகலைக் காப்பியம் புலப்படுத்துகிறது. 'வருவதை முன்னரே தெரிவிப்பது விரிச்சியாகும்' என்று சு.வித்தியானந்தன்(தமிழர்

சால்பு,ப.196) குறிப்பிட்டுள்ளார். மக்கள் ஒரு செயல் குறித்து எண்ணிக் கொண்டிருக்கும்போது மற்றவரின் வாய்ச்சொல்லில் இருந்து பிறக்கும் சொற்களைக் கொண்டு அச்செயலின் நன்மை, தீமைப் பலன்களை மதிப்பிட்டு நம்பினர்.

கல்வி, பொருள், போர், தூது, காரணமாகத் தலைவியை விட்டுப் பிரியும் தலைவன் விரைவில் திரும்பி வருவதாகச் சொல்லிச் செல்வான். அவன் வரவை எதிர்நோக்கித் தலைவி விரிச்சி கேட்டலில் ஈடுபடுவாள். இவ்வகையில் முதுபெண்டிர் நாழியில் பூ, நெல், நீர்க் கொண்டு விரிச்சி கேட்பர்.

விரிச்சிக் கேட்கும்போது, பெருமுது பெண்டின் சொல் தடுமாறினால் துன்பம் வருவதுண்டு என அஞ்சினர். இதனை,

**“நெல்நீர் எறிந்து விரிச்சி ஓர்க்கும்**
**செம்முது பெண்டின் சொல்லும் நிரம்பா”** (புறம்.280;6-7)

என்ற புறநானூற்று அடிகள் தெரிவிக்கின்றன. இதனால் சங்க கால மகளிரின் விரிச்சிக் கேட்கும் செயல் குறித்து அறிய முடிகிறது.

**நிமித்தம் பார்த்தல்**

ஒரு செயல் தொடங்கும் முன்பு நாள், நேரம், நிமித்தம் பார்த்துத் தொடங்கினால் அச்செயல் வெற்றியடையும் என்பது சங்க கால மக்களின் நம்பிக்கையாகும். இது இன்றும் நம்பப்பட்டு வருகிறது. ‘நிமித்தம் என்பது பின்னர் நிகழும் நன்மை, தீமைகளை முன்னரே அறிவிக்கும் குறி என்று இ.சுந்தரமூர்த்தி அவர்கள் (இலக்கியச்சுடர் ப.11) குறிப்பிட்டுள்ளார். ‘நாளும் கோளும் செய்வதை நல்லோர் செய்யார்’ என்பது பழமொழியாகும்.

சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள நிமித்தங்களை ‘நாள் நிமித்தம், புள் நிமித்தம், மாந்தர் நிமித்தம், தெய்வ நிமித்தம், ஏனைய

நிமித்தம்’ என சுசீலா கோபால கிருட்டினன் வகைப்படுத்திக் கூறியுள்ளார். நிமித்தங்கள் நன்னிமித்தம், தீ நிமித்தம் என இருவகையாக அமைந்துள்ளன. பொதுவாக நன்னிமித்தத்தில் செயல்களைத் தொடங்குவதென்பது வழக்கமான ஒன்றாகும். அதன்படி சங்கப் புலவர்களில் பரிசில் பெற்ற கூத்தர், பொருநர், பாணர் ஆகியோரை வழிப்படுத்தும்போது, அவர்கள் புறப்பட்ட நேரம் நல்ல முகூர்த்தமும், நன்னிமித்தமுமாக இருப்பதை,

**“உள்ளினிர் சேறிர் ஆயின், பொழுது எதிர்ந்த**
**புள்ளினிர் மன்ற, என் தாக்குறுதலின்”** (மலை.65-66)

என்ற அடிகளில் பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் பாடியிருப்பதைக் காண முடிகிறது. வல்வில் ஓரியைப் பாடிச் சென்றக் கழைதின் யானையார் பரிசில் கிடைக்கப் பெறாமைக்கு எதிர்ப்பட்ட புள் நிமித்தத்தையும், நேரத்தையும் பழிக்கும் செயல்,

**“புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை,**
**உள்ளிச் சென்றோர் பழியலர்”** (புறம்.204;10-11)

என வரும் புறநானூற்று அடிகள் மூலம் தெரிகின்றது. புள் எனப்படும் பறவைகளின் ஒலியையும், அவற்றின் வலம் மற்றும் இடப் புற இயக்கத்தையும் கொண்டு நிமித்தங்கள் கணிக்கப்படுகின்றன. ‘நன்மையின் பால் உள்ள ஆர்வமும் தீமையின் பால் உள்ள அச்சமும் பெரும்பான்மையான நம்பிக்கைகட்கு அடிப்படை’ என்று அ.தட்சிணாமூர்த்தி அவர்கள் (தமிழர் நாகரிகமும் பண்பாடும்,ப.205) விளக்கிக் காட்டியுள்ளார். நிமித்தம் குறித்த நம்பிக்கைகள் சங்ககால மக்களிடம் பரவி காணப்பட்டுள்ளது. விடியற்காலையில் பறவைகளின் ஒலிக் கேட்டுப் பயணம் மேற்கொள்ளும் பழக்கத்தை,

**“பனி சேண் நீங்க இனிதுஉடன் துஞ்சி,**
**புலரி விடியல் புள் ஓர்த்துக் கழிமின்”** (மலை.447-448)

என்ற அடிகள் தெரிவிக்கின்றன. பறவையின் தீய சகுனங்கள் தீதாகத் தோன்றி இடைநின்றுத் தடுத்தாலும், மலையமான் திருமுடிக்காரியைப் பாடியவர்கள், பரிசுப் பெறாமல் திரும்பியதில்லை என்பது,

**"நாள் அன்று போகி, புள் இடை தட்ப,**
**.... .... .... ....**
**பீடு கெழு மலையற் பாடியோரே"** (புறம்.124)

என்ற பாடலின் மூலம் தெளிவாகிறது. இதைப்போல் பறவையின் தீயச் சகுனத்திற்கு மாறாக வெற்றியையுடையவன் என்பதை,

**"உட்பகை ஒருதிறம் பட்டெனப், புட் பகைக்கு**
**ஏவான் ஆகலின், சாவேம் யாம் என"** (புறம்.68;11-12)

இவ்வடிகள் உணர்த்துகின்றன. இதனால் பறவைக் குறித்த நிமித்தங்கள் சங்க காலத்தில் நிலவியப்போதிலும் அதற்கு மாற்றுக் கருத்துடையவர்களாகக் கபிலரும், பிசிராந்தையாரும் இருந்துள்ளனர் என்பது தெரிய வருகிறது.

பண்டைக் கால மக்கள் ஆந்தை அலறுதல் தீய நிமித்தமாகவும், காகம் கரைதல், நாரை உயரப் பறத்தல் நல்ல நிமித்தங்களாகவும் கருதினர். பிரிந்திருக்கும் தலைவனின் வரவை எதிர்நோக்கி இருக்கும் மகளிர் நன்னிமித்தம் எதிர்பார்த்து இருப்பதையும், தாங்கள் அணிந்திருக்கும் வளையல்கள் இறுகினால் அதை நன்னிமித்தம் என எண்ணுவதையும் அகப்பாடல்கள்(குறு.218;1-3,260;3, ஐங்.218;2) சுட்டுகின்றன.

தலைவி, தன் தலைவனின் விழுப்புண் கொடுமையைக் கண்டு வருந்துகிறாள். தலைவன் உயிர் பிழைத்தல் அரிதென்பதை உணர்த்தும் தீய நிமித்தங்களாக, மாளிகையில் ஏற்றி வைத்த விளக்குகள் அணைந்தன, கண்கள் துயில் விரும்பியது, அச்சம் தரும் வகையில் கூகையும் அலறியது. இதனை,

**“நெடு நகர் வரைப்பின் விளக்கும் நில்லா;**
**துஞ்சாக் கண்ணே துயிலும் வேட்கும்;**
**அஞ்சுவரு குராஅல் குரலும் தூற்றும்”**(புறம்.280;3-5)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. தீய நிமித்தம் கண்டு மகளிர் அச்சமுறும் செய்தி இதன் வழியாகப் பெறப்படுகிறது.

**கண் குறித்த நம்பிக்கை**

சங்ககால மக்கள் கண் துடிப்பின் மூலம் நன்மை, தீமைகளைக் கண்டறியும் நம்பிக்கைகளைக் கொண்டிருந்தனர். இதில் மகளிர்க்கு இடக்கண்ணும், ஆடவருக்கு வலக்கண்ணும் துடித்தால் நன்மை உண்டாகும் எனவும், மகளிரின் வலக்கண், ஆடவரின் இடக்கண் துடித்தால் தீங்குண்டாகும் எனவும் நம்பப்பட்டது. தலைவியைப் பிரிந்து சென்றத் தலைவன் விரைவில் திரும்புவான், என்பதை உணர்த்தும் வகையில், தலைவியின் இடக்கண் துடித்தது. இதனை தோழி தலைவியிடம்,

**“நல் எழில் உண்கணும் ஆடுமால் இடனே”**(கலி.11;22)

என்று கூறி ஆற்றுப்படுத்துகிறாள். சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் இந்திர விழவூரெடுத்தக் காதையின் இறுதியில், பிரிந்தக் கோவலன் திரும்பி வருவதைக் காட்டும் விதமாகக் கண்ணகிக்கு இடக்கண்ணும், கோவலன் பிரிந்து செல்ல இருப்பதை அறிவுறுத்தும் விதமாக மாதவிக்கு வலக்கண்ணும் துடித்ததை,

**“கண்ணகி கருங்கணும்; மாதவி செங்கணும்,**
**உள்நிறை சுரந்து அகத்து ஒளித்து நீர் உகுத்தன;**
**எண்ணுமுறை இடத்தினும் வலத்தினும் துடித்தன”**(சிலம்பு.5;237-239)

என்ற அடிகளில் குறிப்பிட்டுள்ளார். இதில் கண்ணகிக்கு நன்மையும், மாதவிக்குத் துன்பமும் நேரயிருப்பதை ஆசிரியர் காட்டியுள்ளார்.

தீய எண்ணம் கொண்ட ஒருவரின் பார்வைத் துன்பத்தை உண்டாக்கும் என மகளிர் எண்ணினர். சங்க மகளிர் கண்ணேறு கழித்தலில் பெரும் நம்பிக்கைக் கொண்டிருந்துள்ளனர். தீய நோக்கம் கொண்ட ஒருவரின் பார்வையும் தீமையை விளைவிக்கும் என்பதன் அடிப்படையில் கண்ணேறு கழித்திருக்கின்றனர். கண்ணேறு பட்டவர்களை உப்பு, மிளகாய், கால்தட மண், முடி, கூரை ஓலை போன்ற பல பொருட்கள் கொண்டு சுற்றி அப்பொருட்களை நீர் அல்லது நெருப்பில் இடுவர். இவ்வாறு செய்வதால் பிணியும், கண்ணேறும் நீங்குவதாக நம்பினர். கண்ணேற்றினால் தீங்கு ஏற்படாமலிருக்கக் குறமகள் நெய், வெண்சிறுகடுகு கலந்து தூவியதை,

**“நெய்யோடு ஐயவி அப்பி, ஐதுஉரைத்து”** (திரு.228)

என்ற திருமுருகாற்றுப்படை அடியால் தெரிந்துக் கொள்ள முடிகிறது. இதனால் சங்க கால மகளிரிடம் கண் குறித்த நம்பிக்கை நிலவியதை அறிய முடிகின்றது.

### கனவு குறித்த நம்பிக்கை

கனவு என்பதற்கு ‘கனா, தூக்கம், மயக்கம்’ என்று பொருள் அமைந்துள்ளன. அவ்வகையில், நினைவுலகில் மனதால் அடக்கப்பட்ட உணர்ச்சிகள் தூக்கத்தில் காட்சியாகக் காணப்படுகிறது. இக்காட்சிகள் நன்மையாகவும், தீமையாகவும் அமையும். ‘இலக்கியங்களில் உவமை, உள்ளுறை நிலையில் உணர்வு வெளியீட்டிற்காகக் கனவுகள் பயன்படுத்தப்படுகின்றன எனவும், கனவால் எதிர்காலத்தில் விளையும் நன்மை, தீமைகளைக் கணித்தனர்’ எனவும் ச.வே.சுப்பிரமணியன் அவர்கள் (இலக்கியக் கனவுகள், ப.18) குறிப்பிட்டுள்ளார். எதிர்காலத்தில் நிகழப்போவதை முன்னர் அறிவிக்கும் விதமாகக் கனவுகள் காட்சியாகின்றன

என்பது சங்க கால மகளிரின் நம்பிக்கையாக இருந்துள்ளது. தொல்காப்பியர் கனவு குறித்து,

**“காதல் கைம்மிகக் கனவின் அரற்றலும்”**(தொல்.பொருள்.இளம்.களவு.25)
**“கண்துயில் மறுத்தல் கனவொடு மயங்கல்”**(தொல்.பொருள்.இளம்.மெய்.22)
**“கனவும் உரித்தால் அவ்விடத்தான்”**(தொல்.பொருள்.இளம்.பொருள்.3)

என்றவாறு குறிப்பிட்டுள்ளார். பகற்பொழுதில் நடக்கும் நிகழ்ச்சிகளில் ஆழ்மனதில் பதியும் செய்திகள் இரவில் கனவாகத் தோன்றுகிறது. கனவு ஓர் அழகிய, இனிய இயல்புடையது என்பதை,

**“கனவு எனப்பட்டது ஓர் காரிகை நீர்த்தே”**(கலி.92;2)

என்ற அடியில் கலித்தொகை வெளிப்படுத்துகிறது. தலைவன் தலைவியை விட்டு பிரிந்துச் செல்லும் காலத்தில் தலைவி தலைவனோடு சேருமாறுக் காணும் கனவு காட்சிகள், (கலி.142;33-36), தலைவன் வெப்பம் மிகுந்தப் பாலைவனத்தில் தலைவியைக் கண்டு வருந்தும் கனவு போன்ற காட்சிகளை அக இலக்கியங்கள்(அகம்.39;23) குறிப்பிடுகின்றன. பகலில் காணும் கனவு பலிக்காது என்பதும், விடியற்காலையில் காணும் கனவு உடனே பலிக்குமென்பதும் மக்களின் நம்பிக்கையாக உள்ளது. கனவில் நல்நிகழ்வுகள் கண்டால் நல்லது நடக்கும், தீய நிகழ்வுகளைக் கண்டால் தீயது நடக்கும் என்று நம்பினார்.

கட்டபொம்மன் கதையில், “வாழைத்தோப்பு அழியக் கண்டேன் அய்யோ, மல்லிகைப் பூவும் கருகக் கண்டேன்.... பொல்லாத சொர்ப்பனங் கண்டேனென்றாள்” என்று வெள்ளையம்மாள் புலம்பும் காட்சி இடம்பெற்றுள்ளது. இது கட்டபொம்மனுக்கு தீய ஆபத்து நேரயிருப்பதை முன்னரே தெரிவிக்கும் கனவாக அமைந்துள்ளது. சிலப்பதிகாரத்தில் கண்ணகி தன் கணவனுடன் சேர்வதாகவும் பின் தீயது நேரயிருப்பதையும்,

“கடுக்கும் என் நெஞ்சம்; கனவினால், என்கை”(சிலம்பு.9;45) என வரும் கனாத்திறம் உரைத்த காதையின் அடி தெரிவிக்கின்றது. பாண்டிமாதேவிக் கண்டத் தீயக் கனவுக் காட்சியை,

> **“குடையொடு கோல்விழ நின்று நடுங்கும்**
>
> **….　　….　　….　　….**
>
> **வருவதோர் துன்பம் உண்டு மன்னவற்கு யாம்உரைத்தும்”** (சிலம்பு.20;2-11)

என வரும் வழக்குரைக் காதையில் இளங்கோவடிகள் பதிவு செய்துள்ளார். இமயவரம்பன் நெடுஞ்சேரலாதனைப் பிரிந்திருந்த மனைவி, வருத்தத்தோடு இருக்கும் சமயத்தில் இரவில் உறங்காதக் கண் அரிதாக உறக்கம் கொல்லும் சமயத்திலும் மன்னனைப் பற்றியக் கனவுக் கண்டு வருந்துகின்றாள். இதை,

> **“எல்லு நனி இருந்து, எல்லிப் பெற்ற**
> **அரிது பெறு பாயற் சிறு மகிழானும்**
> **கனவினுள் உறையும், பெருஞ்சால்பு”** (பதிற்று.19;11-13)

என்ற பதிற்றுப்பத்து அடிகளில் புலப்படுத்தப்பட்டுள்ளன. இதனால் கனவிலும் தலைவனின் நினைவுக் கண்டு வருந்தும் தலைவியின் செயல் தெரிகிறது.

**மறுபிறப்பு நம்பிக்கை**

பிறந்திருக்கும் இப்பிறப்பு ஒழித்து புதிதாகப் பிறக்கும் பிறப்பு மறுபிறப்பாகும். மாணிக்கவாசகர்,

> **“புல்லாகிப் பூடாய் புழுவாய் மரமாகிப்**
> **பல்விருக மாகி பறவையாய்ப் பாம்பாகிக்**
> **கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்**
> **வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்**
> **செல்லஅ நின்றவித் தாவர சங்கமத்துள்**
> **எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்”** (மாணி.திரு.சிவபுராணம்,25-31)

என்று திருவாசகத்தில் 'எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்தேன்' என்று குறிப்பிட்டுள்ளார். மனிதனுடைய பாவப் புண்ணியங்களுக்கேற்பப் பிறவிகள் அமையும் என்பதை, சிலப்பதிகாரத்தில் கோவலனின் ஊழ்வினைக் காதை விளக்குகிறது. கோவலன் முற்பிறவியில் பரதன் என்ற பெயரில் வாழ்ந்து வந்தபோது, பொற்கொல்லன் ஒருவனை பகை நாட்டு ஒற்றன் என தவறாக காட்டி கொடுத்ததன் விளைவாக இப்பிறவியில் கோவலன் தவறாக காட்டிக் கொடுக்கப்பட்டான் எனக் காப்பியத்தில் (சிலம்பு.23;151-170) குறிப்பிடப்பட்டுள்ளது. இதனால் பிறப்பானது தொடர்ந்து வரும் என்பதை இலக்கியங்கள் வழி உணரமுடிகிறது.

பண்டைக் கால மக்கள் மறுபிறப்புப் பற்றிய நம்பிக்கைக் கொண்டவர்களாக இருந்துள்ளனர். வாழுங்காலத்தில் செய்யும் நன்மை, தீமைகளின் பயன்கள் மறுப்பிறப்பில் தம்மை வந்து சேரும் என்பதில் உறுதியோடு இருந்தனர். கபிலர் இப்பிறவியில் பாரியோடு நட்பு கொண்டு இன்புற்றிருந்தது போல, மறுபிறவியிலும் அவனோடு சேர்ந்திருக்கும் படி வேண்டுவதைப் புறநானூற்று அடிகள்(236;10-12) குறிப்பிடுகிறது. இப்பிறப்பில் நன்மை செய்தால் மறுப்பிறப்பில் துன்பம் வருவதில்லை என்பதை,

**"இம்மை நன்று செய் மருங்கில் தீது இல் என்னும்**
**தொன்றுபடு பழமொழி"** (அகம்.101;1-3)

என்ற அகநானூற்று அடிகள் சுட்டுகின்றது. ஆதலால் நன்மைச் செய்து வாழ்பவர் நல்லுலகம் எய்துவர் என்பது பெறப்படுகிறது. புதல்வர்களைப் பெற்றவர்கள், இப்பிறவியில் புகழ்கொண்டு சிறப்புறுவதுடன், மறுப்பிறப்பிலும் குற்றமற்ற வாழ்க்கையினை அடைவர் என எண்ணினர். இதனை,

**"கணவர் உவப்ப, புதல்வர்ப் பயந்து"** (மதுரை.600)
**"இம்மை உலகத்து இசையொடும் விளங்கி,**
**மறுமை உலகமும் மறு இன்று எய்துப,**
**…. …. ….. ….**

**சிறுவர்ப் பயந்த செம்மலோர்”**(அகம்.66;1-4)

என்ற சங்கப்பாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. இதில் ‘கணவர் உவப்ப’ என்பதற்கு தம் கணவர் இம்மை மறுமையிற் பெரும்பயன் பெற்றார் என்று மகிழும்படி பிள்ளைகளை மகளிர் ஈன்றனர்’ என்று நச்சினார்க்கினியார் உரை (பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியார் உரையும் ஊ.வே.சா. பதிப்பு,ப.407) வரைந்துள்ளார். இதனால் இப்பிறவியின் செயல்களுக்கு ஏற்ப மறுபிறப்பு அமையும் என்ற நம்பிக்கைச் சங்க கால மக்களிடம் இருந்துள்ளமைப் பற்றி தெரிந்துக் கொள்ள முடிகிறது.

**பேய் குறித்த நம்பிக்கை**

பேய்த்தனம் என்றால் ‘அறிவின்மை’ என்பது பொருளாகும். அறிவில்லாத ஓர் உருவம் பேய் என வழப்பட்டுள்ளது. சங்க கால மக்கள் பேய்கள் இருந்ததென நம்பினர். பேய்கள் போர்க்களம், சுடுகாடு, மரங்கள், போன்ற இடங்களில் தங்கியிருப்பதாகக் கருதப்பட்டது. இவைகள் இரவு நேரங்களில் ஊர்களுக்குள் வலம் வருவதாகவும், எருமையை வாகனமாகக் கொண்டது எனவும் மக்கள் நம்பினார்கள். பேய்கள் சுடுகாட்டில் திரிந்து தான் நினைத்தவற்றை எல்லாம் செய்து அச்சுறுத்தும் என்பதை,

**“பேஎய் ஆயமொடு பெட்டாங்கு வழங்கும்”**(புறம்.238;4)
**“கவைத் தலைப் பேய்மகள் கழுது ஊர்ந்து இயங்க”**(பதிற்று.13;15)
**“பேயும் அணங்கும் உருவு கொண்டு, ஆய்கோல்**
**கூற்றக் கொல்தேர், கழுதொடு கொட்ப”**(மதுரை.632-633)

என வரும் பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. போரில் இறந்துப் போனத் தன் கணவரின் உடலைப் பேய்கள் தீண்டாதவாறு மனைவி காத்து நிற்பதை,

**“இன்னகை மனைவி பேஎய் புண்ணோன்**
**துன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சி”**(தொல்.பொருள்.இளம்.புற.19;10-11)

என்ற நூற்பாவில் தொல்காப்பியர் காட்டியுள்ளார். இவ்வாறு மகளிர் காத்து நிற்பதற்குக் காரணம் பேய்களினால் உயிரிழப்பு நேரக்கூடுவதாலும், அதன் அச்சம் தரும் தோற்றமும் ஆகும். பேய்களிலும் ‘பேய்மகள்’ என வழங்கும் வழக்கம் சங்க காலத்தில் இருந்துள்ளதைப் புலவர்கள் பாடியுள்ளப் பாடல்களால் அறிய முடிகிறது.

**பேய்மகளின் தோற்றம்**

போர்க்களத்தில் இறந்துப் போன வீரர்களின் புண்களைத் தோண்டி தின்றதனால் உண்டான இரத்தம் தோய்ந்தக் கையினைக் கொண்டு தமது மயிரினைக் கோதி, பறையின் தாளத்திற்கு ஏற்ப ஆடுவதையும், புலால் நாற்றம் வீசும் உடம்பையும் கொண்டிருப்பதை,

> **“குருதிச் செங் கைக் கூந்தல் தீட்டி,**
> **நிறம் கிளர் உருவின் பேஎய்ப் பெண்டிர்”** (புறம்.62;3-4)
> **“பேஎய் மகளிர் பிணம் தழூஉப் பற்றி,**
> **விளர்ஊன் தின்ற வெம்புலால் மெய்யர்”** (புறம்.359;4-5)

என வரும் புறநானூற்றுப் பாடல் அடிகள் எடுத்தியம்புகின்றன. தீப்பிழம்புப் போன்ற நாக்கையும், வெள்ளாட்டுக் குட்டிகளை அணிகலனாக அணிந்துள்ளக் காதுகளையும், பிளவுகள் அதிகமான அடியையும் கொண்ட பேய் மகளின் தோற்றத்தைச் சிறுபாணாற்றுப்படை அடிகளும்(196-199), அகன்ற வாயையுடைய அச்சம் தரும் பேய்மகள் சுடுகாட்டில் மொய்த்து இருப்பதைப் புறநானூற்றுப் பாடல்களும் (356;3-4,369;15) குறிப்பிடுகின்றன.

பேய்மகள் போர்க்களத்தில் நிணம் தின்றதால் உண்டான மகிழ்ச்சியில் பிணங்களைத் தழுவி துணங்கைக் கூத்தாடியதை,

> **“நிணம்தின் வாயள் துணங்கை தூங்க”** (திரு.56)
> **“நிணம் வாய்ப் பெய்த பேய்மகளிர்**
> **இணைஒலி இமிழ் துணங்கைச் சீர்”** (மதுரை.25-26)

என வரும் புறப்பாடல்களால் அறிந்து கொள்ள முடிகிறது. மேலும், கோட்டான்களின் குழறுகின்றக் குரலோசைக்கேற்ப பேய்மகள் ஆடுகின்ற நிலையைப் பதிற்றுப்பத்துப் பாடல்(22;36-37) தெரிவிக்கிறது. இதனால் பேய்மகளின் அச்சம் தரும் தோற்றத்தையும், மகிழ்ந்து துணங்கைக் கூத்தாடியதையும் அறிய முடிகிறது. இத்தகைய தோற்றத்தைக் கண்டு மகளிர் பயமுற்றனர்.

பேயினிடம் இருந்து தங்களைக் காத்துக்கொள்ளப் பல முயற்சிகளை மகளிர் மேற்கொண்டனர். இவ்விதமாகப் போரில் புண்பட்ட வீரர்களின் உடல்களை மனைவியர் பாதுகாத்துப் பராமரிப்பர். வேப்ப இலைகளை வீட்டின் முகட்டில் செருகியும், வெண்சிறு கடுகு அப்பியும், அகில் புகைத்தும், ஆம்பலங்குழலை ஊதி, மணியோசை எழுப்பிக், காஞ்சிப்பண் பாடியும் தங்களது கணவனின் உடலைப் பேய்கள் தீண்டாதவாறு பாதுகாத்துள்ளனர். இதனை,

> **“தீம் கனி இரவமொடு வேம்பு மனைச் செரீஇ**
> **.... .... .... ....**
> **பூம் பொறிக் கழற் கால் நெடுந்தகை புண்ணே”** (புறம்.281)

என்ற புறநானூற்றுப் பாடலில் அரிசில்கிழார் தெளிவுப்படுத்தியுள்ளார். இதனால் மகளிர் பேய்களின் மீது அச்சம் கொண்டு வாழ்ந்துள்ளமைத் தெரிகிறது.

## தொகுப்புரை

- ❖ மனித வாழ்க்கையின் அனைத்து நிலைகளிலும் சடங்குகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. ஒவ்வொரு சமயத்திலும் நிகழும் சடங்குகளும் வழிபாட்டு மரபுகளும் அச்சமூகத்தை ஒன்றிணைக்கும் சக்தியாகச் செயல்படுகின்றன.

- ❖ சடங்கு என்பது நிகழ்த்தப்படுவது, நம்பிக்கை என்பது முன்னோர்களால் வழிவழியாகப் பின்பற்றப்படுவது.
- ❖ குழந்தை பிறந்தவுடன் பிறப்புச் சடங்காக நீராடி வழிபடும் சடங்கு பின்பற்றப்பட்டிருக்கிறது.
- ❖ சங்ககால மகளிர் சிவன், திருமால், முருகன், கொற்றவை ஆகிய தெய்வங்களை வழிபட்டு இருக்கின்றனர்.
- ❖ வழிபாட்டு இடங்களுக்குச் செல்லும்போது மகளிர் தங்களை அழகுபடுத்திக் கொண்டு, கணவன் மற்றும் பிள்ளைகளுடன் சென்றிருக்கின்றனர். பயணத்தின் போது அச்சம் காரணமாக இயற்கை, பாம்பு ஆகியவற்றை வழிபட்டிருக்கின்றனர்.
- ❖ பண்டைய காலத்தில் போரில் இறந்த வீரனின் நினைவாக நடப்பட்ட நடுகல்லை மகளிர் வழிபட்டுள்ளனர்.
- ❖ இறந்தோருக்காகச் செய்யப்படும் இல்லச்சடங்காகப் பாடைக் கட்டுதலும், சுடுகாட்டுச்சடங்காக ஈம காரியமும், நினைவுச்சடங்காக பிண்டம் வைத்தலும் மேற்கொள்ளப்பட்டிருக்கிறது. இவற்றில் மகளிரும் பங்குப் பெற்றிருக்கின்றனர்.
- ❖ சங்ககால மக்களின் நம்பிக்கைகள், அக்கால சூழலில் வாழ்ந்த மக்களின் வாழ்வியல் நிலைகளை உணர்த்துபவையாகக் காணப்படுகின்றன.
- ❖ மகளிர் ஒரு செயல் தொடங்குவதற்கு முன்பு முதுபெண்டிரால் நெல், நீர், பூக்கள் கொண்டு விரிச்சி கேட்டல், நிமித்தம் பார்த்தலில் தீய நிமித்தம் கண்டு அச்சமுறுதல் ஆகிய நிலைகள் பதிவாகியுள்ளன.
- ❖ நெய், வெண்சிறுகடுகு, கொண்டு கண்ணேறு கழித்தல், மறுபிறப்பு, பேய்கள் குறித்த நம்பிக்கைகள் மகளிரிடம் இருந்திருக்கின்றன.

சங்க கால மகளிர் மேற்கொண்டிருந்த சடங்குகள் மற்றும் நம்பிக்கைகளில் சில தற்காலங்களிலும் நம்பப்படுவையாக இருக்கிறது.

# இயல் - 4

## சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் கல்வி

பண்டைய கால மகளிர் நல்லறம் பேணுவதில் சிறந்திருந்தமை போன்று கல்வி, கலை, விளையாட்டுகள், தொழில் ஆகியவற்றிலும் சிறப்புடையவர்களாகத் திகழ்ந்துள்ளனர். சங்க காலத்தில் கல்வி இடம் பெற்றிருந்த விதம், மகளிரின் கல்வித் திறம் பற்றி ஆராய்வதன் வாயிலாக மகளிர் இல்லறத்தில் மட்டுமல்லாமல் சமுதாயத்திலும் மேலான ஓர் இடத்தைப் பெற்றிருந்தனர் என்பதை உணர முடிகிறது.

### கல்வி - பொருள் விளக்கம்

கல்வி என்பதற்கு 'அறிவு, கற்றல், நூல், வித்தை, கல்வியறிவு, பயிற்சி, உறுதி, ஊதியம், கலை, தேர்ச்சி' என பல பொருள்கள் கூறப்பட்டுள்ளன. கல்வி என்பது கல் என்னும் வேர்ச் சொல்லிருந்து தோன்றியதாகும். மனிதனின் அறிவு, ஆற்றல் ஆகிய திறன்களை ஊக்குவித்து அவற்றை வாழ்க்கைக்குப் பயன்படுத்தும் வகையில் மேற்கொள்ளப்படும் முயற்சி கல்வி எனப்படுகின்றது. "கல்வி மக்களாய்ப் பிறந்தோர் அனைவருக்கும் தேவையான ஒன்று" என்று முனைவர் கா.சிவகாமி (வள்ளலாரின் மானுட மதிப்புகள்,ப.44)குறிப்பிட்டுள்ளார். இக்கல்வி தானே கற்கும் போது கற்றல் என்றும், பிறரால் கற்பிக்கப்படும்போது கற்பித்தல் என்றும் கூறப்படுகிறது. 'வெளிக்கொணர்தல்' எனப் பொருள் கொண்ட 'எஜீகேஷன்' (Education) என்னும் ஆங்கிலச் சொல் கல்வி என்ற தமிழ்ச் சொல்லிற்கு இணையானதாகும். ஆகையால் 'மனிதன் முதன்முதலில் கற்றுக்கொண்டத் தொழில் உழவுத்தொழில் ஆதலின், தமிழில் கல்வி என்னும் சொல் முதலில் உழவுத் தொழிலையே

குறித்திருத்தல் வேண்டும்’ என்று ஞா.தேவநேயன் (பண்டைத் தமிழக நாகரிகமும் பண்பாடும்,பக்.143-144) குறிப்பிட்டுள்ளார்.

**சமூகமும் கல்வியும்**

சமுதாயத்தில் நிலவும் சமூக மரபுகளை, அடுத்து வரும் தலைமுறையினர்க்குப் பாதுகாத்து அளிக்கும் வாய்ப்பாகக் கல்வி அமைகிறது. அக்கல்வி அறிவு, ஆற்றல் பயிற்சி ஆகியவற்றை இளம்பருவத்தினருக்கு அளித்து, அவர்கள் எதிர்காலத்தில் சிறந்த வாழ்க்கை வாழத் தேவையான பழக்க வழக்கங்கள், குறிக்கோள்கள் போன்றவற்றை அவர்களிடையே வளர்க்கவும் முக்கியமானதாகிறது. ‘உறுதியான உடலில், நிறைவான உள்ளம் பரிணமிக்கச் செய்வதுதான் கல்வியின் நோக்கம்’ என்று பிளாட்டோ கூறுவதை அறிஞர் (எஸ். ஜே.பாஸ்கல் கிஸ்பர்ட் சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள், பக்.317-318) எடுத்துக்காட்டியுள்ளார். கல்வியின் நோக்கம் குறித்து, ‘வாழ்க்கையின் விழுமியப் பொருளையும், உயர்ந்த நோக்கங்களையும் கடைப்பிடிக்கத், தேவையானப் பயிற்சி அளித்தல் கல்வியின் நோக்கமாக இருத்தல் வேண்டும்’ என்று க.திலகவதி (சங்க கால மகளிர் வாழ்வியல்,ப.190) குறிப்பிட்டுள்ளார். திருவள்ளுவர் கல்வி குறித்து,

> **“எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும்**
> **கண்ணென்ப வாழும் உயிர்க்கு”** (குறள்.392)

என்று குறிப்பிட்டுள்ளார். எனவே, கல்வி மனிதன் வாழும் சமூகத்தை உயர்வடையச் செய்வதோடு சீரமைக்கப்பட்ட வாழ்க்கையில் சிறந்த வெற்றியை அடையவும் வழி செய்கிறது. கல்வியின் பெருமையை உணர்ந்த சங்க காலச் சான்றோர்களுள் ஆடவர்களுக்கு இணையாக மகளிரும் கல்வியில் சிறந்து இருந்தமை சங்ககால இலக்கியங்களில் பதிவாகியுள்ளன.

## கல்வியளிப்பதில் குடும்பத்தின் பங்கு

நல்ல வளமான சமுதாயத்தில் கல்விப் பணியைச் சிறந்த முறையில் பல நிறுவனங்களும் அமைப்புகளும் செய்து வருகின்றன. இன்றையச் சூழலில் சமுதாயத்தின் செயல்களைப் புரிந்து கொள்ளும் அளவிற்கு, நல்ல குடும்பம் அறிவூட்டுகின்ற செயலூக்கியாகத் திகழ்கிறது. கல்வி கற்பிக்கும் வகையிலான ஒரு நல்ல சூழலை ஏற்படுத்திக் கொடுப்பதிலும் குடும்பம் முக்கிய பங்கு வகிக்கிறது. ஒருவன் கல்வி கற்பதற்காக, வேண்டிய சூழல்களையும், உதவிகளையும் குடும்பத்தில் தலைமை வகிக்கும் பெற்றோரால் உருவாக்கித் தரப்படுகின்றது. 'ஒரு நாடு அல்லது பண்பாட்டின் உறுப்பினன் என்ற முறையிலும் குடும்பம் அல்லது உட்குழுவின் உறுப்பினர் என்ற முறையிலும், மக்கட் சமுதாயத்தில் ஒருவன் என்ற முறையிலுமாக மூன்று வழிகளில் பொதுவாக மனிதனுக்குக் கல்வியறிவு புகட்டப்படுவதாக' பாஸ்கல் கிஸ்பர்ட் (சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள்,ப.319) குறிப்பிட்டுள்ளார்.

## இலக்கண, இலக்கியங்களில் கல்வி

கல்வி குறித்து இலக்கண, இலக்கிய நூல்கள் சிறப்பித்துக் கூறியுள்ளன. இதில் இலக்கண நூல்கள் கல்வி கற்றல், கற்பித்தல் முறைகளையும், இலக்கிய நூல்கள் கல்வி கற்பதால் ஏற்படும் பயன்களையும் விளக்கிக் காட்டுகின்றன. ஆசிரியர் கல்வி கற்பிக்கும் முறை குறித்தும், மாணவர்கள் கற்கும் முறை குறித்தும் நன்னூலார்,

> **"ஈதல் இயல்பே இயம்பும் காலைக்**
> **கோட்டமில் மனத்தின் நூல் கொடுத்தல் என்ப"**(நன்.பொது.நூ.36)
> என்றும்;
>
> **"கோடன் மரபே கூறுங்காலைப்**
> **போவெனப் போதல் என்மனார் புலவர்"**(நன்.பொது.நூ.40)

என்றும் கூறுகின்றார்.

பழங்காலத்தில் கல்வியானது குருகுலக்கல்வி முறை, திண்ணைக்கல்வி முறை ஆகியவற்றின் மூலம் கற்பிக்கப்பட்டது. கல்வி பயிலுவதற்கு இளமைக் காலம் ஏற்றதென்று வரையறுக்கப்பட்டது. முதியோர்கல்வி முறை இருந்தாலும் இளம் பருவமே கல்விக் கற்பதற்கான பருவமாக இருந்தது. மாணவர்கள் தங்களுக்குக் கல்வி கற்பிக்கும் ஆசான்களுக்குக் குற்றேவல் செய்தும், கைமாறு செய்தும், சிறந்த கடமையாற்றியும் கல்வி கற்றிருக்கிறார்கள். சமூகம் ஆசிரியர்களை உயர்ந்த நிலையில் வைத்துப் போற்றியிருக்கிறது.

**"உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே"** (புறம்.183;1-2)
**"கற்பித்தான் நெஞ்சு அழுங்கப் பகர்ந்து உண்ணான், விச்சைக்கண்**
**தப்பித்தான், பொருளே போல், தமியவே தேயுமால்"** (கலி.149;4-5)

என்று புறநானூறும், கலித்தொகையும் கல்வியின் சிறப்பு, ஆசான் மனம் கோணாமல் நடந்து கொள்ளும் பாங்கு, அவர்களின் தேவைகளுக்கான கடமையை ஆற்றுதல் ஆகியவற்றின் சிறப்புகளை எடுத்துரைத்துள்ளன.

கல்வி, அழியாத சிறந்த செல்வம் என்று திருக்குறளும் (400), நடுவு நிலைமையோடு செயல் புரிய உதவும் கல்வியினால் உண்டாகும் அழகு, மற்ற எல்லாவற்றிலும் சிறந்தது என்பதை,

**"குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்**
**மஞ்சள் அழகும் அழகல்ல - நெஞ்சத்து**
**நல்லம்யாம் என்னும் நடுவு நிலைமையால்**
**கல்வி அழகே அழகு"** (நால.பொரு.131)

என்று நாலடியாரும் குறிப்பிட்டுள்ளது. கல்வியின் சிறப்பினைப் பூதஞ்சேந்தனார் தாம் இயற்றிய இனியவை நாற்பதில்,

**"பிச்சைபுக் காயினுங் கற்றல் மிகஇனிதே"** (இ.நா.1-1)

என்று குறிப்பிட்டிருப்பதைக் காண முடிகிறது. இதனால் சங்கம் மருவிய காலத்தில் கல்வி போற்றப்பட்ட விதத்தினைப் பற்றி அறிய முடிகிறது.

சங்க காலத்தில் சமயம், வேள்வி, மருத்துவம், கணிதம், வானியல் போன்ற வகைகளிலும், இவற்றுடன் வரலாறு, புவியியல், பொறியியல், பண்பாடு உள்ளிட்ட பல வகைகளிலும் கல்வி கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளன. இவை தற்காலங்களிலும் பயிலப்பட்டு வருகின்றன.

அரசர்கள் கல்வி கற்றுக் கலைகளில் வல்லவர்களாகத் திகழ்ந்திருந்தால், அவர்கள் ஆட்சி புரியும் நாட்டு மக்களும் சிறப்புற்று இருப்பர். எனவே அரசனின் சிறப்பு கருதி அவர்களுக்குச் சிறந்த கல்வி அளிக்க வேண்டும் என்ற நோக்கில் புலமை மிக்க குருமார்களைக் கொண்டு அவர்களுக்குக் கல்வி கற்பிக்கப்பட்டிருக்கிறது.

ஆசான் சொல்லிக்கொடுப்பதைச் செவியில் கேட்டு, நெஞ்சில் நிறுத்தி நற்கருத்துக்களை மனத்தில் பதிய வைத்துக் கொள்ளும் கற்றல் முறையானது சங்ககாலத்தில் பின்பற்றப்பட்டது. இதனால் அச்சூழலில் கல்வி கற்றவர்களுக்கு மரியாதையும், மிகுந்த மதிப்பும் இருந்தது. கல்வியில் வல்லமைபெற்ற புலவர்கள் தம் புலமைத் திறத்தால் கொடி உயர்த்தி, வாதம் புரிந்த நிலையைப் பட்டினப்பாலையும் மதுரைக்காஞ்சியும் குறிப்பிடுகிறது.

**"பல் கேள்வித் துறைபோகிய,**
**தொல் ஆணை நல் ஆசிரியர்**
**உறழ் குறித்து எடுத்த உருகெழு கொடி"** (ப.பா.169-171)
**"பல்வேறு குழூஉக் கொடி பதாகை நிலைஇ"** (மதுரை.373)

இதில் புலவர்களின் ஒத்தல், எண்கூட்டிப்பெருக்கல் எனப்படும் 'உறழ்' குறித்த புலமை வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. இதைப்போன்றே கல்வியில்

சிறந்த சமய வாதிகள் சமயச் சொற்போர் புரிந்ததை மணிமேகலை (காதை-27) குறிப்பிட்டுள்ளது.

பக்தி காலக்கட்டத்தில் சைவ சமயத்தில் காரைக்கால் அம்மையாரும், வைணவத்தில் ஆண்டாளும் பெண் கல்வியில் உயர்ந்தவர்களாவர்.

**காரைக்கால் அம்மையார்**

இவரின் இயற்பெயர் புனிதவதி என்பதாகும். காரைக்கால் என்னும் ஊரில் பிறந்ததாலும், சிவபெருமானால் 'அம்மை' என்று அழைக்கப்பட்டதாலும் காரைக்கால் அம்மையார் என்று அழைக்கப்பட்டார். தந்தையாரின் பெயர் தனதத்தன். திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள்-22 பாடல்கள், திருவிரட்டை மணிமாலை-20 பாடல்கள், அற்புதத்திருவந்தாதி-101 பாடல்கள் என மொத்தம் 143 பாடல்கள் பாடியுள்ளார். இவரின் பாடல்கள் பதினொன்றாம் திருமுறையில் தொகுக்கப்பட்டுள்ளது. இவர், சிவபெருமானை வழிபட்டால் செய்த வினைகளில் இருந்து விலக முடியும் என்பதை,

> **"தழற் கொண்ட சோதிச்செம் மேனிஎம்**
> **மானைக்கைம் மாமலர்தூய்த்**
> **தொழக்கண்டு நிற்கிற்கு மோதுன்னி**
> **நம்மடுந் தொல்வினையே"** (திரு.இ.மா.11)

என்ற திருஇரட்டை மணிமாலைப் பாடலில் தெளிவுப்படுத்தியுள்ளார். புனிதவதியாரின் வாழ்க்கையில் தெய்வத்தன்மையைக் கண்ட கணவன் பரமதத்தன், அஞ்சி அவரை விட்டு விட்டுக் கடல் கடந்து சென்றான். திரும்பி வந்த தன் கணவனை சந்தித்தப்போது, அவர் மறுமணம் புரிந்திருந்தார். அந்நிலையில் அவர் தன் காலில் விழுவதைக் கண்டு அம்மையார் நாணமுற்று விலகினார். பின் திருவாலங்காட்டு சிவபெருமானின் திருவடியை அடைந்து பாடல்கள் இயற்றத் தொடங்கிய அவரது கல்விப் புலமை பெருமைக்குரியதாக உள்ளது.

**ஆண்டாள்**

பன்னிரு ஆழ்வார்களுள் ஒருவராக விளங்குபவர் ஆண்டாள். பாண்டி நாட்டிலுள்ள திருவில்லிப்புத்தூரில் பிறந்தவர். இவரின் வளர்ப்புத் தந்தை பெரியாழ்வார். ஆழ்வார்களின் வரிசையில் பெரியாழ்வார் எட்டாவதாகவும், ஆண்டாள் ஒன்பதாவதாகவும் வைத்து எண்ணப்படுகின்றனர். ஒரு துளசிச் செடியின் கீழிருந்து எடுத்து வளர்த்த பெரியாழ்வார் இவருக்குச் சூட்டியப் பெயர் 'கோதை' என்பதாகும். ஆண்டாள் வளர்ப்புத் தந்தையின் மூலம் இலக்கியக் கலை உட்பட அனைத்துக் கலைகளையும் கற்றுக் கொண்டார். திருப்பாவையில் 30 பாடல்கள், நாச்சியார் திருமொழியில் 143 பாடல்கள் பாடிச் சிறப்புற்றிருப்பவர். இவர் பாடிய நாச்சியார் திருமொழிப் பாடல்கள் நாலாயிரத்திவ்வியப் பிரபந்தத்துள் சேர்க்கப்பட்டுள்ளது.

தமிழிலக்கிய வரலாற்றில் ஆண்டாளின் படைப்புகள் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. இவரின் திருப்பாவை கடந்த 1200 ஆண்டுகளாக மார்கழி மாதத்தில் தமிழகம் முழுவதும் இசைக்கப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கதாகும். ஆண்டாள் தன்னை மதுசூதனன் கைப்பற்றுவதாகக் கண்ட திருமணக் கனவு குறித்து,

> **"மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத**
> **முத்துடைத் தாம நிரைதாழ்ந்த பந்தற்கீழ்**
> **மைத்துனன் நம்பி மதுசூதன் வந்து, என்னைக்**
> **கைத்தலம் பற்றக் கனாக்கண்டேன் தோழிநான்"** (நா.தி.பி.57)

என்று பாடியிருப்பது உணர்ச்சிபூர்வமான முறையில் அமைந்து காணப்படுகிறது. இதனால் இவரின் புலமைப் பற்றியும், பக்தி காலத்தில் பெண் பெற்றிருந்த கல்விச் சுதந்திரம் பற்றியும் அறிய முடிகிறது.

அக்காலச் சமுதாயத்தில் பாணர், கூத்தர், புலவர் ஆகியோர் கல்வி, கலைகளில் சிறந்திருந்துள்ளனர். பண்டைத் தமிழகத்தில் வாழ்ந்த புலவர்களின் கல்வியறிவு தமிழறிஞர்களைப் போற்றிய பாங்கு ஆகியவற்றைச்

சங்க நூல்கள் வெளிப்படுத்துகின்றன. மன்னர்களைப் புகழ்ந்து பாடிய புலவர்க்குப் பொன், பொருள், நாடு பரிசாக அளிக்கப்பட்டதைப் பதிற்றுப்பத்துப் பாடல்கள் தெரிவிக்கின்றன. பாண்டிய மன்னர்கள் மதுரையில் முச்சங்கம் அமைத்துப் புலவர்களையும், தமிழையும் பெருமை அடையச் செய்தனர். புலவர்கள் தாங்கள் இயற்றும் படைப்புகளை அச்சங்கங்களில் உள்ள சான்றோர்கள் முன் அரங்கேற்றம் செய்தனர். இவ்வாறு அரங்கேற்றம் செய்யப்பட்ட சிறந்த படைப்புகள் மட்டுமே மக்களால் ஏற்றுக்கொள்ளப்பெற்றன. இது அக்காலப் படைப்புகளின் சிறப்புக்களைத் தமிழ் உலகில் நிலை நிறுத்தக் கூடியவகையாகத் திகழ்ந்திருக்கிறது.

இசை, நாட்டியத்தில் வல்லவர்களாக கணிகையர் குல மகளிர் அரண்மனைகளில் அரசர்களின் முன்னிலையில் தங்களது ஆடல், பாடல் போன்ற கலைத்திறன்களை அரங்கேற்றம் (சிலம்பு.3;161-163) செய்தனர். இரட்டைக் காப்பிங்களான சிலப்பதிகாரத்தில் கணிகையரின் இத்திறனுக்கு ஆயிரத்தெண் கழஞ்சுப் பொன் பரிசாகவும், தலைக்கோல் பட்டமும் பெற்றிருப்பதற்கான செய்திகள் பதிவாகியுள்ளன. இதனை சங்ககால அரங்கேற்றத்தின் தொடர்ச்சியாகக் கருத முடிகிறது.

புலவர்கள், கல்வியின் சிறப்பு கருதி அளிக்கும் பொருளை மட்டும் ஏற்றுக்கொண்டனர். இதை உணர்த்தும் வகையில் பரிசில் கொடுக்க காலம் நீட்டித்த அதியமான் நெடுமானஞ்சியை, ஔவையார் கோபம் கொண்டு,

**“எத்திசைச் செலினும், அத்திசைச் சோறே”** (புறம்.206)

என்று பாடிச் செல்லும், புறநானூற்றுப் பாடல் புலப்படுத்துகிறது. இது புலமையால் அவர் பெற்றிருந்த வீறுகொண்ட பெருமையை வெளிக்காட்டுவதாக அமைந்துள்ளது.

சங்க காலத்தில் ஆடவரும், மகளிரும் கல்வி கற்பதில் சம வாய்ப்புகள் பெற்றிருந்ததை இலக்கியங்கள் உணர்த்துகின்றன. அரசர்கள் மட்டுமல்லாமல் சாதாரண குடிமக்களும் கல்வியில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர்களாக இருந்திருக்கின்றனர். ஆடவர் வில், வாள் போன்ற போர்க்கலை மற்றும் தொழில்கள் பற்றியும்; மகளிர் இயல், இசை, நாடகம் போன்ற கலைகள் பற்றியும் பயிலக் கூடியவர்களாக இருந்துள்ளனர். ‘வணிகன், கொல்லன், மருத்துவன், தச்சன், கணியன், பாணன், பொருநன் முதலிய பல்துறைத் தொழில் வல்லாரும், அரசி, குறமகள், காவற்பெண்டு, குயத்தி, பாடினி போன்ற பல்லினப் பெண்டிரும் புலமையில் சிறந்து விளங்கினர்’ என்று க.திலகவதி அவர்கள் (சங்க கால மகளிர் வாழ்வியல் ப.193) குறிப்பிட்டுள்ளார்.

சங்க காலச் சமூகத்தில் கல்வி கற்றவர்களுக்கு மிகுந்த மதிப்பும், மரியாதையும் இருந்தது. கல்வி கற்ற ஒருவன் கீழ்க்குலத்தவனாயினும் உயர்ச்சி பெறுவான். கல்வியிற் சிறந்தோர் எங்குச் சென்றாலும் அவர்களுக்கு மிகுந்த வரவேற்புத் தந்து சிறப்புச் செய்வர். இத்தகைய கல்விச் சிறப்பினை,

**“பிறப்பு ஓர் அன்ன உடன் வயிற்றுள்ளும்,**
**சிறப்பின் பாலால், தாயும் மனம் திரியும்”** (புறம்.183;3-10)

என்ற பாடலில் நெடுஞ்செழியன் புலப்படுத்தியுள்ளார். இப்பாடலில் ஒரே வயிற்றில் பிறந்த இரு பிள்ளைகளானாலும் கல்வியில் சிறந்தவர் மேல் தாயின் மனம் திரியும் என்பது வெளிப்படுகிறது. இதனால் கல்வியின் சிறப்பு மிகுதியை அறிய முடிகிறது.

**பெண்பாற் புலவர்களின் கல்வித்திறன்**

சங்காலம் முதல் பெண்கள் கல்வி கற்றவர்களாகவும், கவி புனைந்து பாடும் திறம் பெறற்வர்களாகவும் இருந்திருக்கிறார்கள். இதற்குச் சங்கப்

பெண்பாற் புலவர்களைக் குறிப்பிட முடியும். இவர்களது பாடல்கள், அக்கால மகளிர் கல்வியறிவு பெற்றிருந்ததற்கான சான்றுகளாக விளங்குகின்றன. கல்வி கற்றுப் புலமை நலத்தோடிருந்த மகளிரை அரசும், சமூகமும் போற்றியிருக்கிறது. பெண் கல்வி கற்றல் என்பது சமுகத்தை நிலை நிறுத்தும் அடையாளமாகும். கல்வியின் முக்கியத்துவத்தைச் சங்க காலம் முதல் தற்காலம் வரையிலான படைப்பாளர்கள் எடுத்துரைத்துள்ளனர்.

முப்பத்தொரு சங்ககாலப் பெண்பாற்புலவர்களின் பாடல்களை முதன்முதலாக ரா.இராகவையங்கார் 'நல்லிசைப்புலமை மெல்லியலார்' என்னும் தம் நூலில் ஆய்வு செய்துள்ளார்(ப.4). ந.சஞ்சீவி அவர்கள் முப்பத்தாறு பெண்பாற் புலவர்களைப் பற்றியும், அவர்கள் பாடிய புற, அகப்பாடல்களைப் பற்றியும், 'சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்' என்ற நூலில் வரையறை செய்துள்ளார். ஔவை து.நடராசன் அவர்கள் சங்ககாலப் பெண்பாற் புலவர்களின் எண்ணிக்கை நாற்பத்தொன்று என்று (D. Natarajan, women poets of Tamil Nadu –Sangam Age. pp.150-155) இன்று கிடைத்துள்ள சங்க நூல்களின் வழி குறிப்பிட்டுள்ளார். சங்க காலப் பெண்பாற்புலவர்கள் நாற்பத்தைந்து பேர் என தாயம்மாள் அறவாணன் தனது 'மகடூஉ முன்னிலை' என்னும் பெண் புலவர் களஞ்சியத்தில் குறிப்பிட்டுள்ளார். இவை சங்க காலப் பெண்பாற் புலவர்களின் எண்ணிக்கை அடிப்படையிலான ஆய்வாக அமைகிறது.

'சங்ககாலப் பெண்பாற் புலவர்களுள் சேரநாட்டைச் சார்ந்த பெண்கள் இடம்பெறவில்லை' என்று ந.சஞ்சீவி அவர்கள் (சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்,ப.33) குறிப்பிட்டுள்ளார். சங்க காலப் பெண்பாற் புலவர்களுள் ஔவையார் தவிர மற்றப் பெண்பாற்புலவர்கள் அகம் சார்ந்த பாடல்களை

அதிகமாகவும், புறம் சார்ந்த பாடல்களைக் குறைவாகவும் பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். பதிற்றுப்பத்தில் ஆறாம் பத்துப் பாடிய ஒரு பெண்பாற்புலவர் மட்டும் (காக்கைப்பாடினியார் நச்செள்ளையார்) இடம் பெற்றுள்ளார்.

‘மூதின் முல்லை’ துறைப்பாடல்களில் மறக்குடி மகளிரின் தன்மைகளை வெளிப்படுத்திப் பாடுவதில் பெண்பாற் புலவர்கள் தனித்திறம் கொண்டவர்களாகத் திகழ்ந்துள்ளனர்.

ஆண்பாற் புலவர்கள் பெயர்க்கு முன்னால் தாயின் பெயர் சேர்க்காமல் தந்தையின் பெயர் சேர்ப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். ஆனால் பெண்பாற் புலவரான நாகையாரின் பெயர்க்கு முன்னால் அஞ்சியத்தை என்ற அவர் தாயின் பெயரும், நக்கண்ணையார் பெயருக்கு முன் பெருங்கோழி நாய்கன் என்ற தந்தையின் பெயரும் இடம் பெற்றுள்ளது. பாரியின் இரு பெண் பிள்ளைகளும், தந்தையின் சிறப்புக் கருதி பாரிமகளிர் என்று அழைக்கப்பட்டமை குறிப்பிடத்தக்கது. பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு கணவன் பெயர் தொடர்ந்த பெண்பாற்புலவர் ஆவார். இவர்களின் இயற்பெயரை விட பெற்றோர் மற்றும் கணவன் ஆகியோர் சிறப்புக்கருதி அடைமொழியாகத் தங்கள் பெயரோடு இணைந்திருப்பதை அக்காலச் சமூகம் போற்றி இருக்கிறது.

பெண்பாற்புலவர்கள் தாய், தந்தை ஆகிய இருவரின் பெயர்களையும் தங்கள் பெயரோடு இணைத்து வழங்கியமை தெளிவாகிறது. ஆண்பாற் புலவர்கள் தங்கள் பெயரோடு தாய் மற்றும் மனைவி ஆகியோரின் பெயரை இணைத்ததற்கான சான்றுகள் இல்லை. இதன்வழி பெண்களின் பெயருக்கான முக்கியத்துவம் ஆண்புலவர்களிடம் இல்லை என்பது பெறப்படுகிறது. ஆனால் பெரும்பாலும் சங்ககால மகளிர் திருமணத்திற்கு முன் தந்தையையும்

திருமணத்திற்குப் பின் கணவனையும் சார்ந்த வாழ்வினை மேற்கொண்டதற்கான அடையாளமாகவும் குறிப்பிட முடியும்.

இருபது பெண்பாற் புலவர்கள், சங்க இலக்கியங்களிலுள்ள புறப்பாடல்களைப் பாடியோராக அறியப்படுகின்றனர். அள்ளூர் நன்முல்லையார், ஒக்கூர் மாசாத்தியார், ஔவையார், காக்கைப் பாடினியார் நச்செள்ளையார், காவற்பெண்டு, குறமகள் இளவெயினி, தாயங்கண்ணியார், நக்கண்ணையார், நெட்டிமையார், பாரிமகளிர், பூங்கணுத்திரையார், பூதப்பாண்டியன் தேவி பெருங்கோப்பெண்டு, பேய்மகள் இளவெயினி, பொன்முடியார், மாற்பித்தியார், மாறோக்கத்து நப்பசலையார், முடத்தாமக்கண்ணியார், வெண்ணிக்குயத்தியார், வெள்ளைமாளர், வெறிபாடிய காமக்கண்ணியார் ஆகிய புலவர்களின் கல்வித்திறனை அவர்களின் பாடல்கள் மூலமாக அகர வரிசையில் ஆராயப்படுகிறது.

**அள்ளூர் நன்முல்லையார்**

பாண்டி நாட்டுச் சிவகங்கைப் பகுதியில் அள்ளூர் என்னும் ஊர் உள்ளது. அவ்வூர்க் கல்வெட்டு, தஞ்சையில் உள்ள திருவாலங்காட்டிற்கும் அப்பெயர் வழங்கப்பட்டதாகக் குறிப்பிட்டுள்ளது. ‘ஔவையார், வெள்ளிவீதியார், காக்கைப் பாடினியார், நச்செள்ளையார் ஆகியவர்களோடு அள்ளூர் நன்முல்லையாரையும் சேர்த்து மிகச்சிறந்த புகழுடைய பெண்பாற் புலவர்கள்’ என்று உ.வே சாமிநாதையர் தம் குறுந்தொகைப் பதிப்பின் முன்னுரையில்(ப.104) குறிப்பிட்டுள்ளார்.

> **“ஒளிறு வாட் தானைக் கொற்றச் செழியன்**
> **பிண்ட நெல்லின் அள்ளூர் அன்ன என்**
> **ஒண் தொடி நெகிழினும் நெகிழ்க”** (அகம்.46;13-15)

என்ற பாடலில் வரும் தலைவியின் அழகு நலத்திற்குத் தாம் பிறந்து வளர்ந்த அள்ளூரையே உவமையாகக் கூறியுள்ளார். அள்ளூர் நீர் வளமும்,

நில வளமும் மிக்கது என்பதை உணர்த்தும் வகையில், மலைபோல் குவிந்து கிடக்கும் செந்நெல் குவியல்களை உடைய அள்ளூர் என்று சுட்டியுள்ளது சிறப்பிற்குரியதாக உள்ளது.

நன்முல்லையார் புறப்பாடல் (புறம்.306) ஒன்றும், அகப்பாடல் பத்துமாக மொத்தம் பதினோருப் பாடல்கள் பாடியுள்ளார். இவருடைய பாடல்கள் கற்பனை வளமும் இயற்கை நயமும் செறிந்தனவாக அமைந்து காணப்படுகின்றன. இவர் மறக்குடிமகள் வீரநெஞ்சத்தையும், நடுகல் வழிபாட்டையும், இல்லற மகளிரின் விருந்தோம்பும் பண்புகளையும் பற்றி விளக்கும் விதமாக,

**"களிறுபொரக் கலங்கு கழல் முள் வேலி**
**.... ..... .... ....**
**நாடு தரு விழுப்பகை எய்துக எனவே"** (புறம்.306)

என்ற புறநானூற்றுப் பாடலை வடித்துத் தந்துள்ளார். இதனால் இவரது புலமைச் சிறப்பினைப் பற்றி அறிய முடிகிறது.

**ஒக்கூர் மாசாத்தியார்**

மாசாத்தியார் எனும் பெயருடைய இப்பெண்பாற் புலவரும், மாசாத்தனார் (புறம்.248) எனும் பெயருடைய புலவரும் ஒக்கூரைச் சேர்ந்தவர்கள் ஆவர். ஒக்கூர் என்ற பெயருடைய ஊர் பாண்டியநாடு மற்றும் சோழ நாடு ஆகிய இரு நாடுகளிலும் உள்ளது. பாண்டி நாட்டில் சிவகங்கைக்கு வடதிசையில், திருக்கோட்டியூருக்கு அருகில் இவ்வூர் அமைந்துள்ளது. மாசாத்தியார் சங்க இலக்கியத் தொகுப்பில் மொத்தம் எட்டுப்பாடல்களைப் பாடியுள்ளார். இவற்றில் அகப்பாடல்கள் ஏழும் புறப்பாடல் ஒன்றுமாக அமைந்துள்ளது. இவருடையப் புறப்பாடலில் ஒரே மகனைப் பெற்ற வீரத்தாய் அவனைப் போருக்கு அனுப்பிவைக்கும் வீரமரபைப் போற்றும் விதமாக,

**“ஒரு மகன் அல்லது இல்லோள்**
**‘செருமுகம் நோக்கிச் செல்க’ என விடுமே”** (புறம்.279;10-11)

என்ற புறநானூற்றுப் பாடல் அமைந்துள்ளது. இது சங்க காலத் தாய் ஒருத்தியின் தியாக மனத்தைக் காட்டுவதாக உள்ளது. இத்தகைய வீரவுணர்வு கொண்டு பாடல் இயற்றியவர், இன்பச்சுவை மிகுந்த அகப்பாடல்களையும் இயற்றியுள்ளது சிறப்பிற்குரியதாகும்.

**ஔவையார்**

சங்ககாலத்துச் சமுதாயத்தில் ஒரு தனி மதிப்பும், சிறப்பும் வாய்ந்தவராகத் திகழ்ந்தவர் ஔவையார். அரசியல், வீரம், காதல், நட்பு ஆகிய பொருள்கள் பற்றி அமைந்த பாடல்கள் புறநானூற்றில் அமைந்து காணப்படுகின்றன. தனது நுண்ணிய திறத்தால் அறிவு, அரசியலில் மிகுந்த தேர்ச்சி பெற்றவராக விளங்கி, மன்னர்களை நல்வழிப் படுத்தியுள்ளார். ஔவையின் அறிவுரையும், கவிநலமும் நாட்டில் வாழும் மக்களுக்கு நீண்ட நாட்களுக்கு வேண்டும் என எண்ணிய அதியமான் கிடைத்தற்கரிய நெல்லிக்கனியை இவருக்கு அளித்தபோது,

**“நீலமணி மிடற்று ஒருவன் போல**
**மன்னுக பெரும!”** (புறம்.91;6-7)

என்று கூறி வாழ்த்தியுள்ளார். இச்செய்தி சிறுபாணாற்றுப்படை அடிகளில்,

**“அமிழ்துவிளை தீம்கனி ஔவைக்கு ஈந்த,**
**அரவக் கடல்தானை, அதிகனும்”** (சிறு.101,103)

என்றவாறு சிறப்பித்துக் காட்டப்பட்டுள்ளன. அக்காலப் பெண்பாற் புலவர்களுள் ஐம்பத்தொன்பது பாடல்களைப் பாடிச் சிறப்புப் பெற்றவர். இவற்றுள் அகப்பாடல்களின் எண்ணிக்கை இருபத்தாறு. புறப்பாடல்களின் எண்ணிக்கை முப்பத்துமூன்று. புறப்பாடல்களில் இருபத்தைந்துப் பாடல்கள்

அதியமான் மற்றும் இவரின் மகன் பொகுட்டெழினியைப் பற்றியதாக அமைந்துள்ளன.

அதியமானை, எண்தேர் செய்யும் தச்சனின் ஆற்றலோடு (புறம்.87) ஒப்பிட்டுப் பாடியுள்ளார். தூதாக வந்த ஔவையிடம் தொண்டைமான் தனது படைக்கலக் கொட்டிலைக் காட்டியபோது, ஔவை அவற்றைப் புகழ்வது போல இகழ்ந்து கூறுகிறார். அதியமானின் போர்த்திறத்தைத் தொண்டைமானுக்கு அறிவுறுத்திப் போரை விலக்கச்செய்த பெருமை ஔவையாரைச் சார்ந்ததாகும்.

காற்று தீண்டுவதால் உண்டாகும் போர்முரசின் ஒலி கேட்டு உடனே போருக்கு எழும் அதியமானின் வீரத்தை, எழுச்சியுறப் (புறம்.90) பாடியுள்ளார்.

அதியமானின் முன்னோர் தேவர்களைப் போற்றி வழிபட்டுத் தேவருலகில் இருந்து கரும்பினைக் கொணர்ந்த செய்தி, விருந்தோம்பும் பண்பு, போர்த்திறம் போன்ற செய்திகளைப் பாடல்களில் (புறம்.99;1-2,101,103) குறிப்பிட்டுள்ளார். அதியமானின் இறப்பைக் 'கையறுநிலை'யில் ஔவையார் பாடியுள்ளது, (புறம்.231,232,235) அனைவரின் மனத்தையும் நெகிழ வைக்கக்கூடியதாக உள்ளது. நாட்டில் சேரர், சோழர், பாண்டியர் ஆகிய மூவேந்தருள்ளும் எப்பொழுதும் போர் நிலவிக் கொண்டிருந்த காலகட்டத்தில் புதிய சமுதாயத்தையும், ஒற்றுமையையும் காண விழைந்தவர் ஔவையார்.

சேரமான் மாரிவெண்கோ, பாண்டியன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி ஆகிய மூவரும் ஓரிடத்தில் கூடியிருந்ததைக் கண்டு மகிழ்ச்சியடைந்த ஔவையார்,

> **"வானத்து**
> **வயங்கித் தோன்றும் மீனினும், இம்மெனப்**
> **பரந்துஇயங்கு மாமழை உறையினும்**
> **உயர்ந்துமேந் தோன்றிப் பொலிக, நும் நாளே"** (புறம்.367;15-18)

என்று கூறி வாழ்த்தினார். நாஞ்சில் வள்ளுவன் பரிசில் அளிக்கும் தன்மையைப் புகழ்ந்து **“நாஞ்சிற் பொருநன் மடவன் மன்ற”**(புறம்.140;1-2) என்று பாடியுள்ளார். புலமையில் சிறந்திருந்த ஔவையாருக்குச் செல்லும் நிலமெங்கும் வரவேற்பும், சிறப்பும் கிடைத்தது. இவர் ஆடவர் நல்லவர்களாக இருக்கும் நிலம் சிறப்புடையதாக இருக்கும் என்று குறிப்பிட்டுள்ளார். இதனை,

**“எவ் வழி நல்லவர் ஆடவர்,**
**அவ் வழி நல்லை; வாழிய நிலனே”**(புறம்.187;3-4)
**“வாழச் செய்த நல்வினை அல்லது**
**ஆழுங் காலைப் புணைபிறிது இல்லை”**(புறம்.367;10-11)

எனும் பாடல் அடிகளில் எடுத்துரைத்துள்ளார்.

ஔவையார் அதியமான் நெடுமானஞ்சி, தொண்டைமான், பொகுட்டெழினி, நாஞ்சில் வள்ளுவன், சேரமான் மாரிவெண்கோ, பாண்டியன் கானப்பேரெயில் கடந்த உக்கிரப்பெருவழுதி, சோழன் இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, பரணர் போன்றோரைச் சிறப்பாகப் பாடியுள்ளார்.

இவர் பாடிய புறநானூற்றுப் பாடல்களை நோக்குங்கால் பல செய்திகள் பெறப்படுகின்றன. போர் விரும்பாமை, சமாதானப்படுத்துதல், நல்வழி உணர்த்தல், அரசனின் பெருமையைப் பகைவனிடத்து நயம்பட எடுத்துரைத்தல், தன் மன்னனிடத்து மிகுந்த மதிப்பும், நன்றியும் கொண்டிருத்தல், அஞ்சாமை, அரசியல், அறிவு, வீரம் மிகுந்து காணப்படுதல் போன்ற பொருண்மைகளில் பாடல்கள் பாடிய திறம் வெளிப்படுகிறது. இவர் பாடிய 59 சங்க இலக்கியப் பாடல்களில் (புறம்.33,அகம்.26) அகப்பாடல்களை விட புறப்பாடல்களை அதிகம் பாடியிருப்பது, மறப்பண்பு, நாட்டுப்பற்று, நல்வழிப்பேணல் ஆகியவற்றை உணர்த்துவதாக உள்ளது.

## காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்

நச்செள்ளையார் என்பது இவருடைய இயற்பெயராகும். ‘செள்ளை’ என்ற பெயருடன் ‘நல்’ என்ற சிறப்பை உணர்த்தும் சொல் சேர்ந்து நற்செள்ளை என்றாயிற்று. ‘விருந்து வரக் கரைந்த காக்கை’யைப் பற்றி ஒரு பாடலில்(குறு.210) குறிப்பிட்டிருப்பதால் இவருக்குக் காக்கைப் பாடினி நச்செள்ளையார் என்ற இப்பெயர் வந்தது. இவர் சங்க இலக்கியத்தில் மொத்தம் பன்னிரண்டு பாடல்கள் பாடியுள்ளார். அவை புறநானூற்றில் ஒன்று(278), குறுந்தொகையில் ஒன்று(210), பதிற்றுப்பத்தின் ஆறாம் பத்தாக அமைந்துள்ள பத்துப்பாடல்கள்(51-60) ஆகியனவாகும்.

இவர் பாடிய ‘உவகைக் கலுழ்ச்சி’ என்னும் துறையில் அமைந்த புறப்பாடல் ஒரு மறக்குடித்தாயின் தன்மையைப் போற்றுவதாக அமைந்துள்ளது. ஒரு தாய், தன் மகன் போரில் புறங்காட்டி இறந்திருப்பின் அவன் பாலுண்ட மார்பை அறுத்து எறிவதாகக் கூறி சினம் கொண்ட காட்சியை,

> **“மண்டு அமர்க்கு உடைந்தனன் ஆயின், உண்ட என்**
> **முலை அறுத்திடுவென், யான் எனச் சினைஇ”**(புறம்.278;4-5)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. இப்பாடலின் துறையாக அமைந்த உவகைக்கலுழ்ச்சி என்பதற்கு ‘வாள் வாய்ந்த வடு வாழ் யாக்கை, கேள் கண்டு கலுழ்ந்து உவந்தன்று’ என்று பொருள் (தாயம்மாள் அறவாணன், மகடூஉ முன்னிலை,ப.96) கூறப்பட்டுள்ளது.

நச்செள்ளையார், பதிற்றுப்பத்துப் பாடலின் ஆறாம்பத்தில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனைப் பாடியமைக்குப் பரிசாக ஒன்பது ‘கா’ பொன்னும், நூறாயிரம் காணமும் பெற்றதோடு, அவனது அவைக்களத்தில் பக்கத்தில் இருக்கும் பேற்றையும் பெற்றார். இவ்வாறு ஆட்சிபுரியும் அரசன்

தான் அமர்ந்திருக்கும் அரியாசனத்திற்கு இணையாகச் சரியாசனம் வழங்குவது என்பது சங்க காலத்தில் மிகப்பெருமையாகக் கருதப்பட்டது.

இப்பதிற்றுப்பத்தில் மேலை நாடுகளிலிருந்து நம் நாட்டிற்குக் கலன்கள், அணிகலன்கள் கடல் வழியாக இறக்குமதி செய்யப்பட்ட செய்திகள் (பதிற்று.52;3, 55;3-4) பதிவாகியுள்ளன. தலைவியாகிய மனைவியின் பெருமை கூறி கணவனை அறிமுகப்படுத்தும் பாங்கும் இவரது பாடல் அடியில் (55;1) காண முடிகிறது.

அரசன், ஊடலின் பொருட்டுத் தனது மனைவி சினந்து பார்க்கும் பார்வைக்கு அஞ்சுவதைவிட, வறுமையால் வாடும் இரவலர்களின் நிலையைக் காண அஞ்சும் இயல்புடையவன் என்ற கருத்தை,

> **“ஒண்ணுதல் மகளிர் துனித்த கண்ணினும்**
> **இரவலர் புன்கண் அஞ்சும்”** (பதிற்று.57;13-14)

என்ற அடிகளில் சுட்டிக்காட்டியுள்ளார். சேரமன்னனது வீரம், கொடை ஆகியவற்றைப் பற்றி இவர் போற்றிப் புகழ்ந்துள்ளது சிறப்பிற்குரியதாக அமைந்துள்ளது.

**காவற்பெண்டு**

காவற்பெண்டு என்ற இவரது பெயரைக் கொண்டு இவர் ஒரு செவிலித்தாய் எனக் கருத முடிகிறது. சோழன் போர்வைக்கோ பெருநற்கிள்ளியின் செவிலித்தாயாக இருந்தவர். மணிமேகலையில் செவிலித் தாய் எனும் பொருளில் வரும்,

> **“குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்க்குக்**
> **காவல் பெண்டிர்”** (மணி.7;57-58)

என்ற அடிகள் இங்கு குறிப்பிடத்தக்கதாக உள்ளன. இவர் பாடிய புறநானூற்றுப் பாடலில் (86) தன் மகன் என்றுமே போர்க்களத்தில் தோன்றும்

இயல்பினன் என்று பெருமிதம் அடையும் சிறப்பையும்; மறக்குடி மகளிரின் உள்ளப் பண்பும், சங்ககால இளைஞர்கள் தம் கடமையில் தவறாது இருப்பதும் காட்டப்பட்டுள்ளது. பிள்ளைகளைப் பெற்றுப் பேணிப் பாதுகாத்து வளர்ப்பது பெற்றோர்களுக்குரிய கடமை. வளர்த்த பின் பிள்ளைகள் தமது அருகில் இருந்து தங்களுக்குத் தொண்டு புரிய வேண்டும் என்று அக்காலப் பெற்றோர்கள் எதிர்பார்க்காது வாழ்ந்துள்ளனர். இத்தகைய கருத்துக்களைக் காவற்பெண்டு தம் பாடலில் விளங்க வைத்திருப்பது அவர் புலமையின் சிறப்பாகும். இப்புறநானூற்றுப் பாடலைக் கொண்டு ஐயனாரிதனார்,

**"பெரும்படை வெள்ளம் நெரிதரவும் பேரா,**
**இரும்புலி சேர்ந்த இடம்"** (பு.வெ..3;எ.கா.19)

என்ற தனது புறப்பொருள் வெண்பாமாலை கொளுவிற்கு எடுத்துக்காட்டுப் பாடலை இயற்றியுள்ளார். இதனால் இப்பெண்பாற் புலவரின் பெருமையும் சிறப்பும் புலனாகிறது.

**குறமகள் இளவெயினி**

இளவெயினி வாழ்ந்த பகுதி மலைநாட்டைச் சேர்ந்தது. ஆதலின் குறமகள் என அழைக்கப்பட்டாள். தாம் பாடிய புறநானூற்றுப் பாடல்(157) ஏறைக்கோனைத் தலைவனாகக் கொண்டு பாடியதாகும். இம்மன்னனை 'எம்மோன்' எனப் பாடலில் குறிப்பிடுவதால் இவர் குறவர் குடியில் பிறந்தவர் என்பது தெளிவாகிறது. சான்றோர்கள், நண்பர்கள் ஆகியோரின் தவற்றைப் பொறுத்துக் கொள்ளுதல், குடிகள் வறுமை நிலை அடைந்தால் அதற்காக அரசன் நாணுதல், போர்க்காலத்தில் பிற படையினர் பழிசொல்லாத அளவிற்கு வீரத்தில் சிறந்திருத்தல், அரசவையில் பெருமிதமாக நடத்தல் ஆகிய தான் நினைக்கும் தலைமைப் பண்புகள் அனைத்தும் அமையப் பெற்றவனாக ஏறைக்கோன் விளங்கும் சிறப்பைப் பற்றிப் பாடியுள்ளார். இதனை,

**“தமர் தற் தப்பின் அது நோன்றல்லும்**
**பிறர் கையறவு தான் நாணுதலும்**
**படைப் பழி தாரா மைந்தினன் ஆகலும்**
**வேந்துடை அவையத்து ஓங்குபு நடத்தலும்”** (புறம்.157;1-4)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. இதனால் குறமகளும் கல்விப் புலமை பெற்றவளாகத் திகழ்ந்துள்ளமை வெளிப்படுகிறது.

**தாயங்கண்ணியார்**

புறநானூற்றில் ஒரு பாடல் மட்டும் (250) இவர் பாடியுள்ளார். கணவனை இழந்த ஒரு பெண்ணின் கைம்மைத் துயரை நேரில் கண்டு பாடுவதாக இப்பாடல் அமைந்துள்ளது. ஆதலால்தான், கணவன் இழந்ததைக் குறிக்கும் தாபத நிலை(தொல்.பொருள்.77) என்ற துறையில் இப்பாடல் அமைந்துள்ளது. மனைவி கணவனுடன் இணைந்து வாழுங்காலத்தில் சமூகத்தில் பெற்றிருந்த உயர்நிலையும், கணவன் இறந்த பின் கூந்தல் கொய்து, வளைநீக்கி, அல்லி உணவு உண்டு வாழும் கைம்மையின் துன்பத்தினையும் (புறம்.250;4-5) பதிவு செய்திருக்கிறார். பால் குடிக்கும் தனது குழந்தையைத் தவிக்கவிட்டுத் தந்தை இறந்து போன காட்சியை,

**“.... .... தீம்பால் வேண்டும்**
**முனித்தலைப் புதல்வர் தந்தை**
**தனித்தலைப் பெருங் காடு முன்னிய பின்னே”** (புறம்.250;7-9)

என்ற அடிகளில் நயம்படச் சுட்டிக்காட்டியிருப்பதின் மூலம் இவரது புலமைத் திறத்தை அறிய முடிகிறது.

**நக்கண்ணையார்**

பெருங்கோழிநாய்கன் மகள் நக்கண்ணையார் என்று இவர் பெயர் வழங்கப்பட்டிருக்கிறது. அக்காலத்தில் புலவர் பெயர்களுக்கு முன் உறவுகளைக் குறிக்கும் வழக்கம் இருந்துள்ளது. அவ்வகையில் மகள் என்ற

உறவு நக்கண்ணையார் பெயருக்கு முன் வழங்கப்பட்டிருக்கிறது. 'நாய்கன்' எனும் பெயர் வணிக மரபினரைக் குறித்துள்ளது. சிலப்பதிகாரத்தில்,

**"மாகவான் நிகர் வண்கை மாநாய்கன் குலக்கொம்பர்"** (சிலம்பு.1;23)

என்று கண்ணகியை இளங்கோவடிகள் அறிமுகப்படுத்துவது இங்குக் குறிப்பிடத்தக்கதாக உள்ளது. இதனால் உறையூரைச் சேர்ந்த மரக்கலவாணிகன் ஒருவரின் மகள் என்பது பெறப்படுகிறது. இவர் புறநானூற்றில் மூன்று பாடல்களும்(83,84,85), நற்றிணையில் இரண்டுப் பாடல்களும்(19,87), அகநானூற்றில்(252) ஒன்றுமாக மொத்தம் ஆறு பாடல்கள் பாடியுள்ளார்.

உறையூரை ஆட்சி புரிந்து வந்த தித்தன் என்ற அரசனின் மகனான சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளியை நக்கண்ணையார் பாடிய புறப்பாடல்கள் ஒருதலைக்காமம் என்று கூறப்படும் கைக்கிளைத் திணையில் அமைந்துள்ளன. கோப்பெருநற்கிள்ளியின் வீரக்கழல் புனைந்திருக்கும் இளம்காளை போன்றுள்ள தோற்றத்தை நினைத்தால் என் வளைகள் நெகிழ்ந்தும், அவன் தோள்களைத் தழுவ விரும்பும் நிலையையும், நற்கிள்ளியைப் பார்க்க முடியாததால் பசலை நோய்க்கு ஆளானதையும்,

**"அடி புனை தொடுகழல் மை அணல் காளைக்கு என்**
**தொடி கழித்திடுதல், யான் யாய் அஞ்சுவலே;**
**அடு தோள் முயங்கல் அவை நாணுவலே"** (புறம்.83;1-3)
**"யாமே, புறஞ் சிறை இருந்தும் பொன் அன்னம்மே"** (புறம்.84;2)

என்ற தனது பாடலில் குறிப்பிட்டுள்ளார். இப்பாடல்களை நோக்குங்கால் அகப்பாடல்களின் பொருள் போல் தோன்றினாலும் இவர் வெளிப்படையாகக் காதலோடு சேர்ந்த வீர நிலைப்பாடுகளைக் குறிப்பிட்டிருப்பதால் இப்பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன.

### நெட்டிமையார்

நீண்ட இமைகளைக் கொண்ட கண்களைப் பெற்றிருந்ததால் நெட்டிமையார் என்ற பெயர் பெற்றார். இவர் பாடிய பாடல்களில் இடம் பெற்றுள்ள செய்திகளின் மூலம் இவர் பெண்பாற்புலவர் என்பதை அறிய முடிகிறது. பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியை இவர் பாடிய பாடல்கள் புறநானூற்றில் (9,12,15) இடம் பெற்றுள்ளன.

நெட்டிமையார் பசு, பார்ப்பார், பெண்டிர், பிணியுடையோர், புதல்வரைப் பெற்றெடுக்காதோர் போரில் விலக்கு பெற்றவர்கள் என்று தமது பாடலில்(புறம்.9) பாடியுள்ளார். இக்கருத்து

**"நன்பால் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பார்**
**என்பாரை ஓம்பேன் எனின்யான் அவன் ஆக"** (சீ.சி.443;3-4)

என்று சீவகசிந்தாமணியில் திருத்தக்கத்தேவரால் குறிப்பிடப்பட்டுள்ளது. மகளிர் மிகவும் ஈடுபாடு கொண்ட பொன்னாலான அணிகலன்கள், பூக்கள் குறித்துத் தமது பாடலில் **"பொன் போல்", "பசும்பொன்", "விளங்குபொன்"** (புறம்.9;4,9,15;12), **"பாணர் தாமரை மலையவும்"**(12;1), **"கடுந்தார் முன்பு தலைக் கொண்ட"**(15;14) என்றெல்லாம் சுட்டியிருப்பதால் இவர் பெண்பாற் புலவர் என்பது பெறப்படுகிறது.

### பாரி மகளிர்

பறம்பு மலையை ஆட்சி புரிந்து வந்த கடையேழு வள்ளல்களில் ஒருவரான பாரியின் பெண்மக்கள் பாரிமகளிர் ஆவர். தந்தையின் சிறப்புக் கருதி இவர்கள் பாரிமகளிர் என்று அழைக்கப்பெற்றனர். மூவேந்தர்களின் வஞ்சனையால் தனது தந்தை, நாடு என அனைத்தையும் இழந்த நிலையில் பாரியின் நண்பரான கபிலரால் இப்பெண்கள் பாதுகாக்கப்பட்டனர். இவ்வாறு வாழ்ந்திருந்த காலத்தில் பாரியின் மகளிர்,

**“அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்”**(புறம்.112)

எனத் தொடங்கும் புகழ்பெற்ற பாடலைப் பாடினர். இவர்கள் தந்தை, நாடு, நகரம் என அனைத்தையும் இழந்து, கையறுநிலைத் துறையில் இப்பாடலைப் பாடியுள்ளனர். பாரி மகளிருள் ஒருவர், வறுமைக் காலத்தில் தன்னை நாடி வந்த பாணனுக்குச் சோறு அளிக்க, நீர் பொருந்திய உலையில் பொன்னைப் பெய்து கொண்டு, திறந்து சோறாக நல்கினாள் என்ற செய்தியை,

> **“மாரி ஒன்று இன்றி வறந்திருந்த காலத்தும்,**
> **பாரி மடமகள், பாண் மகற்கு, நீர் உலையுள்**
> **பொன், திறந்து, கொண்டு புகர்வாக நல்கினாள்**
> **ஒன்று உறா முன்றிலோ இல்”**(ப.நா.சகை,382)

இப்பழமொழி நானூற்றுப் பாடல் தெரிவிக்கிறது. இதனால் வள்ளலான தன் தந்தையின் குணநலன் இப்பெண்களிடத்தும் அமையப் பெற்றிருப்பது தெரிய வருகிறது.

**பூங்கணுத்திரையார்**

உத்திரை என்பது இவரின் இயற்பெயராகும். காவிரியின் வடகரையில் உள்ள ‘பூங்கண்’ என்பது இவரின் ஊராதலால் பூங்கணுத்திரையார் என்ற பெயர் பெற்றார். புறநானூற்றில் ஒன்றும் (270), குறுந்தொகையில் இரண்டு பாடலுமாக(48,171) மூன்று பாடல்களை இயற்றியுள்ளார். முதியோள் ஒருத்தி, தன் இளையனாகிய ஒரே ஒரு மகன் களிறெறிந்து பட்ட செய்தியறிந்து மகிழ்ச்சியில் சிந்திய கண்ணீர்த் துளிகளை(புறம்.270;5-6) நயம்படப் பாடலாக்கியுள்ளார்.

**பெருங்கோப்பெண்டு**

போரில் பல வெற்றிகளைக் கொண்டு ஆட்சி புரிந்திருந்த பூதப்பாண்டியனின் மனைவி பெருங்கோப்பெண்டு. இவர் புலமை பெற்றவர். இவரது பாடல் ஒன்று புறநானூற்றில்(பாடல்-.246) இடம் பெற்றுள்ளது. இதில்

கைம்மைத் துயரை வெளிப்படுத்தியுள்ளார். புலமையில் சிறந்த இவரது கணவர் பூதப்பாண்டியன் பாடிய பாடல்களும் எட்டுத்தொகையில்(புறம்.71) இடம் பெற்றுள்ளன.

இருவரும் ஒருவரை ஒருவர் நேசித்து வாழ்ந்து வந்தனர். போரில் சேர, சோழர்களை எதிர்த்துப் போராடும்பொழுது, பூதப்பாண்டியன் இறந்து விடுகிறான். செய்தியறிந்த பெருங்கோப்பெண்டு தனித்து வாழ்வது தன்னால் இயலாது என்பதை உணர்ந்து, பிணப்படுக்கை அமைக்க சுடுகாடு நோக்கிச் செல்கிறாள். கணவர் முன்பு ஒரு காலத்தில் இவளைச் சிறுபொழுது பிரிந்ததற்கு அஞ்சியவள், தற்பொழுது சுடுகாடு நோக்கி நடக்கும் நிலையைக் கண்ட மதுரைப் பேராலவாயர்,

> **"பேர் அஞர்க் கண்ணள், பெருங்காடு நோக்கி**
> **.... .... .... ....**
> **சிறுநனி தமியள் ஆயினும்**
> **இன் உயிர் நடுங்கும் தன் இளமை புறங்கொடுத்தே"** (புறம்.247;6-10)

என்று பாடியுள்ளார். இதனால் பெருங்கோப்பெண்டு வயதில் இளையவள் என்பது அறியப்படுகிறது. கணவன் இறந்தால் உடன் உயிர் விடுவது கற்புடை மகளிரின் கடமையென்று, தன்னைத் தடுத்து நிறுத்தும் சான்றோர்களுக்கு அறிவுரை கூறி ஈமத்தீயினுள் பாய்கிறாள். இதனால் கைம்மையினும், தீப்பாய்ந்து உயிர் விடுவதை மகிழ்வோடு விரும்பிய அவரது மனப்பாங்கு புலப்படுகிறது.

**பேய்மகள் இளவெயினி**

இளமையிலேயே பாடல் இயற்றும் வல்லமை பெற்றவர். 'போர்க்களத்துப் பிணந்தின்னும் பேய்மகளிரை வியந்து விரிவாகப் பாடிய சிறப்பால் இளவெயினியார்க்குப் பேய்மகள் என்பது சிறப்புப் பெயராக அமைந்தது' என்று புலவர் கா. கோவிந்தன் (பெண்பாற் புலவர்கள், ப.74)

குறிப்பிட்டுள்ளார். இவர், கலித்தொகையில் பாலை பாடிய பெருங்கடுங்கோவைப் பாராட்டும் விதமாக இவரின் புறநானூற்றுப் பாடல்(11) அமைந்துள்ளது. இப்பாடலில் மகளிர் பாவை மற்றும் நீர் விளையாட்டுக்களில் ஈடுபட்டதும், வஞ்சி மாநகரைச் சார்ந்து தண்பொருநை ஆறு ஓடியதும், பாணன், பாடினி, விறலி ஆகியோர் பரிசில் பெறும் தன்மை குறித்தும் பாடப்பட்டுள்ளது. பொன் தாமரைப் பூவை வெள்ளி நாரால் தொடுத்து மன்னன் பாணனுக்கு வழங்கியத் தன்மையை,

> **“ஒள் அழல் புரிந்த தாமரை**
> **வெள்ளி நாரால் பூப் பெற்றிசினே”** (புறம்.11;16-17

என்ற அடிகளில் புலப்படுத்தியுள்ளார்.

**பொன்முடியார்**

புறநானூற்றில் இவர் பாடிய மூன்று பாடல்களும் (299,310,312) குதிரைமறம், நூழிலாட்டு, மூதின்முல்லை என்ற துறைகளில் அமைந்துள்ளன. மு.அ.துரையரங்கனார், தம்முடைய ‘சங்ககாலச் சிறப்புப் பெயர்’ எனும் ஆய்வு நூலில் (ப.130) ஐயமானவை என்ற பெயரில் பொன்முடியாரின் பெயரை சேர்த்துள்ளார். பேராசிரியர் எஸ். வையாபுரிப்பிள்ளை ஆண்பாற் புலவர்களின் பட்டியலில் இவரின் பெயரை இணைத்துள்ளார். புறநானூற்றுக்கு உரை எழுதிய ஔவை துரைசாமிபிள்ளை, தனது முகப்புரையில் பொன்முடியார் பெண்பாற் புலவர் (புறம்.கழகப்பதிப்பு, இரண்டாம் பகுதி, ப.166) என்று குறிப்பிட்டுள்ளார்

இவ்வகையில் பொன்முடியாரின் பாடல்களில் பிள்ளை ஈன்று தரும் தாயின் கடமை குறித்தும் (புறம்.312), பால் குடிக்க மறுக்கும் குழந்தையைத் தாய் சிறுகோல் கொண்டு குடிக்க வைக்கும் காட்சியும் (புறம்.310), கலந்தொடா மகளிர் குறித்த செய்தியையும் (புறம்.299) குறிப்பிட்டிருப்பதில் இருந்து இவர் ஒரு பெண்பாற் புலவர் என்பது பெறப்படுகிறது.

இவரது பாடல்களில் அக்காலப் பழக்க வழக்கம், சிறுமகன் போரில் புலப்படுத்திய வீரம் ஆகியவற்றையும், தாம் வாழ்ந்த அக்காலச் சமுதாய அமைப்பிற்கு ஏற்ப அவரவரின் கடமைகளைச் செய்வதில் இருந்த பொறுப்புணர்வுகளையும் எடுத்துரைத்துள்ளமை புலப்படுகிறது.

### மாற்பித்தியார்

சங்க இலக்கியத்தில் தவ வாழ்க்கை பற்றிப் பாடிய பெண்பாற் புலவர் மாற்பித்தியார் ஆவர். இவரும் இவரது கணவரும் சிறந்த இல்லற வாழ்க்கையை மேற்கொண்டு வாழ்ந்திருந்தனர். இவ்வாறு வாழ்ந்திருந்த கணவன் ஒரு நாள் இல்லறத்தைத் துறந்து துறவு வாழ்க்கையை மேற்கொள்கிறான். இதனால் மாற்பித்தியாருக்கு 'மயக்கமும் பித்தமும்' உண்டாகின்றன. தம் இழிநிலை குறித்து அழுது பாடிய பாடல்கள் புறநானூற்றில் இடம் பெற்றுள்ளன. 'இவருடைய பெயரில் வரும் 'மால்' என்பதற்கு மயக்கம் என்றும், 'பித்தி' என்பதற்கு பித்தன் என்பதன் பெண்பாற்பெயராகவும் இருப்பதால் இவர் மாற்பித்தியார் என்று அழைக்கப்பட்டார்'(கா.கோவிந்தன், பெண்பாற் புலவர்கள், ப.85).

மாற்பித்தியாரின் இரண்டு புறநானூற்றுப் பாடல்களும்(251,252) வாகைத்திணை, தாபத வாகைத்துறையைச் சேர்ந்தனவாக உள்ளன. இளமையின் ஆற்றலால் மகளிர் மனத்தைக் கவரும்படி நடந்தவன், இப்பொழுது புறந்தாழ் புரிசடையுடன் கானகத்தில் துறவு நெறியில் ஒழுகுகின்றான் என்று இரு பாடல்களிலும் குறிப்பிட்டுள்ளார். இவருடைய பாடல்களில்,

> **"ஓவத்து அன்ன இடனுடை வரைப்பில்**
> **பாவை அன்ன குறுந்தொடி மகளிர்"** (புறம்.251;1-2)
> **"தில்லை அன்ன புல்லென் சடையோடு"** (புறம்.252;2)

என்கின்ற உவமை அடிகள் இடம் பெற்றுள்ளன. வேடன் வலைவிரித்து மான்களைப் பிடிப்பது போல, இளைஞன் சொல் வலை விரித்து, மகளிரை வயப்படுத்துதலில் வல்லவனாயினன் என்பதை,

**"இல் வழங்கு மடமயில் பிணிக்கும்**
**சொல் வலை வேட்டுவன் ஆயினன்"** (புறம்.252;4)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. ஓர் இளைஞன் இன்று முதியவனாய்த் தன் தவ ஆற்றலினால் காட்டுயானையை ஏவல் செய்யும் அளவிற்கு மேம்பட்டு விளங்கும் தன்மையை, **"கான யானை தந்த விறகின்"**(புறம்.251;5) கொண்டு தீ மூட்டுகின்றான் என்ற விளக்கக் கருத்தைக் கொடுத்துள்ளார். இது இவரின் அறிவு நுட்பத்திற்குச் சான்றாகிறது. இளம்பூரணரும், நச்சினார்க்கினியரும் "நாலிரு வழக்கின் தாபதப்பக்கம்" என்னும் தொல்காப்பிய இலக்கணத்திற்கு இவரின் பாடல்களை மேற்கோளாகக் காட்டியிருப்பதிலிருந்து இப்புலவரின் புலமை மாட்சியினை அறிய முடிகிறது.

**மாறோக்கத்து நப்பசலையார்**

இவர் புறநானூற்றில் ஏழு பாடல்களும்(37,39,126,174,226,280,383), நற்றிணையில் ஒரு பாடலுமாக (304) மொத்தம் எட்டுப் பாடல்கள் பாடியுள்ளார். நற்றிணைப் பாடலில்,

**"மணி மிடை பொன்னின் மாமை சாய, என்**
**அணி நலம் சிதைக்குமார் பசலை"** (நற்.304;6-7)

எனப் பசலையின் இயல்பை விளக்கமுறப் பாடியிருப்பதால் இப்பெயர் பெற்றுள்ளார். சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவனைப் புகழ்ந்து (புறம்.37,39,226) போற்றியுள்ளார். புறாவின் துன்பத்தைப் போக்கியவன் பற்றி, **"புள் உறு புன்கண் தீர்த்த, வெள் வேல்"**(புறம்.37;5) என்ற அடியில்

புலப்படுத்தியுள்ளார். இவர் கிள்ளி வளவன் மாண்டபோது, அவரை நினைத்துக் கையறுநிலையில் பாடிய பாடலில்,

**“பாடுநர் போலக் கைதொழுது ஏத்தி,**
**இரந்தன்றாகல் வேண்டும்”** (புறம்.226;3-4)

என்று அவன் உயிரைப் போரில் எதிர்த்து வெல்லாமல், பரிசாகக் கேட்டு பெற்றிருக்க வேண்டும் என்று சிறப்பித்துக் கூறியுள்ளமை வெளிப்படுகிறது. சோழரது உறையூரில் அறத்தை நிலைநாட்டும் அறங்கூறு அவையம் இருந்தமை பற்றிய குறிப்பையும் (புறம்.39;8-9) பாடியுள்ளார்.

கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய மலையமான் திருமுடிக்காரியைப் புகழ்ந்து பாடிய இவர் காரி மற்றும் திருமுடிக்காரியின் மகன் மலையமான் சோழிய வேனாதி திருக்கண்ணனையும் கபிலர் புகழ்ந்துள்ள செய்தியைத் தமது புறநானூற்றுப் பாடலில் பாடியுள்ளார்.

**“புலன் அழுக்கு அற்ற அந்தணாளன்**
**இரந்து செல் மாக்கட்கு இனி இடன் இன்றி,**
**பரந்து இசை நிற்கப் பாடினன்”** (புறம்.126;11-13)
**“பொய்யா நாவின் கபிலன் பாடிய,**
**மை அணி நெடு வரை ஆங்கண்”** (புறம்.174;10-11)

என்ற அடிகளில் நப்பசலையார் தெளிவுபடுத்தியுள்ளார். திருமுடிக்காரி இறப்பால் கவலை கொண்ட மக்களின் வருத்தம் நீங்க, வறட்சி கொண்ட காலத்தில் நல்மழை பெய்தது போல, திருக்கண்ணன் தோன்றியதை (புறம்.174;26-28) சிறப்பித்துப் பாடியுள்ளார். இதில் நல்லினை தீவினையைக் குறிக்கும் விதமாக கண்ணன் உலக இருள் போக்க, ஞாயிற்றை மீட்ட புராணச் செய்தியும் (புறம்.174;1-5) குறிப்பிடப்பட்டுள்ளது.

அவியன் என்ற மன்னனின் கொடையைப் பொருநன் கூற்று வழி (புறம்.383) சிறப்பித்துள்ளார். மகளிர் கணவனின் இறப்பிற்குப் பிறகு கைம்மை

நிலை கொண்டு படும் துன்பம், பாணனின் மிகுந்த வறுமைத் துன்பத்தினும் மிகுந்தது என்று புறநானுற்றின்(280;8-15) வழி வெளிப்படுத்தியுள்ளார். இதன்வழி கைம்மைத்துயரில் வாடும் பெண்களின் நிலையை இவர் எடுத்துரைத்துள்ளமை புலனாகிறது.

**முடத்தாமக்கண்ணியார்**

இவர் சோழன் கரிகாற் பெருவளத்தானைப் புகழ்ந்து, பத்துப்பாட்டுள் ஒன்றாகிய பொருநராற்றுப்படையைப் பாடியுள்ளார். இது இருநூற்று நாற்பத்தெட்டு அடிகள் கொண்டது. இவர் பெயரில் வரும் 'கண்ணி' என்ற சொல் கொண்டு ஆணா? பெண்ணா? என்பதில் ஐயம் தோன்றியுள்ளது. கண்ணி என்பது ஆடவர் தலையில் சூடும் மாலை என்று பொருளுடையதால் இந்த ஐயம் தோன்றியது. கண்ணி என்பதற்கு கண்ணுடையவள் என்றும் அகராதியில் பொருள் கூறப்பட்டுள்ளது (கழக வெளியீடு ப.273). கண்ணியார் என்பதற்கு முன்னுள்ள 'தாமம்' என்றச் சொல் 'மாலை' என்று பொருள்படும். இதை,

**"முத்துத் தாமம் முறையொடு நாற்றுமின்"** (மணி.1;49)
**"முத்துடைத் தாமம் நிரை தாழ்ந்த பந்தற் கீழ்"** (நா.தி.பி.57;6)

என்ற அடிகள் விளக்கிக்காட்டுகின்றன. மேலும், தாமம் என்பது மகளிரின் இடை அணியாக உள்ளது. 'பதினெட்டு கோர்வை உள்ள அணியை பெண்கள் தம் இடையில் அணிந்துள்ளதற்கு தாமம் என்று வழங்கப்பட்டுள்ளது'(தமிழ் லெக்சிகன் ப.1836). 'முடம்' என்றால் வளைவு என்று பொருள். ஆகவே வளைந்த இடையணியை அணிந்த அழகான கண்கள் உடையவள் என்பதால் முடத்தாமக்கண்ணியார் என்று அழைக்கப்பட்டுள்ளார்.

பொருநராற்றுப்படையில் கரிகாற்பெருவளத்தானின் வெண்ணிப் பறந்தலைப் போர் வெற்றியைச் சிறப்பித்துள்ளார். காவிரியாறு, சோழநாடு ஆகியவற்றைச் சிறப்புறப் (பொரு.180-248) பாடியுள்ளார். யாழ் என்ற இசைக்கருவியையும், ஏழு வகையான பண்களையும் பற்றிக் குறிப்பிடுவதிலிருந்து(பொரு.1-20,63) இவர் சிறந்த இசை வல்லுநர் என்பதை உணர முடிகிறது. இசைக்கருவியான யாழின் உறுப்புகளை,

**"குளப்புவழி அன்ன கவடுபடு பத்தல்;**
**விளக்குஅழல் உருவின் விசிஉறு பச்சை"** (பொரு.4-5)
**"அளைவாழ் அலவன் கண்கண் டன்ன,**
**துளைவாய் தூர்ந்த துரப்புஅமை ஆணி"** (பொரு.9-10)

என வரும் அடிகளில் குறிப்பிடப்பட்டிக்கும் உவமைகளால் அறிய முடிகின்றன. விறலியரின் முடி முதல் அடி வரையிலான (கேசாதிபாதம்) வருணனை (பொரு.25-47) சிறப்பாகக் காணப்படுகின்றது. கரிகாலன் அளித்த 'ஊன் உணவைத் தின்று எம் பற்கள் கொல்லையுழுத கொழுவைப் போன்று தேய்ந்தன' என்றும், 'இளைப்பாற இடம்பெறாது உண்டேம்' என்றும் கூறும் பகுதிகள் (பொரு.114-119) நயமிக்கதாகவும், நகைச்சுவையூட்டக் கூடியதாகவும் அமைந்துள்ளன.

**வெண்ணிக்குயத்தியார்**

செய்யும் தொழில் வழியாகக் 'குயத்தி' என்னும் பெயர் அமைந்திருக்கிறது. வெண்ணி என்னும் ஊரில் பிறந்ததால், தொழில் பெயரும் சேர்ந்து வெண்ணிக்குயத்தியார் என அழைக்கப்பட்டார். கரிகாற் பெருவளத்தானை இவர் பாடியுள்ளார் (புறம்.66). சோழன் வெண்ணிப்பறந்தலை என்னும் இடத்தில் நடைபெற்ற போரில் பெற்ற வெற்றியையும், சேரமான் பெருஞ்சேரலாதன் தோல்வியுற்றதால் வடக்கிருந்து உயிர் துறந்ததையும் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

வெற்றி பெற்ற தன் அரசனின் சிறப்பை விட, புறப்புண் நாணி தன்மான உணர்வோடு வடக்கிருந்து உண்ணாமல் உயிர் துறந்த சேரனின் சிறப்பை,

> **“கலி கொள் யாணர் வெண்ணிப் பறந்தலை,**
> **மிகப் புகழ் உலகம் எய்தி,**
> **புறப் புண் நாணி, வடக்கிருந்தோனே”** (புறம்.66;6-8)

என்ற இவ்வடிகளில் உணர்வு மேற்கொண்டு பாடியிருப்பது போற்றுதற்குரியதாகும்.

**வெள்ளைமாளர்**

வெள்ளைமாளர் என்னும் இவர் பெண்பாற் புலவரே என்பது இவர் எழுதிய ஏறாண்முல்லைத் துறையிலமைந்தக் காட்சிகளால் பெறப்படுகிறது. இத்துறை ஒரு பெண்ணின் கூற்றாக அமைவதை புறப்பொருள் வெண்பாமாலை (வாகைப்படலம்,22) குறிப்பிட்டுள்ளது. புறநானூற்றில்(296) ஒரு பாடல் மட்டும் பாடியுள்ளார். போருக்குச் சென்ற வீரர்கள் அனைவரும் வீடு திரும்பிய நிலையில், தாமதித்து வரும் ஒரு வீரனின் தேரைக் கண்ட அவனது தாயின் கூற்றாக ஏறாண் முல்லைத் துறையில் இவரது பாடல் அமைந்துள்ளது. இதில் போர்க்களத்தில் புண்பட்ட வீரனைப் பேய்கள் தீண்டாதிருக்க மேற்கொள்ளப்படும் செயல்கள் குறித்துக் குறிப்பிடப்பட்டுள்ளன.

**வெறிபாடிய காமக்கண்ணியார்**

‘காமக்கண்ணி என்னும் பெயர் பார்ப்போர் விரும்பும் கண்களை உடையவர் என்று பொருள்படும். ‘வெறியாட்டம்’ என்னும் ஒரு பழக்கம் பழந்தமிழரிடையே இருந்தது பற்றிச் சிறப்பாகப் பாடியமையால் ‘வெறிபாடிய காமக்கண்ணியார்’ என்று அழைக்கப்பட்டார்’(தாயம்மாள் அறவாணன், மகடூஉ முன்னிலை,ப.262). இவர் ஐந்து பாடல்கள் பாடியுள்ளார். அவை

புறநானூற்றில் இரண்டும்(271,302), அகநானூற்றில் இரண்டும்(22,98), நற்றிணையில் ஒன்றுமாக காணப்படுகின்றன.

நொச்சி இலையை இளமகளிர் உடையாக உடுத்தியமையும், போர்க்களத்தில் வீழ்ந்த வீர மறவர்களின் கழுத்தில் கிடந்த நொச்சி மாலையைப் பருந்துகள் நிணம் என்று நினைத்து அதனை எடுத்துச் செல்வதையும் தமது பாடலில் (புறம்.271) குறிப்பிட்டுள்ளார். இதனால் இவர் நொச்சியைச் சிறப்பாகப் பாடியுள்ளமை தெரிகிறது.

மேகம் பொழியும் மழைத்துளிகளை விடவும் விண்ணில் உள்ள விண்மீன்களை விடவும் போர்க்களத்தில் வீரர்களால் கொல்லப்பட்ட யானைகளின் எண்ணிக்கை அதிகம் என்று சிறப்பித்திருப்பதை,

> **“வேலின் அட்ட களிறு பெயர்த்து எண்ணின்,**
> **விண்இவர் விசும்பின் மீனும்,**
> **தண்பெயல் உறையும், உறை ஆற்றாவே”** (புறம்.302;9-11)

என்ற பாடல் அடிகளால் அறிய முடிகின்றன. இதன் வழி இவரின் புலமைத்திறம் புலனாகிறது.

சங்கப் புறப்பாடல்களில் இடம் பெற்றுள்ள பெண்பாற் புலவர்கள் கல்வியில் சிறந்து விளங்கியுள்ளனர் என்பது அவர்கள் பாடியுள்ள பாடல்களின் கவி நயத்தால் நன்கு உணர முடிகிறது. சங்கப் பாடல்களைப் பாடிய புலவர்களுள் நாற்பது புலவர்கள் மகளிர் ஆவர். இவர்களில் இருபது பேர் புறப்பாடல்களைப் பாடியவர்களாக இருப்பதைப் பாார்க்கும்போது, சங்க காலத்தில் பெண்கல்வி பற்றிய நிலையை அறிய முடிகிறது.

வாழ்க்கையின் அனைத்துத் துறைகளிலும் பால் வேறுபாடில்லாமல் இருப்பதைப் போல கல்வியிலும் இருபாலரும் கற்கும் சூழ்நிலை சங்க காலத்தில் இருந்துள்ளது. தமிழ் மொழியில் உள்ள பெண்பாற் புலவர்களின்

எண்ணிக்கை சங்க மகளிரின் கல்வித் திறனுக்குச் சான்று பகர்வதாக அமைகிறது.

சங்க காலத்தில் பெண்பாற்புலவர்கள் ஆடவர்களைப் போல அரசவைக் கவிஞர்களாகவும், அறம் உரைப்பவர்களாகவும், அரசியல் தூது செல்லும் சான்றோராகவும், இரக்கம் நிறைந்தவர்களாகவும், நட்பு பாராட்டக் கூடியவர்களாகவும், ஒருமைப்பாட்டைப் பேணுபவர்களாகவும், பண்பாட்டை நிலை நிறுத்துபவர்களாகவும் விளங்கியுள்ளனர்.

சங்க காலச் சமுதாயத்தில் மகளிர் பெற்றிருந்த கல்விச் சிறப்பால், நல்ல இல்லறத் துணையாகவும், வீரம் நிறைந்த தாயாகவும், சிறந்த சான்றோராகவும், ஒழுக்கம் நிறைந்தவர்களாகவும், கடமையாற்றக் கூடியவர்களாகவும் வாழ்ந்துள்ளனர்.

## தொகுப்புரை

- பண்டைக் கால மகளிர் கல்வியில் சிறப்புற்று விளங்கியுள்ளனர். கல்வி என்பதற்கு அறிவு, கற்றல், நூல், பயிற்சி, கலை, தேர்ச்சி என்று பொருள்படும்.
- இளம் பருவத்தினர்கள் சிறந்த வாழ்க்கை வாழத் தேவையான நல்ல பழக்க வழக்கங்கள், எண்ணங்கள் ஆகியவற்றை வளர்த்திட கல்வி இன்றியமையாததாக உள்ளது என்பது பெறப்பட்டது.
- கல்வி கற்பதற்கான சமூக செயலியாகக் குடும்பம் செயல்பட்டிருக்கிறது. கல்வி கற்றல், கற்பித்தல், அதன் பயன்கள் குறித்து இலக்கிய இலக்கண நூல்கள் குறிப்பிட்டுள்ளன.
- கல்வி பெறுவதினால் உண்டாகும் பயன்களை இலக்கிய நூல்கள் உணர்த்துகின்றன.

- ❖ சங்க காலத்தில் பெண் கல்வி ஏற்றம் பெற்றிருந்தப் பாங்கை, பெண்பாற் புலவர்களின் பாடல்கள் வெளிப்படுத்தியுள்ளன.
- ❖ முதுகுடிமக்களின் வீரநெஞ்சம், நடுகல் வழிபாடு, விருந்தோம்பும் இல்லற மாண்பு, ஆகியவற்றை நன்முல்லையார் பாடல்களிலும்; வீரத்தாய், தாயின் தியாகம் ஆகியவற்றை ஒக்கூர் மாசாத்தியாரும்; காதல், வீரம் ஆகியவற்றை ஔவையாரும்; அரச நிலை குறித்து காக்கைப் பாடினியாரும்; மனையாள் சிறப்புகள், கைம்மை நிலை குறித்து தாயங்கண்ணியாரும், பெருங்கோப்பெண்டும் பாடியுள்ளனர்.
- ❖ வெற்றிச்சிறப்பை நக்கண்ணையார், முடத்தாமக்கண்ணியார், வெண்ணிக்குயத்தியார் ஆகியோரும்; கையறுநிலையைக் குறித்துப் பாரி மகளிர், பூங்கணுத்திரையாரும்; பரிசில் நிலை குறித்துப் பேய்மகள் இளவெயினியும்; சமுதாய கடமைகளைப் பொன்முடியாரும்; தவ வாழ்வை மாற்பித்தியாரும்; பசலையின் இயல்பை நப்பசலையாரும் பாடியுள்ளனர்.
- ❖ புண்பட்ட வீரன் நிலை, வீரனின் வேல் சிறப்பு ஆகியவற்றை வெள்ளைமாளர், காமக்கண்ணியார் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

சங்கப் புறப் பாடல்கள் அக்காலத்தில் பெண்பாற் புலவர்கள் கல்வி கற்றவர்களாகவும், பாடல் இயற்றும் புலமைப் பெற்றவர்களாகவும், பகை தீர்க்கும் பான்மையுடன், நட்பு கொண்டவர்களாகவும் திகழ்ந்திருக்கிறார்கள் என்பதை உணர்த்துகிறது. இவற்றில் காதல், வீரம், விருந்தோம்பல், தாய்மை, அரசநிலை, வெற்றி, பரிசில் நிலை, கைம்மை, சமூக கடமை, தவவாழ்வு, பசலை ஆகியவை பாடுபொருள்களாக இடம் பெற்றுள்ளன.

# இயல் - 5

## சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் கலைகள்

இலக்கியம் என்பது மனிதனின் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகும். இதில் சங்க இலக்கியங்கள் சமூக அமைப்பினைக் காட்டும் பெட்டகங்களாகத் திகழ்கின்றன. இலக்கியத்தின் பாடுபொருட்களில் பெண்களுக்கு மிக முக்கியமானப் பங்குண்டு. பழங்காலம் முதல் தற்காலம் வரையிலான இலக்கியங்கள், பெண்களின் திறன்களைப் பல்வேறு படி நிலைகளில் வெளிப்படுத்தியுள்ளன. அவ்வகையில் சங்கப்புற இலக்கியங்களில் மகளிரின் கலைச் செயல்பாடுகளை ஆய்ந்து வெளிப்படுத்தும் நோக்கில் இவ்வியல் அமைகிறது.

'கலை' என்பது மனிதனின் உள்ளத்தைத் தன் வயப்படுத்தி ஆற்றலை வெளிப்படுத்துவதாகும். 'கலை என்ற சொல் முதலில் வழங்கியபோது செயல் திறமையைக் காட்டுவதும், அழகு ஏற்படும் வகையில் செய்வதும், சுவை பயக்க வல்லதும், பற்பல காரியங்களுக்கு உதவுவதுமான அறிவையும், ஆற்றலையும் குறித்தது என்றும், கலையில் செயல், பயன், திறமை, அழகு, சுவை என்ற அம்சங்கள் உள்ளன என்றும்' கலைக்களஞ்சியம்(தொகுதி-3,பக்.339-400) கூறுகிறது. 'கலை என்பது அளவும், பொருத்தமும் தன்னுள் அடக்கி நிற்பது, அதே சமயத்தில் உள்ளத்திற்கு உவகை ஊட்டுவது; உள்ளத்தைத் தன்பால் ஈர்ப்பது' என்று இராசமாணிக்கனார் (தமிழ்ப் பண்பாட்டு வரலாறு,ப.491) கூறியுள்ளார். கலை என்னும் சொல், 'கல்' என்னும் ஏவற் பகுதியிலிருந்து தோன்றியதாகும். கல்வி என்னும் சொல்லுக்கு இது முதனிலையாகும்.

## கலை-சொற்பொருள் விளக்கம்

'கலை என்பதற்கு ஆண்மான் வகை, ஆண்குரங்கு, ஆடை, சேணம், பகுதி, ஒளி நுட்பமான கால அளவு, எழுத்து, நூல், மொழி, உடல், பெண்களின் இடையணி, கற்பூரவகை' என்று பலவகையாகத் தமிழ் அகராதிகளில் பொருள் கூறப்பட்டுள்ளன. வடமொழியில் காம சூத்திரத்தை எழுதிய 'வாதஸ்யாயனார்' அறுபத்து நான்கு கலைகளின் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார். புத்தர் வரலாற்றைக் கூறும் 'லலித விஸ்தரம்' என்னும் நூலிலும், சமண நூல்களிலும், இந்து நூல்களிலும் அறுபத்து நான்கு கலைகளின் பெயர்கள் காணப்படுகின்றன. சமணர் நூல்களில் ஆடவர்களுக்குரிய கலைகள் எழுபத்திரண்டு என்றும், பெண்களுக்குரிய கலைகள் அறுபத்து நான்கு என்றும் கூறப்பட்டுள்ளன.

அறுபத்து நான்கு கலைகளாக 'ஆடல், பாடல், இசைக்கருவிகள், கவிதை, பூ வேலைகள், உடை அலங்காரம், காதணிகள், வாசனைப்பொருட்கள், நகைகள், உதட்டிற்கு வண்ணம் தீட்டுவது, முகம் முதலிய உறுப்புகளுக்கு ஏற்ப மண-நிறப் பொடிகளைப் பயன்படுத்துதல், ஆண்களும் பெண்களும் சேர்ந்து நீராடும் பொழுது விளையாட்டாக நீரில் மிருகங்கள் போல் ஒலிகளைக் கிளப்பும் கலைகள்' என்பவற்றை மா.இராசமாணிக்கனார் (தமிழ்ப் பண்பாட்டு வரலாறு,ப.492) குறிப்பிட்டுள்ளார். இவ்வகையில் சங்கப் புற நூல்களில் இடம் பெற்றுள்ள மகளிர் விளையாட்டு, கூத்துக்கலைகள், நாடகம், இசை மற்றும் அவர்கள் அணிந்திருந்த ஆடை, அணிகலன்கள், ஒப்பனைகள், செய்த தொழில்கள் ஆகிய அனைத்திலும் கலை நயத்தோடு வாழ்ந்திருக்கின்றனர்.

**மகளிர் விளையாட்டு**

விளையாட்டு என்பது சிறுவர் முதல் பெரியவர்கள் வரை மேற்கொள்ளும் ஒரு கலையாகும். 'பொழுது போக்கிற்காகவும் திறமையை வெளிப்படுத்தும் விதமாகவும் நிகழ்த்தப்படும், விதிமுறைகளை உடைய செயல்பாடு, உண்மை என்று எடுத்துக் கொள்ள வேண்டாதது, வேடிக்கையாகச் செயல்படுவது' என்றெல்லாம் கிரியாவின் தற்காலத் தமிழ் அகராதி பொருள் கூறியுள்ளது. 'பொழுது போக்குக்குரிய மனமகிழ்ச்சியை ஊட்டும் ஒரு செயலாக விளையாட்டு விளங்குகின்றதென்று' தமிழ்ப் பேரகராதி (Tamil lexcicon Vol.VI.P.3730) கூறுகிறது. உயிர் வாழ்க்கைக்கு உடல் நலம் மிக முக்கியம் என்பதை,

> **"உடம்பார் அழியின் உயிரார் அழிவர்**
> **.... .... .... ....**
> **உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே"** (திருமந்திரம்-724)

என்று திருமூலர் சுட்டிக்காட்டியுள்ளார். இவர் உடல் நலம் பேணும் வழிகளில் விளையாட்டும் ஒன்று என்கிறார். இந்நிலை உணர்ந்த பண்டைய மக்கள் தங்களின் வாழ்க்கையில் அவரவர் தன்மைகளுக்கேற்ப விளையாடியுள்ளனர்.

இளம் பருவத்தில் ஆணும், பெண்ணும் சேர்ந்து விளையாடியுள்ளனர். அப்பொழுது அவர்களுக்குள் கோபம் வந்து சண்டையிட்டுக் கொண்டதை,

> **"இவன் இவள் ஐம்பால் பற்றவும் இவள் இவன்**
> **புன்தலை ஓரி வாங்குநள் பரியவும்,**
> **காதற் செவிலியர் தவிர்ப்பவும் தவிராது**
> **ஏதில் சிறுசெரு உறுப"** (குறு.229;1-4)

என்ற குறுந்தொகை அடிகள் காட்டுகின்றன. 'போலச்செய்தல்' என்னும் உளவியல் கூற்றுக்கேற்ப ஆண் பிள்ளைகள் தந்தையைப் போலவும், பெண் பிள்ளைகள் தாயைப் போலவும் செயல்படுவர். இவ்வகையில் சிற்றில்

செய்தல், சிறுதேர் உருட்டல் போன்ற செயல்கள் அமையும். இவ்வாறான குழந்தைப்பருவச் செயல்கள் அவர்கள் வளர்ந்த நிலையில் இருபாலருக்கும் ஏற்ற வகையில் வெவ்வேறான விளையாட்டு வகைகளாக அமைகின்றன. இதன் அடிப்படையில் அமைந்ததாக சிற்றிலக்கியங்களில் ஒன்றான பிள்ளைத்தமிழ் அமைந்துள்ளது.

பிள்ளைத்தமிழ் குறிப்பிட்டுள்ளப் பத்து பருவங்களில் 'காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வருகை, அம்புலி' போன்ற ஏழு பருவங்கள் இருபாலருக்கும் பொதுவானவையாகவும் மீதமுள்ள மூன்று பருவங்கள் தனித்தனியாக 'சிற்றில், சிறுபறை, சிறுதேர்' என்பன ஆண்பாலுக்கும், 'கழங்கு, அம்மானை, ஊசல்' என்பன பெண்பாலுக்கும் உரியதாக அமைத்துக் காட்டியுள்ளது. இதனால் ஆண், பெண் இருவரும் தனித்தும், கூடியும் விளையாட்டில் ஈடுபட்டுள்ளனர் என்பது பெறப்படுகிறது.

இவ்வகையில் 'அசதியாடல், அம்புலி அழைத்தல், அலவன் ஆட்டல், உலாவல், ஊசல், எண்ணி விளையாடல், சுண்ண விளையாட்டு, சூது, நீர் விளையாட்டு, பந்தாடுதல், பறவைகளைக் காணல் அவற்றின் செயல்கள் போல் செய்தல், பறவை விலங்குகளுடன் விளையாடல்' போன்றவை இருபாலருக்குரிய விளையாட்டுகள் என்றும், பெண்பாலருக்கு மட்டும் உரியவாக 'எதிரொலி கேட்டல், கண் புதைத்து ஒளிந்தாடல், கவன், கழங்கு, குரவை, சிறுசோறு, சிற்றில் செய்தல், செடி-கொடி வளர்ப்பு, பறவை வளர்ப்பு, விலங்கு வளர்ப்பு, பாவை விளையாட்டு, பிசி-நொடி விளையாட்டு, புள் ஓட்டல், மணற்குவியலில் மறைந்தாடல், மலர் கொய்தலும் மாலை தொடுத்தலும், வள்ளைப்பாட்டு' போன்ற விளையாட்டுக்கள் உள்ளன என்று

முனைவர் சு.சிவகாமசுந்தரி அவர்கள் (சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியத்தில்) குறிப்பிட்டுள்ளார்.

சங்க இலக்கியங்களில் மகளிர் விளையாடிய விளையாட்டுக்கள் தொடர்பான செய்திகளை ஆராயும்போது சங்க கால மகளிரின் விளையாட்டு ஆர்வத்தையும், ஈடுபாட்டையும் அறிய முடிகின்றன. இவர்களால் அறியப்படும் விளையாட்டுக்களில் பெரும்பாலானவை மகிழ்ச்சி ஊட்டக்கூடிய விளையாட்டுக்களாகவே இருந்திருக்கின்றன. உடலும் உள்ளமும் சிறந்த ஆரோக்கியத்துடன் அமைவதை, அக்கால மகளிர் விளையாட்டின் அடிப்படையாக வைத்திருக்கின்றனர். சங்ககால மகளிர் பூஞ்சோலைகள், அருவி உள்ளிட்ட நீர்நிலைகள், கடற்கரைகள், மணற்குன்றுகள், மாடங்கள், முற்றங்கள் போன்ற பல்வேறு இடங்களில் விளையாடியுள்ளனர்.

சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் கழங்காடுதல், பாவை விளையாட்டு, பந்து விளையாட்டு, ஓரை விளையாட்டு, மணல் விளையாட்டு, எண்ணி விளையாடுதல், போன்ற விளையாட்டுக்களிலும் வள்ளைப்பாட்டு, பூப்பறித்தல், நீராடுதல், ஓசை எழுப்புதல் போன்ற கலைச்செயல்பாடுகளிலும் ஈடுபட்டுள்ளனர் என்பது பதிவாகியிருக்கிறது.

**கழங்காடுதல்**

கழங்கு என்பதற்கு ‘கழற்சிக்காய், கழற்சி விளையாட்டு, வெறியாட்டு, ஆடல் வெறியாட்டாளன், சூது, வேலனாடல் என்றும், கழங்காடுதல் என்பதற்குப் பெண்கள் ஆடும் கழற்சிக்காய் ஆட்டம்’ என்றும் அகராதியில் பொருள் கூறப்பட்டுள்ளன. இவ்வகையில் பெரும்பாணாற்றுப்படையில் மகளிர் முத்துப்போன்று ஆர்ந்த மணலிடத்தில் பொன்னாலான கழல் ஏந்தி ஆடுவதை,

**“முத்த வார்மணல் பொற்கழங்கு ஆடும்”** (பெரும்.335)

என்ற அடியும், காற்சிலம்பும் வளையல்களும் அணிந்த மகளிர், பொருநையாற்று மணல் மேட்டில் பொன்னால் செய்த கழற்சிக் காய்கள் கொண்டு வீசி விளையாடுவதை,

**“செறி அரிச் சிலம்பின், குறுந் தொடி மகளிர்**
**பொலம் செய் கழங்கின் தெற்றி ஆடும்”** (புறம்.36;3-4)

எனும் அடிகளும் தெரிவிக்கின்றன. ஒளி பொருந்திய நெற்றியினையுடைய மகளிர் கழற்சிக் காயொடு முல்லை நிலமெங்கும் திரிந்து கொண்டிருந்தனர். இதை, **“ஒண் நுதல் மகளிர் கழலொடு மறுகும்”** (பதிற்று.30;28) என்ற பதிற்றுப்பத்து அடி புலப்படுத்துகிறது. இதனால் பொன்னாலான கழற்சிக் காய்களைக் கொண்டு மகளிர் விளையாடியுள்ளதும், அக்காய்களைக் கையில் கொண்டு திரிந்தமையும் புலப்படுகிறது.

**பாவை விளையாட்டு**

பாவை என்பது பதுமையைக் குறிக்கும் விளையாட்டுப் பொருள்களுள் ஒன்று. இப்பாவை ஆண்-பெண் ஆகிய இருபாலர் உருவங்களில் அமைக்கப்பட்டதாகக் காணப்படும். மண்ணால் ஆனது மண்பாவை என்றும், மரத்தினால் ஆனது மரப்பாவை என்றும், மலரினால் ஆனது மலர்ப்பாவை என்றும், பொன்னாலானது பொற்பாவை என்றும், கோரைப்புல்லால் ஆனது பைஞ்சாய்ப்பாவை என்றும் அழைக்கப்பட்டுள்ளன. இவற்றை,

**“வரி மணல் புனை பாவைக்கு”**
**“திணிமணல் செய்வுறு பாவைக்குக் கொய் பூத் தைஇ”** (புறம்.11;3,243;2-3)
**“சுடர்விரி வினைவாய்ந்த தூதையும் பாவையும்”** (கலி.59;5)
**“தாதின் செய்த தண்பனிப் பாவை”** (குறு48;1)
**“செந்நீர்ப் பசும்பொன் புனைந்த பாவை”** (மதுரை.410)
**“பைஞ்சாய்ப் பாவைக்கும் தனக்கும்”** (ஐங்.383;5)

என்ற சங்கப் பாடல் அடிகளில் காண முடிகின்றன. இவ்வகையான பாவைகளை வைத்து மகளிர், சிறுமியர் போன்றோர் விளையாடுவர். மண்,

மரம் ஆகியவற்றால் செய்யப்படும் பாவைகளின் மேல் இயற்கையான பல வண்ணங்கள் பூசப்பட்டிருக்கும். இதன் மேல் ஓவிய வேலைப்பாடுகள் அமைக்கப்பட்டப் பாவை சித்திரப்பாவை என பெயர் பெற்றிருக்கும். இவ்விளையாட்டு மகளிர்க்குரியதாக இருப்பதை,

**"பணைத்தோட் குறுமகள் பாவை தைஇயும்,**
**பஞ்சாய்ப் பள்ளம் சூழ்ந்தும்"** (குறு.276;1-2)
**"வண்டற் பாவை வரிமணல் அயர்ந்தும்"** (அகம்.330; 2)

என வரும் அகப் பாடல்கள் தெரிவிக்கின்றன. மென்மையான தோள்களைக் கொண்ட பெண்கள், பாவையைச் செறிந்த மணலில் வைத்து விளையாடி பாதுகாத்துள்ளனர். இதனை,

**"தெற்றிப் பாவை திணி மணல் அயரும்**
**மென் தோள் மகளிர் நன்று புரப்ப"** (புறம்.283;12-13)

என்ற புறநானூற்றுப் பாடலில் காண முடிகிறது. இதன் மூலம் மகளிர் விளையாடியப் பாவை விளையாட்டு பற்றி அறிய முடிகிறது.

**பந்து விளையாட்டு**

பண்டைய காலத்தில் மகளிர் மட்டும் ஆடும் பந்தாட்டம் இன்று ஆண், பெண் ஆகிய இருபாலரும் ஆடும் ஆட்டமாக உள்ளது. வீட்டின் முற்றம், வெளிப்புறம், மாடம், மணல் பரப்பியப் பகுதி ஆகிய இடங்களில் இப்பந்தாட்டம் விளையாடப்பட்டுள்ளது. பந்து பல நிறங்களில் வேலைப்பாடுகள் கொண்டு காட்சியளிப்பதை,

**"வான்தோய் மாடத்து, வரிப்பந்து அசைஇ"** (பெரும்.333)
**"வரி புனை பந்தொடு வைஇய செல்வோள்"** (நற்.12;6)
**"வரிப் புனை பந்தொடு பாவை தூங்க"** (திரு.68)

என்ற தொடர்கள் கொண்டு அறிய முடிகின்றன. இப்பந்தாட்டம் மகளிர் ஒருவராகவோ, பலர் கூடியோ விளையாடுபவர்களின் பருவத் துடிப்பிற்கேற்பத் துடிப்புடன் ஆடப்படும். இவ்வாறு ஆடும்போது பாடலோடு கூடிய ஆட்டமும்

இடம் பெறும். இதனால் சந்தம் நிறைந்த இசைத்தன்மைக் கொண்டதாகப் பந்தாட்டப் பாடல்கள் அமையும். இவ்வாறு பாடும் சந்த இசைப்பாடல் 'கந்துகவரி' என்ற பெயரில் சிலப்பதிகாரத்தில் (காதை-29) இடம் பெற்றுள்ளது. இதைத் தொடர்ந்து சீவக சிந்தாமணியிலும் (இலம்பகம்-8;1951-1959) பந்தாடும் இடத்தில் சந்தப் பாடல்கள் இடம்பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

தொண்டை நாட்டுத் துறைமுக நகரங்களில் வாழும் மகளிர், தமது வீட்டின் மேல்மாடத்தில் பந்தடித்து விளையாடினர் என்பதை,

**"உயர்நிலை வான்தோய் மாடத்து, வரிப்பந்து அசைஇ"** (பெரும்.332-333)

என்ற பாடல் காட்டுகிறது. இதனால் மகளிர் விளையாடும் பந்தாட்டம் பற்றி அறிய இயல்கிறது.

**ஓரை விளையாட்டு**

ஓரை என்றால் 'மாதர் கூட்டம், மகளிர் விளையாட்டு, விளையாட்டிடம், குரவை, இராசு, ஒரு முகூர்த்தம், நேரம், கூகை, இரண்டரை நாழிகைப் பொழுது, அணிகலன்' என்றும், 'ஓரைப்பாவை என்றால் மகளிர் விளையாட்டுப் பாவை' என்றும், 'ஓரையயர்தல் என்றால் ஓரைப் பாவையை வைத்துக்கொண்டு மகளிர் விளையாடுதல்' என்றும் தமிழ் அகராதிகள் பொருள் தந்துள்ளன. இவ்வகையில் மெல்லிய வளையணிந்த மகளிர் ஓரை விளையாட்டு விளையாடியதை,

**"ஓரை ஆயத்து ஒண் தொடி மகளிர்"** (புறம்.176;1)

என்ற அடியில் நன்னாகனார் பாடியுள்ளார். இதனால் 'ஓரை' மகளிர் ஆடும் விளையாட்டு என்பது தெரிகிறது.

**மணல் விளையாட்டு (அ) வண்டல் அயர்தல்**

மணல் கொண்டு அழகிய உருவம் செய்து விளையாடுவது மணல் விளையாட்டாகும். இத்தகைய விளையாட்டைப் பெண்கள் விளையாடியிருக்கின்றனர். தூய அணிகலன்களையுடைய பேதைப்பெண்கள், வண்டல் மண்ணால் இழைத்த பாவைக்கு மலர் சூட்டி, பின் பொருநை ஆற்று நீரில் விளையாடுவர் என்பதை,

> **"வால் இழை, மட மங்கையர்**
> **வரி மணல் புனை பாவைக்குக்**
> **குலவுச் சினைப் பூக் கொய்து"** (புறம்.11;2-4)

என்ற பாடலில் பேய்மகள் இளவெயினி பாடியிருப்பதைக் காண முடிகிறது. உயர் மாடத்தில் வாழும் ஒளியுடைய வளையணிந்த மகளிர், முதிர்ந்து நீண்டு அகன்ற சிப்பியில் உள்ள முத்துப்போன்று, வெண்மையான ஒழுங்குபட்ட மணல் திடலின் மேட்டில் விளையாடியதை,

> **"முதிர் வார் இப்பி முத்த வார் மணல்,**
> **கதிர் விடு மணியின் கண் பொரு மாடத்து,**
> **இலங்கு வளை மகளிர் தெற்றி ஆடும்"** (புறம்.53;1-3)

என்று இளங்கீரனாரும், சோழ நாட்டு உழவர் மகளிர் நெய்தல் நிலத்து மணற்குன்றில் வண்டல் இழைத்தாடுவதை, **"இளையோர் வண்டல் அயரவும்"** என்ற அடியில்(பொரு.187) முடத்தாமக் கண்ணியாரும் சுட்டிக் காட்டியுள்ளார்கள். வண்டல் விளையாட்டு மகளிருக்குரியது என்பதை இவ்வடிகள் புலப்படுத்துகின்றன. இதனால் மகளிர் பொருநையாற்று மணலில் வண்டல் இழைத்தும், மணல் மேடுகளிலும் குன்றுகளிலும் மணல் விளையாட்டுக்கள் விளையாடியும் உள்ளனர் என்பது தெரிகிறது.

**எண்ணி விளையாடுதல்**

எண்ணி விளையாடுதல் என்பது சாலையில் செல்லும் உப்பு வண்டிகள், யானைகள், குதிரைகள், படகுகள், விளக்குகள், குருகுகள்

போன்றவற்றை எண்ணுதல் தொடர்பாக அமைந்தது. இதில் உப்பு வண்டிகள், யானை, குதிரை, படகுகள் ஆகியவற்றை எண்ணி விளையாடியதுப் பற்றி புறப்பாடல்கள் புலப்படுத்துகின்றன. பறம்பு மலையின் உயர்ந்த சிகரத்தில் ஏறி நின்று பகை மன்னரின் குதிரையை எண்ணிய பாரிமகளிர், தன் தந்தை இறந்த பிறகு உப்பு வண்டிகளை எண்ணினர் என்பதை,

**"…. …. …. பாரியது**
**அருமை அறியார், போர் எதிர்ந்து வந்த**
**வலம்படு தானை வேந்தர்**
**பொலம் படைக் கலிமா எண்ணுவோரே"** (புறம்.116;16-19)
**"ஈத்து இலைக் குப்பை ஏறி, உமணர்**
**உப்பு ஒய் ஒழுகை எண்ணுப மாதோ"** (புறம்.116;7-8)

என்ற அடிகளில் கபிலர் தெளிவுப்படுத்தியுள்ளார். செவ்விய இழையணிந்த மகளிர், யானைகளை எண்ணிய பாங்கை,

**"ஊசல் மேவல், சேயிழை மகளிர்**
**…. …. …. ….**
**விருந்தின் வீழ் பிடி எண்ணு முறை பெறாஅ"** (பதிற்று.43;2-5)

என்ற பதிற்றுப்பத்து அடிகளில் பரணர் குறிப்பிட்டுள்ளார். மகளிர் தங்கள் நடையோடு ஒத்திருந்த யானைகளை எண்ணி விளையாடியிருக்கின்றனர். இதைப்போன்று நெய்தல் நிலக்கடற்கரை ஓரங்களில், காற்றால் அடித்துக் கொண்டுவரப்பட்ட மரக்கலங்களை மகளிர் எண்ணியிருக்கின்றனர். இதனை, **"கடலே, கால்தந்த கலன் எண்ணுவோர்"** (புறம்.386;14) என்ற அடியில் கோவூர் கிழார் பாடியுள்ளார். இதன் வழியாக மகளிர் உப்பு வண்டிகள், யானைகள், மரக்கலங்கள் ஆகியவற்றை எண்ணி விளையாடியச் செயல்கள் வெளிப்படுகின்றன.

**வள்ளைப்பாட்டு**

சங்க காலத்தில் ஆடவரும் மகளிரும் ஈடுபட்ட எல்லா வகை விளையாட்டுக்களும், இசை நலன் சான்ற பாடல்களோடு அமைந்துள்ளன. காரணம் இசையோடு கூடிய செயலில் ஈடுபடும்பொழுது அது எளிமையாகவும், இனிமையாகவும் நிறைவடையும். இவ்விதத்தில் அமைந்தது வள்ளைப்பாட்டு. இதனை உலக்கைப்பாட்டு, உரற்பாட்டு, அவலிடி, அம்மானை, வள்ளை என்று சு.சிவகாமசுந்தரி அவர்கள் (சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம், ப.107) குறிப்பிட்டுள்ளார்.

'மகளிர் நெல் குற்றும்போது தலைவனைப் புகழ்ந்து பாடுதல் வள்ளை' என்று தமிழ்ப் பேரகராதியிலும்(Tamil Lexicon, vol.VI, p.3552), 'மகளிர் தெய்வத்தையோ, அரசனையோ, தமையன்மாரையோ, தலைவனையோ, வள்ளைப்பாட்டில் புகழ்ந்து வாழ்த்திப் பாடுவர்' என்று தமிழிசைக் கலைக்களஞ்சியத்திலும் (முதல்தொகுதி, ப.248) குறிப்பிடப்பட்டுள்ளன. தானியங்களைக் குற்றப் பயன்படும் உலக்கைகள் மக்களின் பொருளாதார நிலைக்கு ஏற்றாற்போல, சந்தனமரத்தாலும், யானைக் கொம்பாலும் செய்யப்பட்டிருந்தன என்பதை கலித்தொகைப் பாடல்கள்(40,41,42,43) புலப்படுத்துகின்றன. இத்தகைய வள்ளைப்பாட்டு, தினைக் குத்தும்போது மகளிரால் பாடப்பட்டதை,

**"தினைகுறு மகளிர் இசைபடு வள்ளையும்"** (மலை.342)

என்ற மலைபடுகடாம் அடி சுட்டுகிறது. தொழில், விளையாட்டு ஆகியவற்றின் போது மகளிர் மேற்கொள்ளும் வள்ளைப்பாட்டை, அடியார்க்கு நல்லார் 'பல்வரிக்கூத்துள்' ஒன்றாகக் காட்டியுள்ளார் (சிலம்பு. அடியார்க்கு நல்லார் உரை, பக்.88-89). பிற்காலத்தில் சமயம் சார்ந்த இசைப்பாடல்கள் இப்பாட்டின் அடிப்படையில் தோன்றியதாகவுள்ளது. திருவாசகத்தின்

‘திருப்பொற்சுண்ணம்’(9) என்னும் பகுதி இவ்விசைப்பாட்டில் அமைந்ததற்குச் சான்றாகும். எனவே வள்ளைப்பாட்டு சங்ககாலத்தில் ஆண்மகனின் புகழைப்பாடும் பாட்டாகவும், மகளிரின் உடல் நலத்தைப் பேணும் பயிற்சியாகவும் இருந்துள்ளன என்பது பெறப்படுகிறது.

மலர் கொய்தல்

மக்கள் அனைவரின் உள்ளங்களையும் கவரும் தன்மை மலருக்குண்டு. நிறமும் மணமும் மிக்க மலர்கள் பருவ வேறுபாடின்றி இளையோர் முதல் முதியோர் வரை அனைவரையும் மயக்கும் சிறப்புக் கொண்டது. இதனால் மனித வாழ்க்கையின் இன்பதுன்ப நிகழ்வுகள் அனைத்திலும் மலர்கள் இடம்பெறுகின்றன. தலைவியும் தோழியும் சேர்ந்து ‘தொண்ணூற்று ஒன்பது’ வகையான மலர்களைப் பறித்துப் பாறையில் வைத்த செய்தியைக் ‘குறிஞ்சிப்பாட்டு’ (61-98) என்னும் நூலில் கபிலர் குறிப்பிட்டுள்ளார். இது பூக்களின் மீது பெண்கள் வைத்திருக்கும் ஆர்வத்தை வெளிக்காட்டுவதாக உள்ளது.

மகளிர் பொழுது போக்கிற்காகவும், சுற்றத்தார்க்கு விரும்பி வழங்கும் பொருட்டும் மலர்கொய்தலில் ஈடுபட்டுள்ளனர். பெரிய நீர் நிலைகளிலிருந்து, நீர் எடுத்துச் செல்லும் மகளிர் செங்கழுநீர் மலர்களைப் பறித்துச் சென்று, ஊர்களில் வரும் சுற்றத்தார்க்கு விரும்பி வழங்கியிருக்கின்றனர். இதனை,

> **“நீர் தரு மகளிர் குற்ற குவளையும்,**
> **வன்புலக் கேளிர்க்கு வரு விருந்து அயரும்”**(புறம்.42;16-17)

என்ற பாடல் அடிகள் தெரிவிக்கின்றன. மென்மைத் தன்மைக் கொண்ட மகளிர் மருத நிலத்துத் தாமரை மலரை, நெய்தல் மலரோடு கொய்யும் காட்சி,

> **“வள் இதழ்த் தாமரை நெய்தலொடு அரிந்து**
> **மெல்லியல் மகளிர் ஒல்குவனர் இயலி”**(பதிற்று.78;4-5)

என்ற அடிகளிலும், வளையணிந்த மகளிர் பச்சை அவல் இடித்த உலக்கையை அருகிலுள்ள வாழை மரத்தில் சார்த்தி விட்டு வள்ளைப் பூவினைப் பறிப்பர் என்பதை,

**"அவல் எறி உலக்கை வாழைச் சேர்த்தி,**
**வளைக் கை மகளிர் வள்ளை கொய்யும்"** (பதிற்று.29;1-2)

எனும் பாடல் அடிகளிலும் குறிப்பிடப்பட்டுள்ளன. வேங்கை மரத்தின் பெரிய கிளைகளில் தோன்றிய மணம் பொருந்திய மலர்களைப் பறிக்கும் மகளிர் புலி வருவதாக ஆரவாரம் செய்வதை,

**"கருங்கால் வேங்கை இருஞ்சினைப் பொங்கர்**
**நறும் பூக் கொய்யும் பூசல்"** (மதுரை.296-297)
**"தலைநாள் பூத்த பொன் இணர் வேங்கை**
**மலை மார் இடூஉம் ஏமப் பூசல்** (மலை.305-306)

என்கின்ற பாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. இதன் மூலம் மகளிர் சுற்றத்தார்க்கு விரும்பி வழங்கும் பொருட்டும், வயலில் வேலைச் செய்யும் பொழுதும், ஆரவாரம் எழுப்பியும், மலர் கொய்தலில் ஈடுபட்டுள்ளனர் என்பது பெறப்படுகிறது.

**நீர் விளையாட்டு**

தமிழகத்தின் வெப்பமிகுதிக் காரணமாக இங்கு வாழும் மக்கள் குளிர்ச்சியை விரும்புகின்றவர்களாக உள்ளனர். ஆதலால் தாங்கள் வாழும் இடங்களிலுள்ள அருவிகள், ஆறுகள், சுனைகள், குளங்கள், ஏரிகள், கடல்கள் போன்ற நீர் நிலைகளில் நீராடி மகிழ்வர். இவ்வாறு நீராடுதல் இன்பம் நல்குவதாகவும், பொழுதுபோக்கு விளையாட்டாகவும் பழங்காலந் தொட்டு இருந்து வந்துள்ளது. மகளிர் தனித்தும், தன் தோழியர் கூட்டத்துடனும், கற்பு நிலையில் கணவருடனும் நீராடி மகிழ்ந்துள்ளனர். நீராடும் பொழுது மகளிர் 'ஈரணி' என்ற ஆடையை அணிந்துள்ளனர் என்பதை,

**“வதுவை ஈர்அணி”**(அகம்.166;13)
**“ஈரணி அணியின்”**(பரி.6;28)
**“விரும்பிய ஈரணி மெய் ஈரம்தீர”**(பரி.7; 61)

என வரும் பாடல் அடிகள் தெரிவிக்கின்றன. மேலும், மகளிர் நீராடும் பொருட்டு அதற்கேற்ற அணிகள் அணிந்து குதிரை, தேர், யானை போன்றவற்றின் மேல் சென்றதைப் பரிபாடல் (6;25-35) குறிப்பிடுகிறது. புதுப்புனலில் புனலாடச் செல்லும் மக்கள் ஆரவாரம் செய்து கொண்டு, மகிழ்ச்சியோடு அனைவரையும் துடிகொட்டி அழைத்துச் செல்வார்கள். அவ்வாறு செல்லும்போது மகளிர் இழை, கத்தூரி, சாந்து, மலர், மாலை போன்றவற்றைப் புதுப்புனலில் இட்டு (பரி.10;90-99) வணங்குவர். இது மக்களின் உயரிய வாழ்க்கைக்கு ஆதாரமாகவும், ஆற்றைக் கடவுளாகக் கருதி வணங்கும் செயலாகவும் அமைகின்றன. இவ்வகையில் சங்ககால மகளிர் நீர்த்துறைகளில் ஆடிப்பாடி விளையாடியுள்ளனர் என்பது அறியப்படுகிறது.

சங்ககால மகளிர் மலைகளில் இருந்து வரும் அருவி நீரைக் குடைந்தும், குளம், ஆறு போன்ற நீர் ஆதாரங்களில் விரும்பியும், நீந்தியும், குதித்தும் விளையாடியுள்ளனர். இவர்கள் விளையாடும் புனல் விளையாட்டில் நீர் குடைந்தாடியதை, **“புனல்ஆடு மகளிர் கதுமெனக் குடைய”** என்ற அடியும்(பொரு.241), அகில், சந்தனம், சுரபுன்னைப் போன்றவற்றை நீராடும் மகளிர்க்குத் தெப்பமாக நீர் கொண்டு வந்து தருவதை,

**“நறுவீ நாகமும் அகிலும் ஆரமும்
துறைஆடு மகளிர்க்குத் தோட்புணை ஆகிய
பொருபுனல் தரூஉம்”**(சிறு.115-117)

என்ற அடிகளும் தெளிவுப்படுத்துகின்றன.

ஆழமான இடத்தில் நீராடும்பொழுது மகளிரின் காதுகளில் அணிந்திருக்கும் பொற்குழை கழன்று விழுவதும், புனலாடுங்கால் நீரில் நழுவி விழும் என்று நினைத்து மகரக் குழையைக் கரையில் வைத்துப் பின்னர் மறந்து போவதும் முறையே,

**“புனல் பாய் மகளிர் ஆட ஒழிந்த**
**பொன் செய் பூங் குழை”** (பதிற்று.86;10-11)
**“இரைதேர் மணிச்சிரல் இரைசெத்து எறிந்தென,**
**புள்ஆர் பெண்ணைப் புலம்புமடற் செல்லாது”** (பெரும்.313-314)

என வரும் பாடல் அடிகளால் அறிய முடிகின்றன. மகளிர் தோழியர் கூட்டத்தோடு கடலில் நீராடி மகிழ்ந்தனர் என்பதை,

**“தொடலை அல்குல் தொடிந்தோள் மகளிர்**
**கடல் ஆடிக் கயம் பாய்ந்து”** (புறம்.339;6-7)

எனும் அடிகளும், தென்னை இளநீரையும், நுங்கின் நீரையும், கரும்புச் சாரையும் உண்டு, மகளிர் கடலில் பாய்ந்து விளையாடியதை, **முந்நீர் உண்டு முந்நீர்ப் பாயும்”** (புறம்.24;16) என்ற அடியும் சுட்டிக்காட்டுகின்றன. மகளிர் தாம் அணிந்துள்ள மாலை தம் கணவரின் மாலையோடு கூடிய நிலையில் நீராடியதை, மதுரைக்காஞ்சி அடிகளில்(265-266) மாங்குடி மருதனார் காட்டியுள்ளார். தெய்வ மகளிர் நீராடும் காட்சியும் இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது. இம்மகளிர் அருவியில் நீராடும் பொழுது நீரைக் கையால் குடையுந்தோறும் தோன்றும் இனிய ஓசையை,

**“அருவி நுகரும் வான் அர மகளிர்,**
**வரு விசை தவிராது வாங்குபு குடை தொறும்**
**தெரி இமிழ் கொண்ட நும் இயல் போல் இன் இசை”** (மலை.294-296)

என்கின்ற மலைபடுகடாம் பாடல் அடிகள் வெளிப்படுத்துகின்றன. மேலும், செறிந்த மணலிற் செய்த வண்டற்பாவைக்குப் பூவைப் பறித்துச் சூட்டும் இளமகளிர், குளிர்ந்தப் பொய்கையில் விளையாடும் காட்சி,

**“செய்வுறு பாவைக்குக் கொய் பூத் தைஇ**
**தண் கயம் ஆடும் மகளிரொடு கை பிணைந்து”** (புறம்.243;2-3)

என்ற அடிகளிலும், வயலிடத்தில் உள்ள ஆம்பல் தண்டினால் செய்த வளையணிந்த மகளிர், செம்மையான அவலினை, வாய் நிறையக் கொண்டவராய்க் குளிர்ந்த நீரில் பாய்ந்தாடுவதை,

**“பாசவல் முக்கி, தண் புனல் பாயும்”** (புறம்.63;13)

இப்பாடல் அடிகளினாலும் அறிய முடிகின்றன. இதனால் மகளிர் நீரைக் குடைந்தாடுவதும், வாசனைப் பொருட்களைக் கொண்டும், மகரக் குழையைக் கரையில் கழற்றி வைத்தும், தெய்வ மகளிர் எழுப்பும் இனிய ஓசையும், குளிர்ந்தப் பொய்கையில் இளமைந்தருடனும், அவலினை வாயில் கொண்டு நீராடியச் செயல்கள் பற்றியும் அறியப்படுகின்றன. நீர் விளையாட்டு உடல் நலம் காக்கும் பொருட்டாகவும், இன்பத்தின் பொருட்டாகவும் சங்க கால மகளிர் மேற்கொண்டுள்ளமை இதன் மூலம் தெளிவாகிறது.

**கூத்துக் கலைகள்**

கூத்து என்பதற்கு அதிசயம், நடனம், நாடகம், கேலி என்பது பொருளாகும். கூத்துக் கலைகள் பழங்கால மக்களிடம் இருந்து வந்த கலையாகும். இது கருங்கூத்து, கழனிக்கூத்து, வள்ளிக்கூத்து, வெறிக்கூத்து என்று அமைந்து காணப்படுகின்றன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் முதலிய நானிலங்களிலும் கூத்தர்கள் இருந்து வாழ்ந்துள்ளனர் என்பது சங்க நூல்கள் வழி அறிய முடிகின்றது. குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகனை வழிபடுவதற்காக ஆடும் கூத்து, குரவை அல்லது குன்றக் குரவை எனவும், முல்லை நிலக் கடவுளாகியத் திருமாலை வழிபட்டு ஆடும் கூத்து ஆய்ச்சியர் குரவை எனவும் பெயர் பெறுகின்றது. இவ்வகையில் சங்கப்புற இலக்கியங்கள் குறிப்பிடும் மகளிர் குரவை, துணங்கை ஆகிய கூத்து வகைகளை ஆடியுள்ளமைக்கானப் பதிவுகள் காணப்படுகின்றன.

## குரவைக் கூத்து

குரவையாடுதல் என்பது ஆண், பெண் ஆகிய இருபாலருக்கும் உரியது. ‘காதல், போர்வெற்றி ஆகியவைகளைப் பொருளாகக் கொண்ட பாடல்களைப் பாடிக்கொண்டு, வட்டமாக நின்று எழுவர் அல்லது ஒன்பதின்மர் கைகோத்து ஆடுவது குரவைக் கூத்தாகும்’ என்று கலைக்களஞ்சியம் (தொகுதி,நான்கு,ப.61) விளக்கம் தந்துள்ளது. ‘குரவைக் கூத்தே கைகோத்தாடல்’ என்று திவாகரம் (நூ-1963) குறிப்பிட்டுள்ளது. இதனால் குரவைப் பாட்டோடும், அப்பாட்டிற்கேற்ப ஆண்பெண் ஆகிய இருவரும் கைகோத்து நின்றாடும் கூத்து என்பது தெரிகிறது.

போர், வெற்றி ஆகியவற்றால் கிடைக்கும் மகிழ்ச்சியைக் கொண்டு போர்க் களத்தில் வீரர், விறலியர் ஆடும் குரவைக் கூத்தினை,

> **“தேரோர் ....வென்ற கோமான் முன்தேர்க்குரவையும்**
> **ஒன்றிய மரபின் பின்தேர்க்குரவையும்”** (தொல்.பொருள்.இளம்.புறத் 17; 5-6)
> **“கருங்கழல் மறவரொடு வெள்வளை விறலியர்**
> **பெருந்தகை தேரின் பின்ஆ டின்று”** (பு.வெ.மா.,து.,கொளு-14)
> **“பெய்கழலான் தேரின் பின்**
> **மொய்வளை விறலியர் வயவரொடு ஆடின்று”** (பு.வெ.மா.,வா.,கொளு-7)

என்று தொல்காப்பிய உரையும், புறப்பொருள் வெண்பாமாலையும் குறிப்பிடுகின்றன. **தழூஉ** (கலி.104), **தழுவணி** (குறு.294) என்ற பெயர்களில் குரவைச் சுட்டப்படுகின்றன. சங்க காலத்தில் இறை வழிபாட்டிற்காகவும், பொழுது போக்கிற்காகவும், போர்க்களங்களில் வெற்றி பெற்றமைக்காகவுமான சூழல்களில் குரவைக் கூத்து ஆடப்பட்டுள்ளது. இது இறைவழிபாட்டில் சடங்காகவும், பொழுது போக்கில் மகிழ்விற்காகவும், போர்க்கள வெற்றியின் அடையாளமாகவும், மேற்கொள்ளப்பட்டுள்ளது. குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம் என்ற நான்கு நிலங்களில் வாழ்ந்த மக்களும் குரவை ஆடியுள்ளனர்.

குறவர் தொண்டகப்பறைக் கொட்டக் குரவையாடுவர். இதைக் காணும் மகளிர் குரவைக்குரிய இலக்கணப்படி பாடிக்கொண்டு ஆடுவர். பரதவருடைய மகளிர் எந்த நாளும் ஆடும் குரவைக்கூத்தின் ஓசை, **“பரதவர் மகளிர் குரவையொடு ஒலிப்ப”** (மதுரை.97) என்ற அடியும், வேலனை வழிபடும்போது மகளிர் ஆடும் குரவைக்கூத்தினை,

> **“சீர் மிகு நெடுவேட் பேணி, தழூஉப் பிணையூஉ**
> **மன்று தொறும் நின்ற குரவை”** (மதுரை.614-615)

என்கின்ற மதுரைக்காஞ்சி அடிகளும், குறிப்பிடுகின்றன. வளையணிந்த மகளிர்க்கு ஆடவர் முதற்கைத் தந்து குரவை அயரும் இயல்பினை **“மைந்தர் எல் வளை மகளிர்த் தலைக் கை தரூஉந்து”** (புறம்.24;8-9) என வரும் பாடல் அடிகளில் காண முடிகின்றன.

நன் செய் நிலங்களில் பயிர்களை அழிக்க வரும் நாரையைத் துரத்துகின்ற மகளிர், தாங்கள் அணிந்திருந்தப் பொன் நகைகளை நீக்காமல், பல இடங்களிலும் புதிதாக நிகழ்த்தியக் குரவைக்கூத்துக் காட்சியை,

> **“செய்யுள் நாரை ஒய்யும் மகளிர்**
> **இரவும் பகலும் பாசிழை களையார்**
> **குறும்பல் யாணர்க் குரவை அயரும்”** (பதிற்று.73;9-11)

என்ற பதிற்றுப்பத்து அடிகளில் அரிசில் கிழார் பாடியுள்ளார்.

குறவர், தம் மனைவியரோடு சேர்ந்து சிறுபறை ஒலிக்க குறிஞ்சி மலையுச்சியில் மது அருந்தி, குரவைக் கூத்தாடியதை,

> **“நறவு நாட் செய்த குறவர் தம் பெண்டிரொடு**
> **மான் தோற் சிறுபறை கறங்கக் கல்லென**
> **வான் தோய் மீமிசை அயரும் குரவை”** (மலை.320-322)

என்ற மலைபடுகடாம் அடிகளும், தேறல் உண்ட சிறுகுடிக் கானவர் தம் சுற்றத்தாருடன் மகிழ்ந்து குரவை அயர, மகளிர் அவர்கள் கையினைத் தழுவி தம் கையினால் முதற்கைக் கொடுத்துக் குரவையாடியச் செய்தியை,

**"நீடுஅமை விளைந்த தேக்கண் தேறல்**
**குன்றகச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து,**
**தொண்டகச் சிறுபறைக் குரவை அயர"** (திரு.195-197)
**"மென்தோள் பல்பிணை தழீஇ, தலைத்தந்து"** (திரு.216)

என நக்கீரர் பாடிய முருகாற்றுப்படையினாலும் தெரிய வருகின்றன. எனவே மகளிர் ஆடவர்க்கு முதற்கைத் தந்தும், மது அருந்தியத் தம் கணவரோடு சேர்ந்தும் குரவை ஆடியுள்ளது புறப் பாடல்களினால் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

**துணங்கைக் கூத்து**

துணங்கைக் கூத்து ஆண்கள், பெண்கள் ஆகிய இருவருக்கும் உரியது. குரவையைப் போல் துணங்கையும் போர்க் காலங்களிலும், வெற்றி பெறும் நேரங்களிலும் ஆடப்படுவதாக உள்ளது. இது ஆடும் முறையை "முடக்கிய இருவகைப் பழுப்புடையொற்றி, துடக்கிய நடையது துணங்கையாகும்" என்று திவாகரம் (நூ.1964) கூறியுள்ளது. இத்திவாகர விளக்கம், தமிழ்ப் பேரகராதியில் கூறப்பட்டுள்ள 'முடக்கிய இரு கைகளையும் விலாப்புடைகளில் ஒற்றியடித்துக் கொண்டு அசைந்தாடும் ஒருவகைக் கூத்து' என்னும் கருத்து விளக்கத்திற்கு ஒப்ப அமைந்துள்ளது. சிலப்பதிகார உரையாசிரியரான அடியார்க்கு நல்லார், இதனை 'சிங்கிக்கூத்து' என்று உரைத்துள்ளார். சங்க கால விழாக்களில் துணங்கையாடியதை,

**"முழவு இமிழ் துணங்கை தூங்கும் விழவின்"** (அகம்.336;16)
**"விழவு அயர் துணங்கை தழூஉகம் செல்ல"** (நற்.50;3)
**"துணங்கை, அம்தழூஉவின் மணம் கமழ் சேரி"** (மதுரை.329)

என்ற சங்கப்பாடல் தொடர்கள் கொண்டு அறிய முடிகின்றன. இத்துணங்கைக் கூத்தில் ஆர்வம் கொண்ட இறைவியைத் ‘துணங்கையஞ்செல்வி’ என பெரும்பாணாற்றுப்படையில்(459) கடியலூர் உருத்திரங்கண்ணனார் சிறப்பித்துக் காட்டியுள்ளார்.

துணங்கைக் கூத்து ஆடும் இடங்களில் மகளிர் தம் தலையிலும், தழையாடைகளிலும் ஆம்பல் மலரணிந்து விரைவாக ஆடியதால் உதிர்ந்த மலர்களைப் பசுக்கள் உண்ணும் காட்சியையும், முழவின் ஓசைக்கேற்ப மகளிர் ஆடிய துணங்கைக் கூத்திற்கு ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் தலைக்கைத் தந்த சிறப்புத் தன்மையைப் பதிற்றுப்பத்துப் பாடல் அடிகளும் புலப்படுத்துகின்றன. இவைகள் முறையே,

> **“கலிகெழு துணங்கை ஆடிய மருங்கின்**
> **வளைதலை மூதா ஆம்பல் ஆர்நவும்”** (பதிற்று.13;5-6)
> **“முழா இமிழ் துணங்கைக்குத் தழூஉப் புணை ஆக,**
> **சிலைப்புவல் ஏற்றின் தலைக் கை தந்து”** (பதிற்று.52;14-15)

என்றவாறு அமைந்து காணப்படுகிறது. இதனால் மகளிர் ஆடைகளிலுள்ள மலர்கள் உதிர்ந்து விழும் அளவிற்கு ஆரவாரம் செய்து துணங்கை ஆடியுள்ளனர் என்பதும், மகளிருக்கு மன்னன் முதற்கைத் தந்து ஆடியுள்ளமையும் தெளிவாகிறது. இதனால் மகளிர் குரவை மற்றும் துணங்கைக் கூத்துக்களை ஆடியமை வெளிப்படுகிறது.

**நாடகக் கலை**

நாடகம் என்றால் நாடகத்தமிழ், கதைநடிப்பு என்பது பொருளாகும். மனிதனைக் கண்டும் கேட்டும் இன்புற வைப்பது நாடகமாகும். இது சிந்தனையை இயக்கி இன்பம் பயப்பதாகும். இயலும், இசையும் கலந்து அமையப் பெற்றதாக நாடகக்கலை உள்ளது. ‘நாட்டின் கடந்த காலத்தையும், நிகழ்காலத்தையும், எதிர்காலத்தையும் தன்னகத்து அடக்கிக்

காட்டுவதால் நாடு+அகம்=நாடகம் என்றாயிற்று' என்று அவ்வை தி.க.சண்முகம் அவர்கள் (நாடகக் கலை,ப.4) விளக்கிக் காட்டியுள்ளார். சங்க இலக்கியங்களில் நாடகக்கலைப் பற்றிய குறிப்புகள் குறைவாகக் காணப்படுகின்றன.

'நாடகம்', 'நாடகமகளிர்' என்றச் சொற்கள் பட்டினப்பாலை(113), பெரும்பாணாற்றுப்படை(55) ஆகிய நூல்களில் இடம் பெற்றுள்ளன. இதைக்கொண்டு பண்டைய காலம் முதல், நாடகமும் அதில் நடிக்கும் நாடக மாந்தர்களும் இருந்துள்ளனர் என்பதை அறிய முடிகிறது. நாடகம் என்பது நாட்டியம், கூத்து ஆகியவற்றைக் கொண்டதாகும். சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றுள்ள எழினி, அரங்கம், நாடகமாந்தர் ஆகிய சொற்களையும் அவற்றின் உரைகளையும் கொண்டு பழங்கால நாடகக் கலைகள் பற்றி தெரிந்து கொள்ள முடிகின்றன.

சிலப்பதிகாரத்தின் உரையாசிரியரான அடியார்க்குநல்லார் கூத்தை 'நாடகம், அவிநயம்' என்று இரு வகையாகக் குறிப்பிட்டுள்ளார். 'நாடகம் என்பது ஒரு கதைத் தழுவி வரும் பாடலுக்குத் தக்கவாறு ஆடுதல்' என்றும், அவிநயம் என்பது ஒரு குறிப்பிட்ட பாடலுக்கு உடலசைவு செய்து ஆடும் நடனம் என்றும் பொருள் (சிலம்பு. அடியார்க்கு நல்லார் உரை,ப.80) கூறப்பட்டுள்ளன. இதனால் நாடகம் என்ற கலை பழங்காலத்தில் கூத்து என்னும் சொல்லில் வழங்கப்பட்டுள்ளதை அறிய முடிந்தது.

பண்டைக் காலத்தில் கூத்து என்று வழங்கப்பட்ட நாடகக் கலைகளில் பங்குபெறும் மாந்தர்களுள் ஆண்கள் கூத்தன் என்றும், பெண்கள் கூத்தியர் என்றும் அழைக்கப்பெறுவர். மனதின் உள்ளக் குறிப்புகளைப் பார்வையாளர்கள் புரிந்துக் கொள்ளும் வண்ணம் வல்லமையோடு ஆடும் மகளிர் விறலியர் என அழைக்கப்பட்டனர். இவ்வாறான ஆண் நாடகக்

கலைஞர்களைக் கூத்தர், பாணர், பொருநர் என்று அழைப்பது போலவே, பெண் நாடகக் கலைஞர்கள் கூத்தியர், பாடினி, விறலி என்று அழைக்கப்பட்டிருக்கின்றனர். இவர்கள் நாடகத்தில் சிறப்புப் பெற்று விளங்கியதை 'விறலியாற்றுப்படை' என்னும் பெயரில் அமைந்த பத்துப் புறப்பாடல்கள் அமைந்த துறைகளைக் (பதிற்று.40,49,.57,60,78,87, புறம்.64,103,105,133) கொண்டு தெரிந்துக் கொள்ள முடிகிறது. ஆடும் திறம் கொண்ட மகளிரை (விறலியர்) அரசர்கள் போற்றிப் பரிசு வழங்கியதை (பொருநராற்றுபடையும்-162),

> **"ஆடுவண்டு இமிரா அழல்அவிர் தாமரை**
> **.... .... .... ....**
> **தொடைஅமை மாலை விறலியர் மலைய"** (பெரு.481-486)
> **" விறலியர் சீர்கெழு சிறப்பின் விளங்கு இழை அணிய"** (மலை.569-570)
> **"ஒள் நுதல் விறலியர்க்கு ஆரம் பூட்டி"** (பதிற்று.48;2)

என்கின்ற பாடல் அடிகள் தெரிவிக்கின்றன. மேலும், கூத்தியர், விறலியர் ஆடும் களங்கள் இருந்துள்ளன. அக்களத்தில் கூத்தர்களும், ஆடல்கலை வல்ல விறலியர்களும் ஒத்தும், உறழ்ந்தும் ஆடியுள்ளனர். இதனை,

> **"கூத்தர் ஆடுகளம் கடுக்கும்"** (புறம்.28;13-14)
> **"நாடக மகளிர் ஆடுகளத்து எடுத்த"** (பெரும்.55)

என வரும் அடிகள் புலப்படுத்துகின்றன. ஆண், பெண் பறவைகளை அழகுச் செய்து ஆடச் செய்யும் கூத்து அல்லியங்கூத்து எனப்பட்டது. இதனை,

> **"வல்லோன் தைஇய வரி வனப்பு உற்ற**
> **அல்லிப் பாவை ஆடு வனபப்பு ஏய்ப்ப"** (புறம்.33;16-17)

எனும் புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது. இவை மட்டுமல்லாது கழைக்கூத்து, ஆரியக்கூத்து போன்ற கலை வகைகள் இருந்ததைச் சங்க அக நூல்கள் (நற்.95, குறி.193-194, குறு.73-5) குறிப்பிடுகின்றன. இதனால்

நாடகக்கலைகளில் மகளிரின் பங்களிப்பு, அவர்களின் ஈடுபாடு, கலையார்வம் ஆகியவை புலப்படுகின்றன.

**மகளிரின் இசைவளம்**

இசை என்பது இசைப்பவரையும், கேட்பவர்களையும் உணர்வினால் இணைப்பதாகும். ‘இசைப்பு இசையாகும்’ என்று தொல்காப்பிய இலக்கண உரை(தொல்.சொல்.இளம்.உரியியல்,நூ.12)கூறுகிறது. இசைக்கு மனிதன் மட்டுமல்லாமல் விலங்கு, பறவை போன்ற உயிரினங்களும் வயப்படும். இசையின் பயனையும், சுவையையும் அறிந்திருந்த சங்கத் தமிழர்கள் தாய்மொழியின் ஒரு கூறாக இசையை வைத்து இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழின் வரிசையில், நடுவிடம் தந்து போற்றி வந்துள்ளனர்.

‘இசைத்தமிழ் பற்றிய இலக்கண நூல்கள் இருந்ததாக உரையாசிரியர்கள் குறிப்பிட்டிருந்தவை காலப்போக்கில் அழிந்துவிட்டன. ‘பஞ்சமரபு’ என்ற இசை இலக்கண நூல் மட்டும் கிடைக்கப்பெற்றுள்ளது’ குறித்து கு.வெ.பாலசுப்பிரமணியன் அவர்கள் (சங்க இலக்கியத்தில் கலையும், கலைக்கோட்பாடும், ப.117) குறிப்பிட்டுள்ளார். சங்க காலத்தமிழர்கள் மிடற்றாலும், கருவிகளாலும் இசைத்து, இசைப்பயன் உணர்ந்துள்ளனர், என்பதற்குச் சங்க இலக்கியங்களில் பல சான்றுகள் கிடைத்துள்ளன. இவற்றில் பாடற்கலையும், ஆடற்கலையும் பொழுது போக்கிற்காக மட்டும் அல்லாமல், தொழிலாகக் கொண்டு வாழ்ந்துள்ளனர் என்பதையும் சங்க நூல்கள் புலப்படுத்துகின்றன.

மிடறு, பறை, துடி போன்ற கருவிகளைக் கொண்டு இசைக்கலையைப் பேணிவந்தவர்கள் முறையே பாணன், பறையன், துடியன், என்று குடிப்பெயர்கள் கொண்டு வாழ்ந்துள்ளனர். மிடற்றால் பாடும் ஆண்களைப் பாணன் எனவும், பெண்களைப் பாடினி எனவும் வழங்கினர். இதைப்போல்

பாடியாடும் கலைஞர்களுள் ஆண் கூத்தன், பொருநன் எனவும், பெண் கூத்தியர், விறலியர் எனவும் அழைக்கப்பட்டனர். ஆடல், பாடல் ஆகிய கலைத்துறையில் இருபாலரும் ஒரே சிறப்பினைக் கொண்டு விளங்கியுள்ளனர். உருவம், அழகு ஆகியவற்றைப் புலவர்கள் வருணிக்கும் போது மகளிருக்கு அதில் முக்கியத்துவம் கொடுத்துள்ளனர் என்பதை, பத்துப்பாட்டு நூல்கள் (பொரு.25-47, சிறு.14-31) கொண்டு அறிய முடிகிறது.

**மனித வாழ்வியலில் இசை**

ஒரு மனிதன் பிறந்து வளர்ந்து இறக்கும் வரை, அவன் வாழ்க்கையில் இசை இடம் பெறுகிறது. பிறப்பில் தாலாட்டு முதல் இறப்பில் ஒப்பாரி வரையாக அவ்விசை அமைகிறது. இவ்வாறு பிறப்பின் தொடக்கத்திலும் வாழ்வின் முடிவிலும் இடம்பெறும் இசை மகளிரால் பாடப்படுவதாக அமைந்துள்ளது. இது அவர்களின் இன்ப துன்ப உணர்வுகளை வெளிப்படுத்தும் இசை ஈடுபாட்டிற்கு உதாரணமாகிறது. மக்களின் வாழ்வியல் சூழல்களில் இடம்பெறும் இசையில் மகளிர் கொண்டுள்ள ஆர்வம், ஆண்களை விடவும் சிறப்பானதாகும்.

‘சங்ககால இசை, தமிழ் மக்களால் கண்டுணரப்பெற்றும் பண்களும், திறன்களுமாய் மிகவும் விரிவாக வகுத்தும் போற்றப்பட்டது’ என்று விபுலானந்த அடிகள் (யாழ்நூல்,ப..362) குறிப்பிட்டுள்ளார். இவர் ‘சங்கத் தமிழர்கள் பயன்படுத்திய யாழ், குழல், முழவு ஆகிய இசைக் கருவிகள் எல்லாம் அவர்களாலேயே கண்டு பிடிக்கப்பெற்று, உருவாக்கிக் கையாளப் பெற்றன’ என்றும் விளக்கிக்காட்டியுள்ளார். தமிழில் இசை இலக்கணம் கூறும் நூல், தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே இருந்தது என்பதை,

**“இசையோடு சிவணிய நரம்பின் மறை”** (தொல்.எழுத்து.இளம்.நூ33;2-3)

எனும் தொல்காப்பிய அடி சுட்டிக்காட்டுகிறது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய திணை வாழ்க்கைக்கு அடிப்படையான கருப்பொருளில் பண்கள் பற்றியும், இசைக்கருவிகளான பறை, யாழ் ஆகியவற்றைப் பற்றியும்,

**"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அவ்வகை பிறவும் கருவென மொழிப"** (தொல்.பொருள்.இளம்.அகத்.நூ.20)

என்று தொல்காப்பியம் குறிப்பிட்டுள்ளது.

தொல்காப்பியர் ஐவகை நிலங்களுக்குரிய பண்கள், அவற்றைப் பாடுவதற்கேற்றக் காலங்கள் பற்றி குறிப்பிட்டுள்ளார். இதனால் சங்கத் தமிழர்களின் வாழ்க்கையில் இசை பெற்றிருந்த இடத்தைப் பற்றி அறிய முடிகிறது. யாமத்தில் குறிஞ்சிப்பண்ணும், மாலையில் முல்லைப்பண்ணும், விடியலில் மருதப்பண்ணும், ஏற்பாட்டில் நெய்தற்பண்ணும், நண்பகலில் பாலைப்பண்ணும் பாடப்பட்டுள்ளன. இதனடிப்படையில் குறிஞ்சிப்பண் நள்ளிரவில் இசைத்ததை நற்றிணைப் பாடல் (255;1-3) அடிகளும், மருதப்பண் விடியற்காலை இசைத்ததைப் புறநானூற்றுப் பாடல்களும் (149,144,146,147) தெரிவிக்கின்றன. செவ்வழிப்பண் மாலையில் இசைத்ததை,

**"திவவு மெய்ந் நிறுத்துச் செவ்வழி பண்ணி"**(மதுரை.604)
**"யாழோர் மருதம் பண்ண"**(மதுரை.658)

என்கின்ற மதுரைக்காஞ்சி அடிகளாலும், நைவளப்பண் பகற்காலத்தில் இசைத்ததை, **"நைவளம் பழுநிய நயம் தெரி பாலை"** என்ற இச்சிறுபாணாற்றுப்படை அடியாலும்(36) அறிய முடிகிறது. 'கால உணர்வு, நிலத்தன்மை, சுவைப்புலப்பாடு, இசையமைப்பு ஆகிய கூறுகளுடன் சங்ககாலப் பண்கள் அமைக்கப்பட்டுள்ளன' என்று ஏ.என்.பெருமாள் (தமிழர்

இசை, ப.79) குறிப்பிட்டுள்ளார். யாழின் இசைக்கு யானை கட்டுப்பட்டு நின்றதை,

**“காழ்வரை நில்லாக் கடுங் களிற்று ஒருத்தல்**
**யாழ்வரைத் தங்கியாங்கு”** (கலி.2;26-27)

என்ற கலித்தொகைப் பாடல் சுட்டிக்காட்டியுள்ளது. குறிஞ்சி நில மலைப்பகுதியில் உள்ள மூங்கில்களில், வண்டுகளால் ஏற்படுத்தப்பட்டத் துளைகளில் நுழைந்த காற்று குழலிசையாகவும், மலைச்சாரலில் வீழும் அருவி நீர் ஒலிக்கும் ஓசை முழவிசையாகவும், பூக்களில் தேனை உண்ட வண்டுகள் மகிழ்ந்து ஒலிக்கும் ஓசை யாழிசையாகவும் கொண்டு வருணிக்கும் அகநானூற்றுப் பாடல் இயற்கை ஒலிகளை இசையோடு ஒப்பிட்டுப் பார்க்கும் தன்மைக் கொண்டதாக உள்ளது. இதனை,

**“ஆடு அமைக் குயின்ற அவிர் துளை மருங்கின்**
**.... .... .... ....**
**இன் பல் இமிழ் இசை கேட்டு, கலி சிறந்து”** (அகம்.82;1-7)

இவ்வடிகள் மூலம் அறிய முடிகின்றன.

கடந்த காலத்திலும், நிகழ்காலத்திலும் இசை முதலான கலைகளைப் பயில்வதில் மகளிர் சிறப்புரிமையுடையவராகத் திகழ்கின்றனர். ‘வாழ்க்கையில் மகிழ்ச்சி விளைக்கும் கலைகள் பலவற்றையும் தமிழ் நாட்டு மகளிர் ஐந்தாம் வயது நிரம்பிப் பன்னிரண்டாம் வயது முடியவுள்ள ஏழாண்டுகளிலும் நன்றாகக் கற்றுணர்ந்தனர்’ என்று க.வெள்ளைவாரணன் (சங்க காலத் தமிழ் மக்கள் ப.91) குறிப்பிட்டுள்ளார். இசைக் கருவிகளை வாசித்தல், இசையோடு பாடுதல், உள்ளக் கருத்துக்களை குறிப்பால் வெளிப்படுத்துதல், சித்திரம் தீட்டுதல் போன்ற பல நுண்கலைகளில் சங்ககால மகளிர் வல்லவர்களாகத் திகழ்ந்திருக்கின்றனர்.

தலைவியின் பல எழில் நலங்களை நினைத்திருக்கும் தலைவனை, அவள் இனிய குரல் பெரிதும் வயப்படுத்தியது என்பதையும்,

**“பல் இதழ் மென் மலர் உண்கண், நல்யாழ்**
**நரம்பு இசைத்தன்ன இன் தீம் கிளவி”** (அகம்.109;1-2)

என்ற அகப்பாடல் புலப்படுத்துகிறது. இதனால் மகளிரின் இசைத்திறம் மற்றும் இலக்கியங்களில் குறிப்பிட்டுள்ள இசைவளம் பற்றி அறிய முடிகிறது.

**சங்கப் புற இலக்கியங்களில் இசைக்கலை**

ஒருவரின் குரல் வளமாகவும், கேட்பதற்கு இனிமையாகவும், இருந்தால் அவரின் பாடல் கேட்பதற்கு இன்பமாக இருக்கும். ‘சுவையும், கருத்தும் மிடற்றுப் பாடல்களில் வெளிப்படுதல் போல இசைக்கருவிகளில் வெளிப்பட மாட்டாது’ என்று மு.கதிரேசச் செட்டியர் (இசையின்பம், மணிமலர்த்திரட்டு, ப.24) கூறியுள்ளார். மிடற்றுப்பாடல் சமூகத்தில் சிறப்பிடம் பெற்று விளங்கியிருந்துள்ளது. இம்மிடற்றுப்பாடலை, ‘சாரீரவீணை’ என்று அடியார்க்கு நல்லார் (சிலப்பதிகார உரை, ப.101) குறிப்பிட்டுள்ளார். இவ்விதமாகச் சங்கப்புலவர்கள் பாடியுள்ள பாடல்கள் இன்றும் சிறந்த இலக்கியங்களாக விளங்குகின்றன. ஆனால் புலவர்கள் அல்லாத பாணன், பாடினியர், விறலியர், கூத்தர் போன்ற கலைஞர்கள் இசைத் தன்மையுடன் பாடிய வாய்மொழிப் பாடல்கள் நூல்களில் இடம்பெறாமல் போயின.

முடத்தாமக் கண்ணியார் திருமாவளவனின் சிறப்பை,

**“பாடல் பற்றிய பயனுடை எழாஅல்**
**கோடியர் தலைவ”** (பொரு.56-57)

என்ற பொருநராற்றுப்படை அடிகளில் பாடியுள்ளதில் இருந்து, அவையில் இசைப்பாடல் பாடிய விதம் பற்றித் தெரிகிறது. சங்கப்புற இலக்கியங்கள் குறிப்பிடும் மகளிர் பண்ணோடுப் பாடிய பாடல்களை பற்றி அறியும் போது,

அவர்களின் இசையார்வம் வெளிப்படுகிறது. இம்மகளிர் உழிஞை, தழிஞ்சி, விறற்களம் போன்ற பாடல் வகைகளையும், குறிஞ்சி, மருதம், பாலை, காஞ்சி, செவ்வழி போன்ற பண் வகைகளையும் பாடி இசைத்துள்ளனர்.

**உழிஞை பாடிய மகளிர்**

போர்க்களத்தில் வெற்றிபெற்ற மன்னனைப் புகழ்ந்து அவன் மனம் மகிழும்படி பாண்குடிமகள் உழிஞைத்திணையில் பாடியதை,

> **"வண்டுபடு கூந்தல் முடி புனை மகளிர்**
> **தொடை படு பேரியாழ் பாலை பண்ணி**
> **பணியா மரபின் உழிஞை பாட"** (பதிற்று.46;4-6)

என்ற பதிற்றுப்பத்தின் ஐந்தாம்பத்துப் பாடல் அடிகள் வெளிப்படுத்துகின்றன.

**தழிஞ்சி பாடிய மகளிர்**

தழிஞ்சி என்பது தழுவுதல் என்ற நிலையில், மன்னர் தம் படையாளர் முன்பு அவர்கள் போர் மேற்கொள்ளும்போது பல தடுப்புக் கருவிகளையும் படைகளையும் கொண்டு எதிரிகளைத் தடுத்தும், தாக்கியும் அழிந்தவர்களைக் குறித்து வினாவி தழுவிக் கொள்வதாகும். 'தழிச்சுதல் தழிஞ்சியாயிற்று' என்று பதிற்றுப்பத்தின் உரையில் பொருள் (பதிற்றுப்பத்து மூலமும் பழைய உரையும், உ.வே.சா. பதிப்பு ப.150)கூறப்பட்டுள்ளது. பாணனது யாழும், விறலியரின் குரல் இசையும் இணைந்துப் பிறக்கும் பாடலான,

> **"சொல்லாமோதில் சில் வளை விறலி!**
> **பாணர் கையது பணி தொடை நரம்பின்**
> **விரல் கவர் பேரியாழ் பாலை பண்ணி,**
> **குரல் புணர் இன் இசைத் தழிஞ்சி பாடி"** (பதிற்று.57;6-9)

என்ற இவ்வடிகளில் பேரியாழ் கொண்டு இசைக்கும் பாலைப்பண்ணும், தழிஞ்சிப் பாடலும் பாடியமை புலப்படுகிறது. இதனால் பாணர், விறலியர் ஆகியோரின் பண் மற்றும் மிடற்றுப்பாடல் திறம் தெரிய வருகிறது.

### விறற்களம் பாடும் மகளிர்

போர்க்களத்தில் வெற்றிபெறும் மன்னனின் புகழை வெற்றிப்பெற்ற களத்தில் நின்று புலவர்கள் பாடுதல் களம் பாடுதல், என்றும் களவெற்றி என்றும் கூறுவர். போர்க்களத்தில் அஞ்சாது எதிர்த்து நின்று போராடி, பெறும் வெற்றியைச் சங்ககாலத் தமிழ் மன்னர்கள் பெருமையாகக் கருதினர். அவ்வாறு அடையும் வெற்றியைப் புலவர்கள் மட்டுமல்லாது பாணர், கூத்தர் போன்றோரும் பாடிச் சிறப்பித்துள்ளனர். மேலும் மன்னரின் வெற்றியை மகளிர் இசைக் கொண்டு ஆடிப்பாடிப் போற்றியுள்ளனர். திருமுருகாற்றுப் படையின் தலைவனான முருகன் அவுணரை வென்றச் செய்தியைச் சூரரமகளிர் சிறப்பித்துப் பாடியுள்ளனர். கையால் வரைந்து இயற்றாக் கவின்பெறு அழகு மிகுந்த சூரரமகளிர் பலரும், **"கோழி ஓங்கிய வென்றுஅடு விறற்கொடி வாழிய பெரிது"** (திரு.38-39) என்று முருகனின் வெற்றியை வாழ்த்திப் பாடினர்.

> **"சீர்திகழ் சிலம்புஅகம் சிலம்பப் பாடி**
> **சூரர மகளிர் ஆடும் சோலை"** (திரு.40-41)

என்று முருகன் வெற்றி பெற்ற போர்க்களச் சிறப்பைச் சூரர மகளிர் துணங்கையாடி மகிழ்ந்துள்ளனர். சூரரமகளிர் மட்டுமல்லாமல் குறிஞ்சி நிலப்பெண்ணாகியக் குறமகளும், இசைக்கருவிக் கொண்டு முருகனைப் பாடியுள்ளாள். இதனை,

> **"குருதிச் செந்தினை பரப்பி, குறமகள்**
> **முருகுஇயம் நிறுத்து, முரணினர் உட்க,**
> **முருகுஆற்றுப் படுத்த உருகெழு வியல்நகர்"** (திரு.242-244)

இவ்வடிகள் குறிப்பிடுகின்றன. இதன் வழியாகப் புறப்பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ள மகளிர் விறற்களம் பாடிய செய்தி பெறப்படுகிறது.

**பண் வகைகள்**

'பண்ணென்றது நரம்படைவால் நிறந்தோன்றப் பண்ணப்படா நின்ற பண்ணும் பண்ணியற்றிறமும் திறத்திறமும்' என்று அடியார்க்கு நல்லார் (சிலம்பு.உரை, 3;46,ப.109) குறிப்பிட்டுள்ளார். 'பண்ணுதல்' என்னும் வினையடியாகப் பிறந்தது 'பண்' (விபுலானந்த சுவாமிகள், யாழ் நூல்,ப.12) ஆகும். 'யாழின் வழி கொண்டு பண்ணப்படுவதால் பண் என வழங்கலாயிற்று' (கோமதி சங்கரய்யர், பண் ஆராய்ச்சியும், அதன் முடிவுகளின் தொகுப்பும்,ப.178).

'பாக்களோடு இயைத்து உரைக்கப்பெற்ற இசையினை நெஞ்சு, மிடறு, நா, மூக்கு, அண்ணம், உதடு, பல், தலை என்னும் எட்டு இடங்களில் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என்னும் எண்வகைத் தொழிலால் ஒழுங்குறப் பண்ணிப் பாடப்பெறுவது பண்' எனப்படும் என்று இசைப்புலவர்கள் (அ.இராகவன், இசையும் யாழும், பக்.44-45) கூறுகிறார்கள்.

சங்க இலக்கியத்தில் குறிஞ்சிப்பண், மருதப்பண், பாலைப்பண், காஞ்சிப்பண், செவ்வழிப்பண், பஞ்சுரப்பண், விளரிப்பண் போன்ற பண் வகைகளைக் கொண்டு மகளிர் பாடியுள்ளனர். இதில் புற இலக்கியங்களில் மகளிர் பாடிய பண் வகைகளாகக் குறிஞ்சி, மருதம், பாலை, காஞ்சி, செவ்வழி, விளரி போன்ற பண்கள் காணப்படுகின்றன.

**குறிஞ்சிப்பண்**

பண்ணோடு பாடும் சங்ககாலக் குறிஞ்சி நிலப் பெண் தன் கூந்தலைக் கோதிக்கொண்டு குறிஞ்சிப்பண் பாடியதைக் கேட்டு, அங்கு தினைக் கதிர்களை உண்ண வந்த யானை அசையாமல் மயங்கி, உறங்கும் நிலையில் இருந்ததை அகப்பாடல் குறிப்பிட்டுள்ளது. இதனை,

**“ஒலியல் வார்மயிர் உளரினள், கொடிச்சி**

**.... .... .... ....**

**மறம்புகல் மழகளிறு உறங்கும்”**(அகம்.102;5-9)

என்ற அடிகள் புலப்படுத்துகின்றன. மலைப் பக்கங்களில் உறையும் தெய்வங்களை விறலியரும், கூத்தரும் குறிஞ்சிப் பண் பாடி வணங்குவர். பலவகையான வாத்தியங்கள் முழங்கி முருகப் பெருமானுக்கு வெறியாட்டு நிகழ்த்தியதை,

**“நளிமலைச் சிலம்பில் நல்நகர் வாழ்த்தி,**
**நறும்புகை எடுத்து, குறிஞ்சி பாடி”**(திரு.238-239)

என்ற திருமுருகாற்றுப்படை அடிகளில் காண முடிகின்றன. மேலும் நள்ளிரவில் விறலியர் மிகுந்த குளிரின் காரணமாக நடுக்கத்துடன் பண்ணோடு கூடிய குறிஞ்சிப் பாடுவதை, **“நறுங்கார் அடுக்கத்து, குறிஞ்சி பாடி”** (மலை.359) என்ற பாடல் அடியாலும், வில்யாழ் இசைத்து விறலியர் குறிஞ்சிப்பண் பாடியதை, **“வில்யாழ் இசைக்கும் விரல் எறி, குறிஞ்சி”** என வரும் பெரும்பாணாற்றுப்படை(182) அடியாலும் அறிய முடிகிறது. இதனால் இசைக்கு அ.்.றிணை உயிரான யானையினை வயப்படுத்தும் ஆற்றலும், மகளிரின் குறிஞ்சிப்பண் பாடும் திறனும் வெளிப்படுகின்றன.

**மருதப்பண்**

விடியற்காலையில் இசைக்கப்படுவது மருதப்பண் ஆகும். இப்பண் குறித்து மதுரைக்காஞ்சியின்,

**“சீர் இனிது கொண்டு நரம்பு இனிதுஇயக்கி**
**யாழோர் மருதம் பண்ண”**(மதுரை.657-658)

என்ற அடிகளால் அறிய முடிகின்றன. விறலியர் மருதப் பண்ணைச் சீறியாழில் இசைத்து தங்களுடைய இனிமை நிரம்பிய குரலில் பாடியதை,

**“மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்**

**நரம்பு மீது இறவாது, உடன்புணர்ந்து ஒன்றி**
**கடவது அறிந்த இன்குரல் விறலியர்"** (மலை.534-536)

இம்மலைபடுகடாம் பாடல் அடிகள் காட்டுகின்றன. இதன்வழி மகளிர் மருதப்பண் இசைத்துப் பாடியது புலனாகிறது.

**பாலைப்பண்**

சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பெற்றுள்ள பண்களில் மிகச் சிறந்ததாக விளங்குவது பாலைப்பண் ஆகும். நண்பகலுக்குரிய இப்பண், இனிமையுடையது. சங்ககால மக்கள் பேரியாழ் கொண்டு இப்பண்ணை இசைத்திருக்கின்றனர். சங்க காலத்தில் ஏழு பாலைப் பிரிவுகள் வழக்கில் இருந்தச் செய்தியை, 'புரிநரம்பின் கொளைப்புகள் பாலை ஏழும்' என்னும் பரிபாடல் வரி குறிப்பிடுகிறது. இதனை 'செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப்பாலை, அரும்பாலை, கொடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை' என சோமசுந்தரனாரின் உரை(ப.110) விளக்கியுள்ளது. இப்பாலைப் பண்ணின் சிறப்பு, கொலைத்தொழில் கொண்ட கள்வரையும் அருளுணர்வு செய்யும் சிறப்பிற்குரியது. இதனை,

**"ஆறுஅலை கள்வர் படைவிட அருளின்,**
**மாறுதலை பெயர்க்கும் மருவுஇன் பாலை"** (பொரு.21-22)

என்ற பொருநராற்றுப்படை அடிகள் தெரிவிக்கின்றன. மேலும் யாழின் நரம்புகளைக் கொண்டு சீர் நிறைந்தப் பண்ணை நீர்மையோடப் பரப்பிப் பாடினி பாடியுள்ளதை,

**"வாரியும் வடித்தும் உந்தியும் உறழ்ந்தும்,**
**சீருடை நன்மொழி நீரொடு சிதறி"** (பொரு.23-24)

இப்பாடல் அடிகள் காட்டுகின்றன. பாலைப்பண் குரல், யாழ், குழல் ஆகியவற்றைக் கொண்டு சங்கத் தமிழ் மக்கள் இசைத்து மகிழ்ந்தனர் என்பதை,

**"ஒருதிறம், பாடினி முரலும் பாலை அம் குரல்"** (பரி.17;17)
**"விரல் கவர் பேரியாழ் பாலை பண்ணி"** (பதிற்று.57;8)
**"செந்தீத் தோட்ட கருந்துளைக் குழலின்
இன்தீம் பாலை"** (பெரும்.179-180)

என்கின்ற பாடல் அடிகள் தெரிவிக்கின்றன. இதனால் பாலைப்பண்ணின் சிறப்புப் பற்றியும், அவற்றை விறலி பாடிய தன்மைக் குறித்தும் அறிய முடிகிறது.

**காஞ்சிப்பண்**

போரின் காரணமாக விழுப்புண் பட்டவர்கள், பேய் பிடித்துக் கொண்ட புண் பட்டவர்கள் ஆகியோரின் துன்பம் தீரும்படி பாடுவது காஞ்சிப்பண் ஆகும். இது சங்ககால வழக்கமாக இருந்துள்ளது. விழுப்புண்பட்ட வீரனைக் காக்க ஐயவி சிதறி, ஆம்பல் ஊதி, இசைமணி அடித்து, வீட்டு முகட்டில் வேப்பிலை வைத்து காஞ்சிப்பண் பாடியுள்ளனர். இதனை,

**"ஐயவி சிதறி, ஆம்பல் ஊதி,
இசை மணி எறிந்து காஞ்சி பாடி"** (புறம்.281;4-5)
**"வேம்பு சினை ஒடிப்பவும், காஞ்சி பாடவும்,
நெய்யுடைக் கையர் ஐயவி புகைப்பவும்"** (புறம்.296;1-2)

இப் புறநானூற்று அடிகள் தெரிவிக்கின்றன. தம் கணவர் விழுப்புண் பட்டதை அறிந்த கொடிச்சியர் வருத்தம் கொண்டு காஞ்சிப்பண் பாடுவதை மலைபடுகடாம்,

**"கொடுவரி பாய்ந்தென, கொழுநர் மார்பில்
நெடுவசி விழுப்புண் தணிமார், காப்பு என,
அறல் வாழ் கூந்தற் கொடிச்சியர் பாடல்"** (மலை.302-304)

என்று குறிப்பிட்டுள்ளது. இதனால் மகளிர் காஞ்சிப் பண் பாடிய நிலை புலப்படுகிறது.

**செவ்வழிப்பண்**

இரக்கம், அவலம் போன்ற உணர்ச்சிகளைத் தோற்றுவிக்கும் செவ்வழிப்பண் முல்லைக்கும், நெய்தலுக்கும் உரிய மாலை நேரப்பண்ணாக உள்ளது. மதுரைக்காஞ்சி பாடல் அடிகளில்(604-607) முழவு ஒலியோடு யாழிசைத்து, செவ்வழிப் பண் பாடி, சுடர் விளக்கேந்தி, பூசைப் பொருள்களுடன் மகளிர் கோயிலுக்குச் சென்ற காட்சி சிறப்பிக்கப்பட்டுள்ளது. இதனால் வழிபாடு நிகழ்த்தச் செல்லும் மகளிர் செவ்வழிப்பண் பாடிச்சென்றக் காட்சி புலனாகிறது.

**விளரிப்பண்**

பருந்தின் சுழற்சிபோல வட்டமிட்டுப் பாடப்படுவது விளரிப்பண் ஆகும். வீரன் ஒருவன் போரில் புண்பட்டு இறந்துவிட்டான். பருந்து போன்ற பறவைகளும், நரிகளும் அவனைச் சூழக் கண்ட வீரனின் மனைவி, விளரிப்பண் பாடி நரிகளை விரட்டுகிறாள். இக்காட்சியை, **“யானும், விளரிக் கொட்பின், வெள் நரி கடிகுவென்”** என்ற புறநானூற்றுப் பாடலில்(291;3-4) காண முடிகிறது. எனவே சங்கப்புற மகளிர் இசைக் கருவிகளைக் கொண்டு பண் அமைத்துப் பாடுவதில் சிறப்புற்று விளங்கியுள்ளனர் என்பது பெறப்படுகிறது.

**மகளிர் ஆடைகள்**

ஆதிகால மனிதன் தன் மான உணர்ச்சியால் படிப்படியாக நாகரிகம் அடைந்து பல்வேறு வகையான ஆடைகளை உடுத்த ஆரம்பித்தான். ஆடை என்பதற்கு ‘சீலை, தயிர், பாலேடு, சித்திரை, மீன், கண்ணிற்படலம்’(கழகத் தமிழகராதி ப.74) என்று பல பொருள்கள் கூறப்பட்டுள்ளன. மனிதன் தன்னை இயற்கைச் சூழலிலிருந்துக் காத்துக் கொள்ளவும், மானம் காக்கவும் ஆடைகளை உடுத்தினான். முதலில் தாவரங்கள், விலங்குகளில் இருந்து

கிடைக்கும் தோல்கள், மரவுரிகள், இலைகள் போன்றவற்றைக் கொண்டு மனிதன் ஆடையணியக் கற்றுக்கொண்டான்.

'ஆடையில்லா மனிதன் அரைமனிதன்', 'ஆள்பாதி ஆடைபாதி' என்ற பழமொழிகள் ஆடையின் இன்றியமையாமையினை உணர்த்துவனவாக அமைந்துள்ளன. மனிதன் காலப்போக்கில் ஏற்பட்ட மாற்றத்தாலும் வளர்ச்சியாலும் பருத்தியிழை, பட்டிழை, விலங்குகளின் மயிர் ஆகியவற்றால் ஆடைகள் செய்து அணிந்து கொண்டான். இவனின் அடிப்படைத் தேவைகளான உணவு, உடை, உறைவிடம் ஆகியவற்றில் ஒன்றான உடைக்குறித்து,

**"உண்பது நாழி; உடுப்பவை இரண்டே"** (புறம்.189;5)

என்ற புறநானூற்றுப் பாடலில் நக்கீரர் பாடியுள்ளார். மக்கள் சங்க காலத்தில் மேலாடை, கீழாடை ஆகிய இரண்டு ஆடைகளைப் பயன்படுத்தியிருந்தமையை மேற்கண்ட பாடல் சுட்டிக்காட்டுகிறது. சங்க காலத் தமிழர்கள் ஆடைகளைக் குறிக்கும் 'உடை, தழை, துகில், கழிங்கம், அறுவை, ஆடை, உடுக்கை, கச்சு, ஈரணி, தானை, போர்வை, காழகம், கச்சை, வம்பு, மடி, பட்டு, சீரை, படம், படாம், பூங்கரை நீலம், கம்பலம், கவசம், தூசு, மடிவை, சிதர், சிதவல், வார், மெய்ப்பை, மெய்ம்மறை, மெய்யாப்பு, வெளிது, ஒலியல், புட்டகம், நூல், பக்குடுக்கை' போன்ற சொற்களைப் பயன்படுத்தியுள்ளனர் என்று கே.பகவதி(தமிழர் ஆடைகள்,ப.16) அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இவற்றில் சங்கப் புறப்பாடல்களில் மகளிர் பல்வேறு வகையான ஆடைகள் உடுத்தியிருந்தச் செய்திகள் காணப்படுகின்றன.

மகளிர் தழையாடை, பருத்தியாடை, பட்டாடை போன்ற ஆடை

வகைகளை இடத்திற்கேற்றாற் போலவும் பருவங்களுக்கேற்றாற் போலவும் அணிந்திருக்கின்றனர்.

**தழையாடை**

ஞாழல், நெய்தல், ஆம்பல், குவளை, நொச்சி, அசோகு போன்றவற்றின் இலை, மலர்கள் கொண்டு தழையாடைகள் செய்யப்படுகின்றன. சங்க இலக்கியத்தில் மகளிரின் தழையாடைகள் பற்றியச் செய்திகள் சிறப்பாகக் அமைந்துக் காணப்படுகின்றன. சங்க இலக்கித்தில் 'அறுபத்தாறு இடங்களில்' தழையாடை பற்றிக் கூறப்பட்டுள்ளதை கே.பகவதி அவர்கள் (தமிழர் ஆடைகள்,ப.23) சுட்டிக் காட்டியுள்ளார்.

விழா, வழிபாட்டு நேரங்களிலும், விளையாடுதல், நீராடுதல் போன்ற செயல்களின் போதும் தழையாடைகளை விரும்பி அணியும் தன்மை சங்ககால மகளிரிடையே இருந்திருக்கிறது. 'தழையாடை ஆதியில் இருந்ததென்றும் அதை நயமுறப் பின்னுவதில் தமிழர் தேர்ச்சி பெற்றிருந்தனர்' என்றும் கா.சுப்பிரமணியப்பிள்ளை (தமிழர் சமயம், ப.26) குறிப்பிட்டுள்ளார். நில அடிப்படையிலான தழையாடைகளை ஐந்நில மகளிர் அவரவர்களுக்குரிய தன்மையில் உடுத்தியிருந்துள்ளனர். உழத்தி தழையாடை அணிந்திருந்ததை,

**"கொண்டைக் கூழைத் தண் தழைக் கடைசியர்"** (புறம்.61;1)

என்ற அடியும், முருகன் உடுத்தியிருந்தத் தழையாடைக் குறித்து,

**"முடித்த குல்லை, இலையுடை நறும்பூ,**
**செங்கால் மராஅத்த, வால்இணர், இடைஇடுபு,**
**சுரும்புஉணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை"** (திரு.201-203)

என்கின்ற திருமுருகாற்றுப்படை அடிகளும் சுட்டிக்காட்டுகின்றன. சங்க காலத்தில் பூத்தொழில் உடையச் சேலைகளைப் பொன்னால் ஆன உடை

வாளொடு அழகு பெறக் கட்டியதை,

**“கண் பொருபு உகூஉம் ஒண்பூங் கலிங்கம்”** (மதுரை.433)

இம்மதுரைக்காஞ்சி அடி தெரிவிக்கிறது. பொதுவாக ‘கலிங்கம்’ என்னும் சேலையை மகளிர் அணிவதுதான் வழக்கம். இதனால் சேலையை உடைவாளோடு கட்டியது, ஒரு பெண் என இங்கு எண்ண முடிகிறது.

கணவனை இழந்த கைம்பெண் ஒருத்திக்கு இளவயதில் தழையாடையாய் ஆம்பல் உதவியதை,

**“.... .... சிறு வெள் ஆம்பல்!**
**இளையமாகத் தழை ஆயினவே”** (புறம்.248;1-2)

என்றப் புறப்பாடலில் ஒக்கூர் மாசாத்தியார் சுட்டிக்காட்டியுள்ளார். இதனால் புற இலக்கியங்களில் குறிப்பிடும் மகளிர் தழையாடைகள் மற்றும் வேலைப்பாடுகள் கொண்ட சேலைகளை அணிந்திருக்கின்றனர் என்பது தெளிவாகிறது.

**பருத்தியாடை**

நூல், பஞ்சு, இழை, எனப் பழங்காலத்தில் பருத்தியாடைகள் சுட்டப்பட்டுள்ளன. பருத்தியை விளைவித்துப் பெறப்பட்ட பஞ்சினில் இருந்து கொட்டை நீக்கி, பிரம்புக் கொண்டு அடித்துப் பின் நூல் நூற்று ஆடை தயாரிக்கப்பட்டிருக்கிறது. ‘பருத்தியுடை இந்திய நாட்டில்தான் முதன்முதலில் வழக்கத்திற்கு வந்ததென்றும், அது ‘சிந்தம்’ என்னும் பெயரால் மேலை ஆசிய நாடுகளுக்குச் சென்றதென்றும்’ கா.சுப்பிரமணியப்பிள்ளை (தமிழர் சமயம் ப.27) குறிப்பிட்டுள்ளார். இதன்படி தமிழ்நாட்டில் பருத்தி அதிகம் விளைந்துள்ளது தெரிகிறது. கைம்பெண்கள் பஞ்சினைக் கொண்டு நூற்புத்தொழிலில் ஈடுபட்டிருந்ததால் இப்பெண்கள் ‘பருத்திப் பெண்டிர்’ என அழைக்கப்பட்டிருகின்றனர் (புறம்.125,326). இது குறித்து இயல் 2-இல்

குறிப்பிடப்பட்டுள்ளது.

சங்ககால மக்கள் உடுத்தும் உடையின் தரத்திலும், முறையிலும் வேறுபாடுகள் காணப்பட்டுள்ளன. இதனை ‘தகுதிக்கேற்ப உடை உடுத்தல் பண்டுதொட்டே தமிழரிடம் காணப்பட்டது’ என்ற வி.கனகசபைப் பிள்ளையின் கூற்றால் (v. Kanakasabhai, the Tamils Eighteen Hundered years Ago. P.116) அறிய முடிகிறது. அரசர், அரசியர், செல்வமகளிர் ஆகியோர் பருத்தி, பட்டு ஆகியவற்றால் அழகுறுத்தப்பட்ட ஆடை வகைகளையும், மற்றவர்கள் தங்கள் பொருளாதார நிலைக்கேற்ப எளிய மற்றும் நைந்த ஆடை வகைகளையும் அணிந்திருந்துள்ளனர். இதனால்தான் அரசர்களும், வள்ளல்களும் வறுமையால் தங்களை நாடிவருபவர்களுக்கு முதலில் நல்ல ஆடைகளையும், உணவுகளையும் தந்து உபசரித்தப் பின்பு பரிசுகளைத் தந்தனுப்பும் வழக்கமுடையவர்களாக இருந்துள்ளனர்.

மகளிரின் ஆடை கண்ணுக்குப் புலப்படாத மெல்லிய இழைகளாலான அழகிய பூத்தொழில் கொண்டு செய்யப்பட்டிருப்பதையும், பாம்பின் தோல் போன்ற மென்மையினை கொண்டிருப்பதையும்,

**“நோக்கு நுழைகல்லா நுண்மைய பூக்கனிந்து**
**அரவுஉரி அன்ன, அறுவை நல்கி”** (பொரு.82-83)

என்ற பொருநராற்றுப்படை அடிகள் சுட்டிக்காட்டுகின்றன. பாம்பின் மெல்லிய தோல் போன்றும், மூங்கிலின் உட்புறத்து வெண்தோல் போன்றும் கலிங்கம் அமைந்திருப்பதை,

**“மாசுஇல், காம்பு சொலித்தன்ன அறுவை உடீஇ”** (சிறு.235-236)
**“பாம்புஉரி அன்ன வடிவின, காம்பின்**
**கழைபடு சொலியின் இழைஅணி வாரா,**
**ஒண்பூங் கலிங்கம் உடீஇ”** (புறம்.383;9-11)

என்கின்ற அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. மேலும் புகைப் போன்று

ஆடைகள் இருந்ததை,

**"ஆவி அன்ன அவிர்நூற் கலிங்கம்"** (பெரு.469)
**"புகைவிரிந்து அன்ன பொங்குதுகில் உடீஇ"** (புறம்.398;20)

என்கின்ற புறப்பாடல் வரிகள் குறிப்பிடுகின்றன. இவ்வாறு பருத்தியினால் மட்டுமின்றிப் பட்டு, விலங்குகளின் உரோமங்கள் கொண்டும் ஆடைகள் நெய்யப்படுகின்றன. நெய்யும் தொழிலில் ஈடுபடும் நெசவாளர்களுக்கெனத் தனியாகத் தெரு இருந்ததை,

**"பட்டினும், மயிரினும், பருத்தி நூலினும்,**
**சுட்டும் நுண்வினைக் காருகர் இருக்கை"** (சிலம்பு.5;16-17)

என்று சிலப்பதிகாரம் குறிப்பிட்டுள்ளது. இதனால் பருத்தியினால் ஆன, ஆடை வகைகளை மகளிர் உடுத்தியிருந்தமைப் பற்றி தெரிந்துக் கொள்ள முடிகிறது

**பட்டாடை**

பட்டுப்புழுக்களைக் கொண்டு தயாரிக்கப்படும் ஆடைகள் பட்டாடை என அழைக்கப்படுகிறது. இப்பட்டுப்புழுவின் ஆயுட்காலம் முப்பது நாட்கள் மட்டுமாகும். நல்ல சுத்தமான சுற்றுச்சூழலில், நன்கு வளர்ந்த பட்டுப்புழுக்கள் தங்களைச் சுற்றி, அவற்றின் வாயிலிருந்து வரும் ஒரு விதமான நூலினால் கூடுகளை அமைக்கும். இவ்வாறு அமைக்கும் நூற் கூடுகள் பட்டு நூல்களாகும்.

'பட்டு சீனத்திற்கு உரியதென்றும், அதன் தோற்றம் கி.மு. 2640 என்றும்' கே.பகவதி அவர்கள் தமிழர் ஆடைகள் (ப.166) என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார். சங்க காலத்தில் செல்வந்தர்களால் பட்டாடைகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இல்ல நிகழ்வுகள், விழாக்கள் போன்ற காலகட்டங்களில் பட்டாடை அணியப்பட்டுள்ளன. திருமணத்தின் போது மணமகள் 'கலிங்கம்' என்ற ஆடை வகையை அணிந்தது பற்றி

அகப்பாடல்(அகம்.86;21,136;20) குறிப்பிட்டுள்ளது. இக்கலிங்கம் ‘கோடிக்கலிங்கம், முருங்காக்கலிங்கம் என்ற பெயர்களில் வழங்கப்படுகின்றன. இதில் திருமணத்தின் போது அணியப்படுவது கோடிக் (புதியது) கலிங்கம், என்றும் கஞ்சியிட்டு கசங்காதத் தன்மைக்கொண்டது முருங்காக்கலிங்கம் என்றும் அழைக்கப்படுகின்றன.

மேலும், கலிங்க நாட்டிலிருந்து வந்த பருத்தியாடைக்குக் ‘கலிங்கம்’ எனவும் பட்டாடைக்கு நூலாக் கலிங்கம்’ எனவும் பெயரிட்டதாகத் தமிழ்நாட்டு வரலாற்றுக் குழு (தமிழ் நாட்டு வரலாறு, ப.76) குறிப்பிட்டுள்ளது. இதன்படி பட்டாடையை ‘நூலாக் கலிங்கம்’ என்று அழைக்கப்பட்டதை,

**“நூலாக் கலிங்கம் வால் அரைக் கொளீஇ”**(பதிற்று.12;21)

என்ற பதிற்றுப்பத்துப் பாடலால் அறிய முடிகிறது. பளபளப்புத் தன்மையும், உறுதியும் கொண்டிருக்கும் பட்டாடைகள், இழைகளால் ஆன அனைத்து வகையான ஆடைகளிலும் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. பட்டாடைகளில் அழகுக்காகக் கொட்டைக்கரை அமைக்கப்பட்டிருப்பதை,

**“பாசி வேரின் மாசொடு குறைந்த**
**துன்னற் சிதாஅர் நீக்கி, தூய**
**கொட்டைக் கரைய பட்டுஉடை நல்கி”**(பொரு.153-155)

இப்பொருநராற்றுப்படை அடிகள் புலப்படுத்துகின்றன. இதனால் பட்டாடைத் தயாரிப்பு குறித்தும், அவை பயன்படுத்தப்பட்ட முறைக் குறித்தும் சங்க இலக்கியங்கள் வழி அறியப்படுகிறது.

### ஆடைகளின் வேறு வகைகள்

சங்க காலத்து மகளிர் நீராடுங்காலத்தில் ஈரணி, புட்டகம் என்னும் புடவை வகைகளை ஆடைகளாக அணிந்திருந்துள்ளனர். ‘பெண்கள் முழங்கால் வரையில் தொங்கும் புடவைகள் உடுத்தியிருந்ததைச்

சிற்பச்சான்றுகள்’ வழி மா.இராசமாணிக்கனார் (பத்துப்பாட்டு ஆராய்ச்சி பக்.445-446) குறிப்பிட்டுள்ளார். மகளிர் சில சமயங்களில் வம்பு, கச்சு, வார் என்ற மேலாடை வகைகளை அணிந்திருக்கின்றனர். இவைகள் மகளிரின் முலைக்கச்சியினைக் குறிப்பதாக தமிழ்ப்பேரகராதியில் (Tamil Lexicon, Vol.6,P.3493,3606, Vol.11,P.638) குறிப்பிடப்பட்டுள்ளது.

ஆடை, உடை என்பவைகள் இரண்டும் வேறுபட்ட பொருளுடையவையாகும். புடவையை ஒத்தது ஆடையாகும். உடை என்பது தைத்துக் கட்டுவது. தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் ‘உடை பெயர்த்துடுத்தல்’ (மெய்.நூ.14) என்பதில் உடை பற்றிக் குறிப்பிட்டுள்ளார். மகளிர் உடம்போடு பொருந்தும் படியான உடையை உடுத்தியுள்ளனர். மழை வாழ் மகளிர் மார்பாடையாக விளங்கும் மேலாடைக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் வாழ்ந்திருக்கின்றனர். ஆனால் சங்க காலத்தில் மேலாடையைக் குறிக்கும் உத்தரியம், ஒலியல், தானை, துகில் என்ற சொற்கள் வழங்கப்பட்டிருப்பதை,

> **“உத்தி ஒரு காழ், நூல் உத்தரியத் திண் பிடி”** (கலி.96;13)
> **“உடையும் ஒலியலும் செய்யை”** (பரி.19;97)
> **“புடைவீழ் அம்துகில் இடவயின் தழீஇ”** (நெடு.181)
> **“மீப்பால் வெண் துகில் போர்க்குநர்; பூப் பால்**
> **வெண் துகில் சூழ்ப்பக் குழல் முறுக்குநர்”** (பரி.10;79-80)

என்கின்ற அகப்பாடல்களால் அறிய முடிகின்றன. தற்காலத்தில் சட்டை என்று அழைக்கப்படுவது, பழங்காலத்தில் படம், மெய்ப்பை என்ற பெயர்களில் வழங்கப்பட்டுள்ளது. இதனை,

> **“அடிபுதை அரணம் எய்தி, படம்புக்கு”** (பெரும்.69)
> **“மெய்ப்பை புக்க வெருவரும் தோற்றத்து”** (முல்.60)

என்ற பாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. மேலும் கணவன் இறந்தப்

பிறகு மகளிர் வெள்ளை நிற ஆடைகளை உடுத்தியிருந்தனர். இது இவர்களைச் சமூகத்தில் இருந்து வேறுபடுத்திக் காட்டும் விதிமுறையாக அக்காலத்தில் இருந்துள்ளது தெரிகிறது.

மனிதன் நாகரிக வளர்ச்சியின் அடையாளமாக ஆடையணியக் கற்றுக்கொண்டு, முதலில் இலைகள், தோல்கள், மரவுரிகள் ஆகியவற்றை ஆடையாக அணிந்தான் என்பது பெறப்படுகிறது. காலப்போக்கில் ஏற்பட்ட வளர்ச்சியின் காரணமாகப் பருத்தி, பட்டு, போன்றவற்றால் ஆன ஆடைகளை அணிந்துள்ளான் என்பது தெரிகிறது. சங்ககாலத்தில் ஆடைகளைக் குறிக்கும் பல்வேறு சொற்கள் வழங்கப்பட்டுள்ளன. சங்கப்புற இலக்கியத்தில் மகளிர் தழையாடைகள், பூத்தொழில் கொண்ட சேலைகள், பாம்பின் தோல் போன்ற மென்மையினையும், மூங்கிலின் உட்புறத்து வெண்தோல் போன்றும், புகை போன்றும் விளங்கக்கூடிய பருத்தியாடைகள் ஆகியவற்றை அணிந்திருந்துள்ளது தெளிவாகிறது.

பட்டுப்புழுக்களைக் கொண்டு தயாரிக்கப்படும் மதிப்புயர்ந்தப் பட்டாடைகளை விழாக்காலங்களில் பயன்படுத்தியமையும், இதை நூலாக்கலிங்கம் என வழங்குவதையும் புற இலக்கியங்கள் சுட்டிக்காட்டியுள்ளன. மேலும், வம்பு, கச்சு, வார், ஈரணி, புடவை, படம், மெய்ப்பை என்ற வேறுவகையான ஆடை வகைகளை மகளிர் அணிந்திருந்தது பற்றித் தெளிவாகிறது. இதனால் சங்கப் புறப்பாடல்களில் மகளிர் பயன்படுத்திய ஆடை வகைகள், உடுத்திய முறைகள் பற்றியச் செய்திகள் வெளிப்படுகின்றன.

**மகளிர் அணிந்திருந்த அணிகலன்கள்**

மனிதர்களால் அணியப்பெறும் காரணம் பற்றி வந்ததால் அணிகலன் எனப்பட்டது. மனிதனின் வாழ்க்கையில் பல வகையான நிகழ்வுகளில் அணிகள் முக்கிய இடம் பெறுகின்றன. இது அந்தந்தக் காலங்களின் பழக்க

வழக்கங்கள், நாகரிகம், பண்பாடு ஆகியவற்றை அறிய வாய்ப்பாகிறது. அழகு, செல்வமிகுதியைச் சுட்டுவதற்காகவும் அணிகள் அணியப்பட்டுள்ளன.

பண்டைக் கால மகளிர் காப்பு, கடகம், வளை போன்ற வளைந்த அணிகலன்களை அணிந்திருக்கின்றனர். பொன்னாலான தலைப்பட்டையைத் தலையிலும், இதிலிருந்து தொங்கும் நிலையில் நெற்றியில் தொங்கவிடப்படும் அணியையும், இழை, பூ, மீன், வட்டம் போன்ற பல்வேறு வடிவங்களாலான குண்டலம் போன்ற அணிகளைத் தம் காதுகளிலும் அணிந்திருக்கின்றனர். சில அணிகலன்கள் தோள்களில் புரலக்கூடிய தன்மைகளில், முத்தால் செய்யப்பட்ட சரங்கள் தொங்கவிடப்பட்டிருந்தன. மீன்கொடி, பாம்பு ஆகிய வடிவங்களில் செதுக்கப்பட்டக் கடகங்களை அணிந்திருந்தனர். பொன், வெள்ளி, பவளம், முத்து, இரத்தினம், சங்கு ஆகியவற்றால் உறுதியான அணிகலன்கள் செய்யப்பெற்று அணிந்திருக்கின்றனர்.

**அணிகளின் தோற்றம்**

பழங்கால மக்கள் ஆரம்ப காலத்தில் அணிகள், ஆடைகள் போன்றவற்றைப் பயன்படுத்தாமல் இருந்திருக்கின்றனர். பின்னர் அவர்கள் கண்ணுக்கு இனிமைத் தரக்கூடிய பல வண்ணங்களையுடைய தாவரங்களின் தளிர்கள், மலர்கள் ஆகியவற்றைக் காதில் செருகியும், கொட்டை மற்றும் விதைகளைத் தொங்கும் நிலையில் காதுகளில் கட்டியும், நார்கள், புற்களைப் பதப்படுத்தி முறுக்கேற்றி கழுத்து மற்றும் கைகளில் அணிந்தும் மகிழ்ந்திருக்கின்றனர்.

மலர்கள், இலைத்தளிர்கள் ஆகியவற்றைக் கொடிகளில் தொடுத்துக் கழுத்து, தோள், இடை, முன்கை, மார்பு, இடை போன்ற பகுதிகளில் மாலையாக அணிந்திருக்கிறார்கள். இதன் பிறகு பல வகையான மணிகளைக் காலப்போக்கில் பயன்படுத்தியிருக்கிறார்கள். காதுகளில் கட்டித்

தொங்கவிடப்பட்டிருந்தத் தளிர்கள், பின்னாளில் துளையிடப்பட்டு அணியும் நிலைக்கு மாறியது.

'பனையோலை, சுருளாக்கப்பட்டுக் காதில் துளையிட்டுப் பயன்படுத்தப்பட்டது. அது 'காதோலை' எனப்பெயர் பெற்றது. அரையில் அழகுக்காக அணிந்த நார், அரைநாண் எனப் பெயர் பெற்றது. தோளில் சுற்றித் தொடுத்துக் கொள்ளப்பட்டது 'தொடி' எனப்பட்டது. காதின் பல இடங்களில் வைத்து ஒட்டவைத்துக்கொள்ளப்பட்ட பூக்கள் கத்தரிப்பூ, இலவங்கப்பூ, முருகுப்பூ எனப் பலவாறு பெயர் பெற்றுள்ளது' என்று ஆரம்ப கால அணிகள் குறித்து மா.இராசமாணிக்கனார் அவர்கள் (பத்துப்பாட்டு ஆராய்ச்சி,ப.454) குறிப்பிட்டுள்ளார். இதில் தோடு என்பது பூவிதழையும், சுருளானப் பனையோலையையும் குறிப்பதாக உள்ளது. இது காலமாற்றத்தால் தோடு எனப் பெயர் பெற்றது. மணம் வீசும் மலர் முருகுப்பூ என ஆரம்பகாலத்தில் அழைக்கப்பட்டுத் தற்காலத்தில் மாற்றம் பெற்றது.

மரக்கொம்பில் பூத்த பூக்களைப் பழங்கால மக்கள் அணிந்திருக்கின்றனர். இப்பூ 'கொம்புப்பூ' 'கொப்பூ' என அழைக்கப்பட்டது. முருக்குண்ட வடிவுடைய பூக்கள் 'திருகுப்பூ' என அழைக்கப்பட்டு மக்களால் அணியப்பட்டுள்ளது. இவ்வாறு பூக்களையும் தளிர்களையும் நார்களையும் அணிந்து வந்த மக்கள் அடுத்த நிலையில் தாங்கள் அணியும் நகைகளை மரத்தில் செதுக்கி அணிந்தார்கள். அதன் பின் செம்பு, ஈயம் போன்ற உலோகங்களை உருக்கி மரத்தால் செய்யப்பட்ட அச்சில் வார்த்துப் பயன்படுத்தினார்கள்.

பொன், வெள்ளி ஆகியவற்றால் செய்த கம்பிகளை முறுக்கிப் பல அணிகளாகச் செய்தார்கள். உலோகத் தகடுகளால் பல வண்ணங்களில் பழங்கள், விதைகள், இலைகள் போல அணிகலன்களைச் செய்து

அணிந்தனர். இவ்வாறு செய்த அணிகளுக்கு அரைஞாண், இலவங்கப்பூ, கத்தரிப்பூ, குழை, தொடி, மாலை, வளை எனப் பல்வேறு பெயர்களைக் கொண்ட முதற்பெயர்கள் கொண்டு வழங்கினார்கள். மிக நுண்ணிய வேலைப்பாடுகள் கொண்ட கொடிகளால் ஆன இடையில் அணியும் அணி பிற்காலத்தில் 'பல்காழ்', 'சில்காழ்', 'மேகலை' எனப் பல பெயர்களாக வழங்கப்பட்டது.

பழங்கால மக்கள் சமயக் கருத்துக்களையும் வழிப்பாட்டு மரபுகளையும் பின்பற்றினர். இது இவர்களின் கற்பனையை மேம்பாடடையச் செய்தது. இத்தன்மை அவர்களைத் தாயித்து, ஐம்படைத்தாலி போன்ற புதிய வார்ப்புகளைச் செய்யத் தூண்டியது. "தென்னிந்தியாவிலுள்ள பண்டைக் கால மக்கள் முறுக்குண்ட புற்கள், நார்கள் கொண்டு கடங்களாகவும் வளையல்களாகவும், கண்ணாடி மணிகள், பவழங்கள் கொண்டு கழுத்தணிகளாகவும் அணிந்துள்ளார்கள். சிற்றூர்களில் உள்ள ஏழை மக்கள் வெள்ளி, பொன், பித்தளை, செம்பு, ஈயம் முதலிய உலோகங்களைக் கொண்டு நகைகள் செய்து அணிந்துள்ளனர்" என்று மா.இராசமாணிக்கனார் (பத்துப்பாட்டு ஆராய்ச்சி,ப.455) குறிப்பிட்டுள்ளார். இதனால் நகைகள் தொடர்பானப் படிப்படியான வளர்ச்சி தென்னிந்தியாவில் நிலவியமைக் குறித்து அறியப்படுகிறது.

நாட்டின் ஒவ்வொரு பகுதியில் வாழக்கூடிய மக்களும் அவரவர்க்குரிய போக்கில் அணிகலன்களை அணிந்திருக்கிறார்கள். தென் பகுதியில் உள்ள மக்கள் அணிந்திருந்த அணிகள் 'தென்னாட்டு அணிகள்' என அழைக்கப்படுகின்றன. இதற்குக் கல்வெட்டுக்கள், செப்பேடுகள், சிற்பங்கள் போன்றவை வரலாற்று ஆவணங்களாகத் திகழ்கின்றன. கி.மு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஆதிச்சநல்லூரில் கண்டுபிடிக்கப்பட்ட மண்

பொம்மைகளின் மீதிருந்த நகைகள், பழங்கால அணிகளின் தன்மைகளை உணர வாய்ப்பாகிறது. தமிழகத்தின் வட பகுதியான ஆந்திராவின் அமராவதி, நாகார்ச்சுனமலை, ஜக்கய்யபேட்டை ஆகிய இடங்களில் கிடைக்கப்பெற்ற சிற்பங்கள் வழியாக அக்கால (கி.மு.200 கி.பி 400) மக்களின் நகை வகைகள் பற்றி அறிய முடிகிறது.

பண்டைக் கால மகளிர் தலையைச் சுற்றிப் பொன்னாலானப் பட்டை வடிவிலான அணியையும், அதிலிருந்து நெற்றியில் தொங்கும் நிலையிலான அணியையும், திருகு வடிவிலான அணியையும் கொண்டு கூந்தலை அழகு செய்துள்ளனர். வளையம், காப்பு, கடகம், போன்ற அணிகள் பல வளைவுகள் கொண்டதாகவும், இலை, பூ, மீன் வடிவிலான குண்டலங்கள், சங்கு, விலையுயர்ந்த முத்து, பவளம், தந்தம், இரத்தினங்கள் கொண்டு செய்யப்பட்ட உறுதியான, துளைகள் கொண்ட பல வகையான சங்கிலிகள், பதக்கங்கள் அக்காலத்து அணிகளாக விளங்கியுள்ளன.

பூண் என்பது பூணுதல் என்பதின் அடிப்படையில் அமைந்தது. கங்கணம், கடகம், காப்பு, கொலுசு போன்ற அணிகலன்கள் கை, கால், விரல் போன்ற உறுப்புகளில் பூணப்பெறும் இறுக்கமான அணிகளாகும். ஆதலால் இவை பூண்கள் எனப்பட்டன. கால மாற்றத்தில் அணியப்பெறும் காரணங்களைக் கருதி இப்பெயர்கள் மாற்றம் பெற்றன. உலக்கை மற்றும் ஊன்றுகோல் ஆகியவற்றின் தலைப்பகுதியில் அமைக்கப்பட்டிருக்கும் வளையங்கள் பூண் எனப்பட்டது. இதனடிப்படையில் உடற்பகுதியில் அணியப்பட்ட இறுக்கமான அணிகள் பூண் எனப்பட்டது என்பது பெறப்படுகின்றன.

மிகவும் நுண்ணிய வேலைப்பாடுகளோடு இழைக்கப்பட்டது இழை எனப்பட்டது. பருத்தியை இழைத்துச் செய்யப்படுவது நூலிழை எனவும் பொன்னை இழைத்து செய்யப்படுவது பொன்னிழை எனவும் பெயர் பெற்றது.

‘கல்லிழைத்த நகை’ என்பது தற்கால வழக்கில் காணப்படுகிறது. கால மாற்றத்தில் இழை என்பது நகைகளைக் குறிக்கும் சொல்லாக மாற்றம் பெற்றது.

இழை என்ற அணி அணியிழை, ஒளியிழை, இலங்கிழை, சேயிழை, பாசிழை, மாணிழை, ஆயிழை எனப் பல பெயர்களில் சங்கப் பாடல்களில் வழங்கப்பெற்றுள்ளன.

- அணியிழை என்பது மணிகளைப் பொன்னில் இழைத்து செய்யப்படுவதாகும்.
- ஒளியுடன் திகழும் இழை ஒளியிழை எனப்படும்.
- ஒளி மிகுந்தும் சிறந்த வேலைப்பாடுகளுடனும் தோன்றும் இழை இலங்கிழை என்று அழைக்கப்பட்டது.
- சேயிழை என்பது செம்மணிகள், செம்பொன் ஆகியவற்றால் ஆன இழையாகும்.
- பாசிழை என்பது பசிய மணிகள், பசும்பொன் ஆகியவற்றால் ஆன இழையாகும்.
- மாணிழை என்பது பொன் மற்றும் மணியால் இழைக்கப்பட்டது.
- ஆயிழை என்பது ஆராய்ந்த வேலைப்பாடுகளுடன் அமைந்தது. இழைகளின் இப்பெயர்களைச் சங்கப்பாடல்களில் காண முடிகிறது.

சிலப்பதிகாரத்தில் மாதவி அணியும் அணிகலன்கள் பற்றி கடலாடுகாதை குறிப்பிட்டுள்ளதை,

**“நலத்தகு மெல்விரல் நல்அணி செறீஇப்**
**.... .... .... ....**
**அம்காது அகவயின் அழகுற அணிந்து”** (சிலம்பு.6;83-105)

என்ற அடிகளால் அறிய முடிகின்றன. இதில் கால் விரல் அணிகள், பரியகம், நூபுரம், பாடகம், சதங்கை, அரியகம் என்னும் காலணிகள், தொடையணி, முப்பத்திரண்டு முத்தக்கோவைகளைக் கொண்ட மேகலை, மாணிக்கம், முத்து வளையாகிய தோள் வளைகள், வயிரங்களுடன் மாணிக்கம் அழுத்தப்பெற்ற கடகம், செம்பொன்வளை, நவரத்தினவளை, சங்குவளை, பவளவளை என்ற முன்கை வளையல்கள், மாணிக்கம், மரகதம், வயிரம் ஆகியவற்றால் அமைந்து விரல்களை மறைக்கும் கையணி, வீரச்சங்கிலி, நேர்ஞ்சங்கிலி, ஞாண், வேலைப்பாடமைந்த சவடி, சரப்பளி முத்து மாலை என்னும் கழுத்தணிகள், முதுகு மறைய விடும் பின் தாலி, இந்திர நீலக் கற்களிடையே வயிரங்கள் பதித்த நீலக்குதம்பை, சீதேவியார், வலம்புரி சங்கு, பூரப்பாளை, தென்பல்லி, வடபல்லி என்பவைகள் கொண்ட தலைக்கோலம் போன்றவற்றை மாதவி அணிந்திருந்தச் செய்திகள் பதிவாகியுள்ளன. இவ்வணிகள் சங்க காலத்தில் பெருவழக்கில் இருந்துள்ளன.

**தலை அணிகள்**

தலையில் அணியப்படும் அணிகள் தலையணிகள் எனப்படும். தொய்யகம், தெய்வஉத்தி, வயந்தகம், சுரிதகம், உத்தி, மகரவலயம், பொன்னரிமாலை, மத்தகநித்திலம் போன்றவை தலையணிகளாக மகளிர் அணிந்திருந்ததைச் சங்க இலக்கியங்கள் (பரி.7;46, திரு.23, கலி.79;5, நற்.86;6, கலி.97;14, பரி.10;77, பெரும்.485-486, பரி.16;5) குறிப்பிடுகின்றன. ‘தாமம், முகுடம், பதுமம், கோடகம், கிம்புரி’ ஆகிய ஐந்தும் முடியுறுப்புகள் எனத் திவாகரமும் பிங்கலந்தையும் கூறுகின்றன. வேலைப்பாடுகள் நிறைந்த இவ்வைந்து முடியுறுப்புகளையும் முருகப் பெருமான் தனது முடியில் அணிந்திருந்ததை,

**“ஐவேறு உருவின் செய்வினை முற்றிய**
**முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி”** (திரு.83-84)

என்று நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் குறிப்பிட்டுள்ளார். திருப்பரங்குன்றத்துச் சோலையில் விளையாடியச் சூரர மகளிர் சீதேவி என்னும் வலம்புரி வடிவாகச் செய்த தலைக்கோலத்தையும், நெற்றியில் சுறா மீனின் வாய் வடிவில் அமையப்பெற்ற நெற்றிச்சுட்டியும் அணிந்திருந்தனர். இதனை,

**“தெய்வ உத்தியொடு வலம்புரி வயின்வைத்து,**
**திலகம் தைஇய தேம்கமழ் திருநுதல்**
**மகரப் பகுவாய் தாழ மண்ணுறுத்து”** (திரு.23-25)

இவ்வடிகள் தெரிவிக்கின்றன. மகர மீன் வடிவில் செய்யப்பட்ட மகர வலயம் என்னும் தலையணியையும், முத்துக்களால் செய்யப்பட்ட மத்தக நித்திலமான தலைக்கோல முத்தையும் மகளிர் அணிந்திருந்தனர் என்பதைப் பரிபாடல் சுட்டிக் காட்டுகின்றது.

**“எறி மகர வலயம் அணி திகழ் நுதலியர்”** (பரி.10;77)
**“முத்து நேர்பு புணர் காழ், மத்தக நித்திலம்”** (பரி.16;5)

தொண்டைமான் இளந்திரையன் விறலிக்கு, அவளது ஒப்பனை மிகுந்த கூந்தல் அழகு பெறத்தக்க வகையில், பொன்மாலையை பரிசிலாகத் தந்தான் என்பதை,

**“புனைஇருள் கதுப்பகம் பொலிய, பொன்னின்**
**தொடைஅமை மாலை விறலியர் மலைய”** (பெரும்.485-486)

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகளில் காண முடிகின்றன. மன்னன் மகள் பொன்னாலாகிய தலை மாலையை அணிந்திருந்ததை, **“ஈகைக் கண்ணி இலங்கத் தைஇ”** என்ற புறநானூற்று அடி(353;3) குறிப்பிட்டுள்ளது. இதனால்

மகளிர் பொன்னால் செய்த தலையணிகளை அணிந்திருந்தனர் என்பது தெரிய வருகிறது.

**காதணிகள்**

காதணி என்பதற்கு கடிப்பகம், கடிப்பினை, கம்பி, கன்னப்பூ, குண்டலை, குழை, தொங்கல், தோடு என்ற வகைகளில் பொருள் அமைந்துள்ளன. இதில் குழை என்பது காதுகளில் குழைந்து தொங்குவதாகும். பண்டைக் காலத்தில் பூக்கள், ஓலைகள், கொண்டு காதில் செருகி காதணியாகப் பயன்படுத்தப்பட்டன. மகளிர் ‘கடிப்பு’ அணிந்திருந்ததைப் பரிபாடல் சுட்டுகின்றது. **“கடிப்பு இகு காதில் கனம் குழை தொடர”** (பரி.தி.1;33) இவ்வடி மகளிர் கடிப்பு என்னும் அணியை அணிந்து தங்கள் காதினை நீண்டு தாழும் படியாக வளர்த்திக் கொண்டு பின் குழை அணிந்த செய்தியைத் தெரிவிக்கிறது.

பொன்னால் அமைந்த பொலங்குழை, ஒளி மிகுந்த ஒண்குழை, பெரிய வடிவிலான கனங்குழை, சிறிய வடிவில் அமைந்த சிறுகுழை, மீன் வடிவிலான மகரக்குழை, கொடுங்குழை மற்றும் தோடு அணிந்திருந்ததைச் சங்க நூல்கள் (பதி.86;11, பெரும்.311-312, மதுரை.709, நற்.16;9, பெரும்.161, பரி.10;115) தெரிவிக்கின்றன.

கன்னிப்பெண்கள் தை நீராடியபோது காதில் நீலமலர், குவளைமலர், அசோகின் தளிர் ஆகியவற்றைச் செருகி அணிந்திருந்தனர் என்பதனை,

> **“சாய் குழை பிண்டித் தளிர் காதில், தையினாள்;**
> **பாய் குழை நீலம் பகலாகத் தையினாள்;**
> **குவளைக் குழைக்காதின் கோலச் செவியின்**
> **இவள் செரீஇ”** (பரி.11;95-98)

என்ற பரிபாடல் தெளிவுப்படுத்துகிறது. இதைப் போல் அசோகின் தளிர்களைச் சூரர மகளிர் காதில் செருகிக் கொண்டிருந்ததை **“வண்காது**

**நிறைந்த பிண்டி ஒண்தளிர்"** என்ற திருமுருகாற்றுப்படை அடியில்(31) காண முடிகிறது.

பாடினி பொலிவுற்ற மகரக்குழையும், ஆயர் மகள் சிறுகுழையும், மருத நிலத்து மகளிர் பொலங்குழையும், மதுரை மாநகரச் செல்வமகளிர் ஒண்குழையும் அணிந்திருந்தனர் என்ற செய்திகள் முறையே,

> **"பூங்குழை ஊசற் பொறைசால் காதின்"** (பொரு.30)
> **"சிறுகுழை துயல்வரும் காதில்"** (பெரும்.161)
> **"புனல்ஆடு மகளிர் இட்ட பொலங்குழை"** (பெரும்.312)
> **"ஒண் குழை திகழும் ஒளிகெழு திருமுகம்"** (மதுரை.448)

என்கின்ற அடிகளால் அறியப்படுகின்றன. இதன் வழி சங்க கால மகளிர் அணிந்த காதணி வகைகள் பற்றி தெரிந்துக் கொள்ள முடிகிறது.

**கையணிகள்**

மகளிர் கைகளில் அணியும் அணிகள் கையணிகள் எனப்பட்டன. இவை தொடி, வளை, கடகம், கைவந்தி என்ற வகைகளில் காணப்படுகின்றன. வளைகள் பொன், வெள்ளி, செம்பு, பித்தளை, முத்து, பவளம், சங்கு, ஆமைஓடு, மண், கண்ணாடி, கலவைப்பொருட்கள் ஆகியவற்றால் செய்யப்பட்டு மகளிர் தங்கள் கைகளில் அணிந்திருந்தனர். மாதவி வைரத்தாலான கடகம், பொன்னாலான வளை, பரியகம், சங்கு மற்றும் பவளத்தாலான வளை ஆகியவற்றை அணிந்திருந்தச் செய்தியைச் சிலப்பதிகாரம் (6;91-94) சுட்டியுள்ளது.

தமது கைகளில் வளையல்கள் அணிந்த கிணைமகளைச் 'வளைக்கைக் கிணைமகள்' என சிறுபாணாற்றுப்படையும்(136), 'வளைக்கை மகடூஉ' என தொண்டை நாட்டுப் பெண்ணை, பெரும்பாணாற்றுப்படையும்(304) குறிப்பிட்டுள்ளன. சங்க கால மகளிர் சங்குகளை அறுத்து வளையலாகச்

செய்து அணிந்திருந்துள்ளனர். பாண்டிமாதேவி பொன் மற்றும் சங்குவளை அணிந்திருந்ததை,

**"பொலந்தொடி தின்ற மயிர் வார் முன்கை**
**வலம்புரி வளையொடு"** (நெடு.141-142)

இந்நெடுநல்வாடைப் பாடல் அடிகள் தெரிவிக்கின்றன. அரம் கொண்டு அராவி வளை செய்யப்படுவதை,

**"அரம் போழ்ந்து அறுத்த கண்நேர் இலங்கு வளை"** (மதுரை.316)
**"வாள் அரம் பொருத கோள் நேர் எல் வளை"** (நற்.77;9)
**"வேளாப் பார்ப்பான் வாளரந் துமித்த வளை"** (அகம்.24;1)

என்ற அடிகளில் பதிவு செய்யப்பட்டுள்ளன. இவ்வாறு சங்கை அறுத்துச் செய்யும் கை வளை, தோள் தொடி குறித்தச் செய்திகள் 'வளைப்பத்து' (191-200) என்னும் பத்துப் பாடல்களில் ஐங்குறுநூறு கூறியுள்ளது.

மலை நாட்டு விறலியர் **"இலங்குவளை விறலியர்"** (மலை.46) என்றும், **"செறிதொடி விறலியர்"** (மலை.201) என்றும் அழைக்கப்பட்டுள்ளனர். சில பெண்கள் குறைந்த எண்ணிக்கையிலான வளையல்களையும், சிலர் கை நிறையும் படியும் வளையல்கள் அணிந்திருந்ததைப் புறநானூறு (60;5,64;2,255;5) சுட்டியுள்ளது. நீர் நிலைகளில் கிடைத்த ஆம்பல் தண்டுகளையும், குவளைத் தண்டுகளையும் கொண்டு மகளிர் வளைகள் செய்து அணிந்தனர். இதனை,

**"ஆம்பல் வள்ளித் தொடிக் கை மகளிர்"** (புறம்.63;12, 352;5)
**"பவள வளை செறித்தாட் கண்டு அணிந்தாள், பச்சைக்**
**குவளைப் பசுந் தண்டு கொண்டு"** (பரி.11;101-102)

என்ற தொகை நூல்கள் குறிப்பிடுகின்றன. மகளிர் தொடி என்னும் கையணிகள் அணிந்திருந்ததையும் சங்க நூல்களில் காண முடிகின்றன.

தொடி என்பது கைகள், தோள்கள் ஆகியவற்றில் தொடுத்துக்கொண்ட ஒரு அணியாகும். இத்தொடி ஒளி பொருந்திய ஒண்தொடி, ஆய்ந்து அணிந்த ஆய்தொடி, செறிந்த செறிதொடி, பசிய மணியாலான பைந்தொடி என பல வகைகளில் அமைந்து விளங்கியதைச் சங்க நூல்கள் தெரிவிக்கின்றன. அரசர், வீரர்கள் அணிந்த தொடி 'வீரவளை' எனவும் இளமகளிர் அணிந்த வளை 'குறுந்தொடி' எனவும் அழைக்கப்பட்டன.

பாண்டிய நாட்டு அரச மாதேவியர் நன்கு ஆராய்ந்த மிகுந்த வேலைப்பாடுகளுடன் செய்யப்பட்டத் தொடியைத் தங்களது கைகளில் அணிந்திருந்ததால் **"ஆய்தொடி மகளிர்"**(மதுரை.712) என அழைக்கப்பட்டனர்.

ஓய்மா நாட்டைச் சார்ந்த உழவர்குடிப்பெண் தொடி அணிந்திருந்ததைச் சிறுபாணாற்றுப்படையும்(192), தொண்டை நாட்டுச் செல்வச் சிறுமிகள் குறுந்தொடி அணிந்திருந்ததை, **"கைபுனை குறுந்தொடி தத்த"** என்ற பெரும்பாணாற்றுப்படை அடியும்(334) குறிப்பிடுகின்றன.

விறலியர் பரிசாகக் குறுந்தொடிப் பெற்றதையும், மதுரை நகரப் பரத்தையர் அழகு மிகுந்த தொடி அணிந்து கைகளை வீசி தெருக்களில் நடந்தமையையும், பொன்னால் செய்த அணி அணிந்திருந்ததால் 'பாசிழை மகளிர்' என அழைக்கப்பட்டுள்ளதையும்,

**"நரம்பின் முரலும் நயம் வரு முரற்சி**
**விறலியர் வறுங்கைக் குறுந்தொடி செறிப்ப"**(மதுரை.217-218)
**"ஆய்கோல் அவிர்தொடி விளங்க வீசி"**(மதுரை.563)
**"ஆய்பொன் அவிர்தொடிப் பாசிழை மகளிர்"**(மதுரை.579)

என்ற அடிகளில் மாங்குடி மருதனார் சுட்டிக்காட்டியுள்ளார்.

பேய்மகள் தடக்கைகளில் தொடி அணிந்திருந்ததை, **“ஒண்தொடித் தடக்கையின் ஏந்தி”** என்ற திருமுருகாற்றுப்படை அடி(54) காட்டுகிறது. இதைப்போன்று மதுரை நகர மகளிர் பொன்னாலான பூண்கள், கை வங்கி எனப்படும் வந்திகை, மிக நுண்ணிய கலைத்திறம் வாய்ந்த தொடி ஆகியவற்றை அணிந்திருந்தனர் என்பதை,

**“சோர்ந்து உகுவன்ன வயக்குறு வந்திகை”** (மதுரை.415)
**“தா அற விளங்கிய ஆய்பொன் அவிர் இழை
அணங்கு வீழ்வு அன்ன பூந்தொடி மகளிர்”** (மதுரை.445-446)

என்ற அடிகள் தெரிவிக்கின்றன. வந்திகை என்பது கையில் தோளின் கீழ் அணியப்படும் அணி வகை. இது ‘கைவந்தி’ எனப்படும். தற்காலங்களில் ‘வங்கி’ என மருவி வழங்கப்படுகிறது.

மகளிர் முன்கையில் கடகம் அணிந்திருந்ததை, **“சுடர் விடு பசும் பூண், சூர்ப்பு அமை முன் கை”** என்று புறநானூறு(153;3) குறிப்பிடுகிறது. இதனால் மகளிர் தம் கைகளில் வளையல்களையும், தொடியையும், கடகத்தையும் அணிந்திருந்தனர் என்பது தெரிகிறது. மேலும் விரலணி எனப்படும் மோசை, செங்கேழ்விளக்கம், மோதிரம், ஆழி ஆகியவற்றை மகளிர் அணிந்திருந்ததை அக இலக்கியங்கள் (கலி.84;23, நெடு.143, நற்.188;3-4) குறிப்பிடுகின்றன.

**இடை அணிகள்**

மகளிர் இடையில் அணியும் அணிகலன்கள் இடையணிகள் என அழைக்கப்பட்டன. இவர்கள் ‘பொன், வெள்ளி, ஆகியவற்றால் செய்யப்பட்ட இடுப்புப்பட்டை, உதரபந்தம், ஒட்டியாணம், சன்னவீரம் முதலியவற்றை இடையில் அணிந்திருந்தனர்’ என்று மா.இராசமாணிக்கனார் (பத்துப்பாட்டு ஆராய்ச்சி,ப.459) குறிப்பிட்டுள்ளார். இவை பாண்டில், மேகலை,

ஏணிப்படுகால், சில்காழ், பல்காழ், பைங்காழ், பருமம், காஞ்சி, விரிசிகை என்ற பெயர்களில் அமைந்துக் காணப்படுகின்றன. மணிகள் கோக்கப்பட்ட ஒட்டியாணம் என்ற அணியைப் பாண்டில் எனவும், இதில் முத்து வடங்கள் தொங்கவிட்டு பட்டை வடிவத்தில் இருப்பதை மேகலை எனவும் குறிப்பிடப்பட்டுள்ளன.

**மேகலை**

மகளிர் ஆடையின் உள்ளே அணிந்திருந்த மேகலையையும், ஆடைக்கு மேல்புறம் அணிந்திருந்தக் காஞ்சியையும் வையை ஆறு கவர்ந்து சென்றுள்ளது. இம்மேகலை வகைவகையாகக் கோர்த்து அமைக்கப்பட்டுள்ளது. இவற்றை,

> **“மேகலை, காஞ்சி, வாகுவலயம்,**
> **எல்லாம் கவரும் இயல்பிற்றாய்”** (பரி.7;47-48)
> **“வகை அமை மேகலை”** (பரி.22;30)

என்ற பரிபாடல் அடிகளால் அறிய முடிகின்றன.

**சில்காழ்**

திருப்பரங்குன்றத்தில் மகிழ்ந்து விளையாடியச் சூரர மகளிர், சில்காழ் அணிந்திருந்ததை, **“பல்காசு நிரைத்த சில்காழ்”** என்று திருமுருகாற்றுப்படை அடி(16) கூறுகிறது. இதற்குப் பல மணிகளுடன் கூடிய பெரிய மேகலை என்று நச்சினார்க்கினியார் உரை குறிப்பிட்டுள்ளார். ‘எண்கோவை காஞ்சி எனவும், எழுகோவை மேகலை எனவும், பதினாறு வடம் கொண்டது கலாபம் எனவும், பதினெட்டு வடம் கொண்டது பருமம் எனவும், முப்பத்திரண்டு வடம் கொண்டது விரிசிகை’ எனவும் கூறப்படுவதாக நச்சினார்க்கினியர் (பத்துப்பாட்டு மூலமும் உரையும் ப.36) குறிப்பிட்டுள்ளார். இதில் இடையணிகளில் பொருத்தப்படும் மணிகளின் எண்ணிக்கைக் குறித்து குறிப்பிடப்பட்டுள்ளன.

**பல்காழ்**

'பல்காழ் என்றால் பல வண்டினங்களின் இருப்பை ஒத்த பல மணிகள் கோத்த வடங்களையுடைய மேகலை' என்பது நச்சினார்க்கினியர் உரைப் பொருளாகும். விறலி பல்காழ் அணிந்திருந்ததை, **"வண்டுஇருப்பு அன்ன பல்காழ்"** (பொரு.39) என்ற அடிச் சுட்டுகிறது.

**பைங்காழ்**

பைங்காழ் என்பது பசிய மணிகள் கோத்த வடங்கள் ஆகும். தொண்டை நாட்டைச் சேர்ந்த செல்வ மகளிர் இடையில் பைங்காழ் அணிந்திருந்தனர். இது, **"பைங்காழ் அல்குல் நுண்துகில் நுடங்க"** (பெரும்.329) என்ற அடி மூலம் தெரிகிறது.

**பருமம்**

பருமம் என்பது ஒளிமிக்க பதினெண் கோவையையுடைய மேகலை என்பது பொருளாகும். திருவாவினன்குடியில் குடி கொண்டிருக்கும் முருகப் பெருமானைப் புகழ்ந்தேத்திய காந்தருவ மகளிர் பொன்னின் நிறம் போன்று ஒளிரும் தேமலைப்பெற்று, நல்ல ஒளிமிக்க மேகலையை அணிந்தவர்கள் என்பது,

> **"பொன்னுரை கடுக்கும் திதலையர், இன்நகைப்**
> **பருமம் தாங்கிய பணிந்துஏந்து அல்குல்,**
> **மாசு இல் மகளிர்"** (திரு.145-147)

என்ற அடிகள் மூலம் தெரிகிறது. ஆரம்ப காலத்தில் ஏழு கோவையையுடைய இடையணி, மேகலை என்று குறிப்பிடப்பட்டிருந்தாலும், கால மாற்றத்தினால் வேறு எண்ணிக்கைகளை உடைய இடையணிகளையும் குறிப்பிடக் கூடியனவாக அமைந்தது. இதனால் மகளிர் மேகலை, சில்காழ்,

பல்காழ், பைங்காழ், பருமம் போன்ற இடையணிகள் அணிந்திருந்ததைச் சங்க புற இலக்கியங்கள் வழி தெரிந்துக் கொள்ளப்படுகின்றன.

**காலணிகள்**

மகளிர் கணுக்கால், கால்விரல் ஆகிய இடங்களில் அணிந்த அணிவகைகள் காலணிகள் எனப்பட்டன. 'கல்' என்னும் ஒலியோடு காலில் அணியக்கூடிய சிலம்பு, சதங்கை, போன்றவற்றின் பொதுப்பெயர் கலன் என்பதாகும். சங்ககால மகளிர் சிலம்பு, கிண்கிணி ஆகியவற்றின் உள்ளே இரத்தினக்கற்கள், முத்துக்கள் இட்டு அணிந்திருந்துள்ளனர்(நற்.110;5, அக.32;15, பரி.21;18, 22;49, பெரு.332). மாதவி பரியகம், நூபுரம், பாடகம், சதங்கை, அரியகம் போன்ற காலணிகள் அணிந்திருந்தச் செய்தியைச் சிலப்பதிகாரத்தில் (6;82-85) இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார்.

சங்க இலக்கியத்தில் ஞெகிழம்(பரி.21;18), நூபுரம்(கலி.83;16), குடைச்சூல்(பதிற்று.57;11, 68;18, 90;48) என்ற பெயர்கள் சிலம்பினைக் குறித்தனவாகும். செறிந்த பரல்களை உடைய சிலம்பு அணிந்த மகளிர் பொருநையாற்று மணல் மேட்டில் கழங்காடியதைப் புறநானூறு(36;3-5) சுட்டிக்காட்டியுள்ளது.

சூரர மகளிரும், ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் தேவியும் கால்களில் கிண்கிணி எனப்படும் சிறு சதங்கை அணிந்திருந்தனர் என்பதை,

> **"கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடி"** (திரு.13)
> **"பல் சில கிண்கிணி சிறு பரடு அலைப்ப"** (பதிற்று.52;20)

இவ்வடிகள் குறிப்பிடுகின்றன. மதுரை நகரச் செல்வமகளிர் உள்ளின் தெள்ளிய மணிகளையுடையப் பொற்சிலம்புகள் அணிந்திருந்ததனை,

> **"தென் அரிப் பொற்சிலம்பு ஒலிப்ப, ஒள் அழல்"** (மதுரை.444)

என்ற மதுரைக்காஞ்சி அடி தெரிவிக்கின்றது. இவை சிலப்பதிகாரத்தில் இடம் பெற்றுள்ள முத்து மற்றும் மாணிக்கங்கள் கொண்ட சிலம்பை ஒத்ததாகும்.

மாமல்லபுர உயர்குடி மகளிர் ‘தமனியப் பொற்சிலம்பு’ அணிந்திருந்ததை, **“தமனியப் பொற்சிலம்பு ஒலிப்ப”** எனவரும் பெரும்பாணாற்றுப்படை அடி(332) தெரிவிக்கிறது. இதற்குப் பொற்பூண்களையும், பொற்சிலம்பையும் அணிந்திருந்தனா் என்பது பொருளாகும். இதனால் அம்மகளிர் பொன்னாலான சிலம்பு, காப்பு, கொலுசு ஆகியவற்றைக் கால்களில் அணிந்திருந்தனர் என்பது பெறப்படுகின்றன. ‘பண்டைக்காலத்தில் வடஇந்திய மக்களால் பொன்னகைகள் கால்களிலும் அணியப்பட்டன. அங்ஙனம் அணிதல் பொன்னை அவமதிப்பதாகும் என்ற எண்ணம் தோன்றிய பின்னா் பிற்காலத்தில் பொன்னகைகளைக் கால்களில் அணியும் பழக்கம் கைவிடப்பட்டது’ என்று ஜமிலா ப்ரிஜ் பூசன;( Jamila Brji Bhushan, Indian Jewellery and ornaments,p.11) குறிப்பிட்டுள்ளார்.

### கழுத்தணிகள்

கழுத்தில் தொங்கும் நிலையிலும், மார்பிலும் அணியப்படும் அணிகள் மார்பணிகள் அல்லது கழுத்தணிகள் எனப்படும். ‘கழுத்தணிகள் நூற்றுக்கு மேற்பட்டவையாக உள்ளன’ என்று அ.இராகவன்(தமிழ்நாட்டு அணிகலன்கள், ப.170) குறிப்பிட்டுள்ளார். இதில் முத்துமாலை, பொன்னரி மாலை ஆகிய இரு அணிகள் அணிந்த செய்தி சங்க இலக்கியத்தில் பதிவாகியுள்ளன.

கழுத்தணிகளுள் ஒன்றான முத்துமாலையைப் பாடினியும் மதுரை நகரத்து மகளிரும் அணிந்திருந்தனர். இதனை,

**“வால்ஒளி முத்தமொடு பாடினி அணிய”**(பொரு.162)
**“பரூஉக் காழ் ஆரம் சொரிந்த முத்தமொடு”**(மதுரை.681)

இவ்வடிகள் காட்டுகின்றன. மேலும் மகளிர் ‘மதாணி’ என்னும் கழுத்தணியை அணிந்து ஒப்பனைச் செய்து கொண்ட காட்சியையும் மதுரைக்காஞ்சி(461) விளக்கியுள்ளது.

பந்தர் என்னும் ஊரில் விளைந்த முத்துக்கள் (பதிற்று.67;2,74;6), கடலில் விளைந்த முத்துக்கள் (புறம்.380;1) கொடுமணம் என்னும் ஊரின் ஆபரணங்கள் (பதிற்று.67;1,74;5) போன்றவை சங்க காலத்தில் சிறப்பான அணிகளாகக் கருதப்பட்டுள்ளன.

கரிகாலன் நூலாற் கட்டப்படாத மென்மையையும் நெருக்கத்தையும் உடைய பொன்னரி மாலையைப் பாடினிக்குப் பரிசளித்தான் என்பதை, **“நூலின் வலவா நுணங்குஅரில் மாலை”** என்ற அடி(பொரு.161) புலப்படுத்துகிறது. பொன்னால் செய்த கம்பிகளால் வேலைப்பாடுகளுடன் அமைக்கப்பட்ட பொன்னரி மாலை என்பது இதன் பொருளாகும். இத்தகைய மாலையைப் பிணிமுகம் என்ற முருகக்கடவுளின் யானை அணிந்திருந்ததை,

**“வாடா மாலை ஓடையொடு துயல்வர”** (திரு.79)

இவ்வடியிலும், முருகப்பெருமானது மார்பில் பொன்மாலை பொலிவுற்றதை,

**“ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பின்”** (திரு.104)

என்ற அடியிலும் நக்கீரர் குறிப்பிட்டுள்ளார்.

பூண், இழை போன்ற அணிகளையும் சங்ககால மகளிர் அணிந்திருக்கின்றனர். இதில் பூண் அணியைச் சூரர மகளிர், விறலியர், மதுரை நகரச் செல்வ மகளிர் மற்றும் பரத்தையர் ஆகியோர் அணிந்திருந்தனர். இதனை,

**“நுண்பூண் ஆகம் திளைப்ப”** (திரு.32)
**“பூண் அகத்து ஒடுங்கிய வெம்முலை”** (சிறு.26)
**“நுண் பூண் ஆகம் வடுக்கொள முயங்கி”** (மதுரை.569)

என்ற இலக்கிய அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. இதன் வழியாக சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் அணிந்திருந்தப் பல்வேறு வகையான அணிகள் குறித்தும், அவைகள் அணியும் விதம் குறித்தும் அறிந்துக் கொள்ள இயல்கிறது.

**மகளிர் ஒப்பனைகள்**

மாந்தரின் அழகு, ஒப்பனைக் கலை மூலமாக வெளிப்படுகிறது. ஒருவர் தன்னை அழகுப் படுத்திக் கொண்டு வெளியில் செல்லும் பொழுது, அவருக்குள் ஒரு தன்னம்பிக்கைப் பிறக்க வாய்ப்பாகிறது. அழகுணர்ச்சியை அளவிடும் அளவு கோலாக ஒப்பனைக் கலை அமைகிறது. இக்கலையை அழகு, கோலம், வனப்பு, கவின், எழில் என்றச் சொற்களில் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

**ஒப்பனை - பொருள் விளக்கம்**

ஒப்பனை என்ற சொல்லிற்கு 'உவமை, அழகு, பாவனை, சமம், செவ்வை, திருட்டாந்தம், மண்ணல், வனைதல், வேய்தல், அலங்கரித்தல்' (கழகத் தமிழகராதி,ப.235) என்பது பொருள்களாகும். "அழகை மிகைப்படுத்திக் காட்டுதல், இருக்கும் அழகை வெளிக்கொணருதல், அழகு இல்லாத பொருளையும் அழகாகக் காட்டுதல் ஒப்பனையின் பண்பாடாகும்" என்று தமிழர் பண்பாட்டுச் சொற்கோவை (கு.பார்வதி, வரலாற்று முறை இலக்கியப் பேரகராதி, ஒப்பனையியல்,ப.4) விளக்கிக் காட்டியுள்ளது.

மனித மனம் இயற்கையாக அமைந்த அழகை, விரும்பியப் பொழுதும் செயற்கையாகச் செய்து கொள்ளும் ஒப்பனையின் பால் இருக்கும் ஈடுபாட்டின் வெளிப்பாடு ஒப்பனைக் கலைத் தோன்றுவதற்குக் காரணமாகிறது. "ஆதிக்குடிகள் கிளிஞ்சல்களையும், மணிகளையும், மலர்களையும், இறகுகளையும் தலையில் அணிகளாக அணிந்து அழகு செய்துள்ளனர்.

பெண்கள் உச்சி முதல் உள்ளங்கால் வரையிலும், கூந்தல் அணிகள், கழுத்து வளையங்கள், மூக்கில் நந்து, காதணிகள், கடகங்கள், கைக்காப்புகள், காலணிகள் ஆகியவற்றால் அழகு செய்து கொள்கிறார்கள்" என்று ஆதிகுடிகளின் ஒப்பனைகள் குறித்து வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி-4, ப.355) குறிப்பிடுகின்றது.

**ஒப்பனை வகைகள்**

மனிதனின் நாகரிக வளர்ச்சி ஒப்பனைக் கலை வழியாக வெளிப்படுத்தப்படுகிறது. ஆயக்கலைகள் அறுபத்து நான்கு வகையில் சிறப்பிடம் பெற்றதாக ஒப்பனைக் கலை அமைந்துள்ளது. இது பல நுணுகிய நுட்பங்களைக் கொண்டது. இதனால் இக்கலை பிற கலைகளிலும் மேம்பட்டு விளங்கி மனித நாகரிகத்தை உணர்த்தும் வாயிலாகக் காணப்படுகிறது.

இலக்கியங்களில் கேசாதி பாத வருணனை, பாதாதி கேச வருணனை என்ற இரு வகைகளில் மகளிரின் ஒப்பனைக் காணப்படுகிறது. இக்கலை காலம், பணி, வயது ஆகிய நிலைகளின் காரணமாக வேறுபடுகின்றன. பகல், இரவு ஆகிய காலங்களில் புனையும் ஒப்பனைகள் ஒன்றுக்கொன்று வேறுபட்டவை ஆகும். தொழில்களின் அடிப்படையிலும் இவ்வொப்பனை வேறுபட்டு அமைகின்றன.

சிறு வயதினர், இளம் பருவத்தினர், நடுத்தர வயதினர், முதியோர், ஆடவர், பெண்டிர், உருவ அடிப்படை, கால அடிப்படை, திருவிழாக்கள், முடி, முகம், உடல் போன்ற தன்மைகளுக்கு ஏற்ப ஒப்பனை மாறுபடுகின்றன. இவற்றில் கூந்தல், முகம், கண், உதடு, நுதல், உடல் போன்ற ஒப்பனை நலன்களில் சங்க கால மகளிர் ஈடுபட்டுள்ளனர்.

## கூந்தல் ஒப்பனை

மகளிரின் கூந்தல் அவர்களுக்கு அழகு சேர்க்கும் நிலைக்களமாக உள்ளது. சங்க கால மகளிர் கூந்தலைப் பேணிப் பாதுகாத்து, மலர்ச்சூடி அலங்கரித்துள்ளனர். இவர்கள் கூந்தல் ஒப்பனையில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்துள்ளனர். அடர்ந்த கூந்தலைச் சங்க காலப் புலவர்கள் 'அணை, மெல்லணை, பாயல்' (கலி.76;19, அகம்.308;12, நற்.360;7, குறு.270;8, பதிற்று.50;19, குறு.254;5) என்ற சொற்கள் கொண்டு வருணித்துள்ளார்கள். கரிய மை, கார்மேகம், அடர்ந்த இருள், ஒளி பொருந்திய நீலமணி, ஆற்றின் மிகுந்த அறல், மயில் தோகை போன்றவை தழைத்தக் கூந்தல்களுக்கு உவமைகளாகச் சங்க இலக்கியங்கள் குறிப்பிட்டுள்ளன.

இல்லற மகளிரின் கூந்தலை அவரவரின் கணவன் மட்டும் தொடும் உரிமையுடையவர்களாக (நற்.96;4-6, அகம்.104;16-17) விளங்கினர். தலைவன் தலைவியின் கூந்தலைச் சீவி அலங்கரித்துப் பூச்சூடிவிடும் இயல்பினைப் பெற்றிருந்தக் காரணத்தினால், கணவன் இறந்த நிலையில் கைம்மை நோன்பிருக்கும் மகளிர் பெரும்பாலும் கூந்தலை மழித்துக் கொண்டு வாழ்ந்துள்ளனர்.

## கூந்தலின் வேறு பெயர்கள்

மகளிரின் கூந்தலைக் குறிப்பிட இலக்கியங்கள் பல்வேறு பெயர்களைப் பயன்படுத்தியுள்ளது. பித்தை, ஐம்பால், கதுப்பு, குழல், கூழை, முச்சி, ஓதி என்பவை சங்க இலக்கியங்களில் (பொரு.160, மலை.30, கலி.125, பரி.12;15, புறம்.61, திரு.26, மலை.182, புறம்.70;14, சிறு.22) குறிப்பிடப்படும் கூந்தலின் வேறு பெயர்கள் ஆகும்.

**ஐம்பால்**

ஐம்பால் என்ற வேறு சொல்லால் கூந்தல் குறிக்கப்படுவதை, **"மணங்கமழ் ஐம்பாலார்"** (கலி.131;39) என்ற கலித்தொகைத் தொடர் காட்டுகிறது. நறுமணமூட்டி அலங்காரம் செய்யப்படும் கூந்தல் ஐம்பால் என வழங்கப்படுகிறது. இதனை,

> **"வதுவை நாறும் வண்டுகமழ் ஐம்பால்**
> **.... .... .... ....**
> **அகடு சேர்பு பொருந்தி அளவினில் திரியாது"** (மலை.30-33)
> **"இன் மணிச் சிலம்பின் சில்மொழி ஐம்பால்**
> **பின்னொடு கெழீஇய"** (கலி.125;16-17)

என்ற பாடல்களால் அறிய முடிகின்றன.

தலைவன் தலைவியின் ஐம்பால் அழகின் சிறப்பைப் புகழ்ந்துக் குறிப்பிடுவதையும், கூந்தல் கத்திரிக்கோல் கொண்டு வெட்டி ஐம்பாலாக அழகுப்படுத்தி அதில் அணிகள், பொன் மாலைகள் ஆகியவற்றைச் சேர்த்தியுள்ளதையும்,

> **"ஐம்பால் ஆய்கவின் ஏத்தி...."** (குறி.139)
> **"எ∴கு இடை தொட்ட, கார்க் கவின் பெற்ற ஐம்பால்"** (கலி.32;1-5)

என்ற அகப்பாடல் அடிகள் தெரிவிக்கின்றன.

**கூந்தல் பராமரிப்பு**

மகளிரின் அழகை மேன்மையுறச் செய்வது அவர்களின் நீண்ட கூந்தலாகும். கூந்தலைத் தூய்மை செய்ய குளிர்ச்சி மிகுந்தப் பத்து வகையான மணப்பொடிகள் மற்றும் அரைப்புத் தூள் ஆகியவற்றைப் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

> **"தண் அம் துவர் பல ஊட்டிச் சலம் குடைவார்;**
> **எண்ணெய் கழல இழை துகள் பிசைவார்"** (பரி.10;90-91)

என்ற பரிபாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. சிலப்பதிகாரத்தில் வரும் ஆடற்கலையில் வல்ல மாதவி ‘வாசநெய் தடவிய மணங்கமழும் கூந்தலைப் பத்துத் துவர்களினாலும், ஐந்து விரையினாலும், முப்பத்திரண்டு வகை ஓமாலிகையினாலும் ஊறின நன்னீரில் நிறம்பெறக் கழுவி, அகில், சந்தனம் ஆகியவற்றின் புகையால் உலர்த்தி ஐவகையாகப் பிரித்துப் புனைந்தாள்’ என்பதனை,

**“பத்துத்துவரினும், ஐந்து விரையினும்**
**....  ....  ....  ....**
**புகையின் புலர்த்திய பூமென் கூந்தலை”** (சிலம்பு.6;76-80)

என்ற அடிகளில் இளங்கோவடிகளால் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

கூந்தலில் களிமண் தடவி நீரால் அலசியப்பின் எண்ணெய்ப் பசை, அழுக்கு நீங்குமாறு தூய்மைப்பட நீராட்டியக் கூந்தலுக்கு நெய்த்தடவி சிக்குகள் எடுத்துப் பாதுகாத்தச் செய்திகளைக் குறுந்தொகைப்(113;5, 312) பாடல்களும், நெய் பூசி வளர்த்தக் கரிய மயிரை, மாசு அறக் கழுவி மலர் சூட்டியச் செய்தியை,

**“நெய்யோடு துறந்த மை இருங் கூந்தல்**
**மண்ணுறு மணியின் மாசு அற மண்ணி,**
**புது மலர் கஞல”** (புறம்.147;6-8)

இப்புறநானூற்றுப் பாடலும் தெரிவிக்கின்றன. இவ்வாறு நீராட்டித் தூய்மைப்படுத்தியக் கூந்தலுக்கு மயிர்ச்சாந்து, வாசனைத் திரவியம் ஆகியவற்றைப் பூசி, அகில் மற்றும் சந்தனப் புகையூட்டி உலர்த்தியதை,

**“ஒலி மென் கூந்தற் கமழ் புகை கொளீஇ”** (புறம்.146;9)
**“அகில் உண விரித்த அம்மென் கூந்தலின்”** (சிறு.264)

என்கின்ற அடிகள் புலப்படுத்துகின்றன. குவளை, முல்லை, பாதிரி, நெய்தல், நரந்தம் ஆகிய மலர்களின் மணம் மகளிரின் கூந்தல் மணத்திற்கு ஈடாகக் கூறப்பட்டுள்ளன.

பொற்பூக்கள் விளங்கிய அணிகலன்கள் அணிந்த விறலியர் தம் கூந்தலில், நரந்த மலர்களால் பல காழாகப் புனையப்பட்ட மாலைகள் சுற்றப்பட்டு அழகியதாக அமைந்துள்ளதையும், விறலியின் கூந்தலில் பாதிரி மலர் மணம் வீசுவதையும்,

**"விளங்குஇழை மகளிர் கூந்தற் கொண்ட;**
**நரந்தம் பல்காழ்க் கோதை சுற்றிய"** (புறம்.302;3-4)
**"பாதிரி கமழும் ஓதி"** (புறம்.70;14)
**"கார் மலர் கமழும், தாழ் இருங்கூந்தல்"** (பதிற்று.21;33)

என்கின்ற புறப்பாடலகள் வழியாக அறிய முடிகின்றன. அகப்பாடல்கள் மகளிரின் கூந்தல் மணம், காடுகளில் இருந்து வரும் நறுமணத்திற்கு ஈடாக வருணிக்கப்பட்டுள்ளது (அகம்.204;12-13, குறு.312;3, நற்.6;8-9, அகம்.399;1-2). இதனால் மகளிரின் கூந்தலுக்கு இருக்கும் சிறப்புக் குறித்து அறியப்படுகிறது.

**கூந்தல் முடிதலின் வகைகள்**

சங்க கால மகளிர் பல்வேறு வகையான நிலைகளில் கூந்தலை ஒப்பனைச் செய்துள்ளனர். இவர்கள் தாங்களாகவே ஒப்பனைச் செய்து சிறந்திருந்துள்ளனர். சங்க மகளிர் கூந்தலை முடி, கொண்டை, சுருள், குழல், பனிச்சை என்ற ஐந்து வகைகளில் அழகுபடுத்தியுள்ளனர்.

**முடி**

முடி என்பது கூந்தலை ஒன்று சேர்த்து உச்சியில் கூட்டி முடிவதாகும்.

**கொண்டை**

கூந்தலை முடிந்துக் கட்டுவதற்குக் கொண்டை என்று பெயர். வாழைப் பூப்போன்று கூந்தலை நீட்டி முடியும் வாழைப்பூக் கொண்டையை மகளிர் முடிந்துள்ளனர். இதனை,

> **"……………….வாழைப்**
> **பூஎனப் பொலிந்த ஓதி"** (சிறு.21-22)

என்ற சிறுபாணாற்றுப்படை அடிகள் சிறப்பித்துக் காட்டுகின்றன. சூரர மகளிர் மருத மரத்தின் பூங்கொத்துக்களைச் சண்பகப் பூவின் மேல் வைத்து, உச்சிக் கொண்டையை அலங்காரம் செய்ததை,

> **"துவர முடித்த துகள்அறும் முச்சிப்**
> **பெருந்தண் சண்பகம் செரீஇ"** (திரு.26-27)

என்ற முருகாற்றுப்படை அடிகள் தெரிவிக்கின்றன. இதைப்போன்று குறமகள் உச்சிக் கொண்டையிட்டு மணம் மிகுந்த மலரைச் சூடியிருந்தக் காட்சியை, **"நறுமலர் அணிந்த நாறுஇரு முச்சிக் குறமகள்"** என்ற மலைபடுகடாம் அடியில் (182) காண முடிகிறது. பூச்செருகி முடியப்படும் உச்சிக்கொண்டை வகைகளை இதன் மூலம் அறிய இயல்கிறது.

தாழம்பூக் கொண்டு முடிக்கும் கொண்டை வகையைக் கலித்தொகை(பாடல் எண்-55;1-3) குறிப்பிட்டுள்ளது. இதனால் சங்க மகளிர் முடிந்துக் கொண்ட வாழைப்பூக் கொண்டை, சண்பகப் பூக் கொண்டை, தாழம்பூக் கொண்டை போன்ற வகைகள் பற்றி தெரிந்து கொள்ள முடிகின்றன.

**சுருள்**

பின்னிச் செருகப்படும் கூந்தலுக்குச் சுருள் என்று பெயர். இது பெரும்பாலும் மூன்று பகுதியாகப் பிரித்து பின்னுவதாக உள்ளது. இவ்வாறு பின்னப்பட்டக் கூந்தலின் நுனிப்பகுதி பித்தை என்று கூறப்பட்டுள்ளது.

இப்பித்தைப் பகுதியில் மலர் சூடியதைப் பொருநராற்றுப்படை(அடி-160) குறிப்பிட்டுள்ளது.

**குழல்**

சுருட்டி முடியும் கூந்தலுக்குக் குழல் என்று பெயர். இவ்வாறு குழலாக முடியப்படுவதைக் கதுப்பு என கூறப்படுவதனை, **"கார்கொள் கூந்தல் கதுப்பு அமைப்போரும்"** என்ற பரிபாடல்(12;15) குறிப்பிட்டுள்ளது.

**பனிச்சை**

கூந்தலை மூன்று, நான்கு, ஐந்து கூறாகப் பிரித்துச் சடையாகப் பின்னுதலுக்குப் பனிச்சை என்று பெயர். இப்பின்னலின் அடர்த்திக்கும், நீளத்திற்கும் யானையின் தும்பிக்கை உவமையாகக் கூறப்பட்டுள்ளதைச் சிறுபாணாற்றுப்படை **"பிடிக்கை அன்ன பின்னுவீழ் சிறுபுறத்து"**(அடி-191) என்று குறிப்பிட்டுள்ளது.

இதனால் சங்கப்புற இலக்கியத்தில் மகளிர் முடிந்துக் கொண்ட கூந்தல் வகைகள் பற்றி அறிய முடிகின்றன.

**மலர் ஒப்பனைகள்**

சங்க கால மகளிர் தங்கள் கூந்தலைப் பல்வகை மலர்கள், மாலைகள் கொண்டு ஒப்பனைச் செய்துள்ளனர். 'அல்லி, அனிச்சம், ஆம்பல், ஆவிரம், கல்லகாரம், காஞ்சி, காந்தள், குருக்கத்தி, குவளை, குளவி, கொன்றை, ஞாழல், சண்பகம், செங்கருங்காலி, தாழம்பூ, நரந்தம், நறா, நீலம், பகன்றை, பாதிரி, பித்திகை, மறலை, முண்டகம், முல்லை, வெட்சி, வெண்கடம்பு, வேங்கை போன்ற பூக்கள் கூந்தல் ஒப்பனைக்காகச் சங்ககால மகளிர் பயன்படுத்தியுள்ளனர்' என க.திலகவதி (சங்ககால மகளிர் வாழ்வியல், ப.360) குறிப்பிட்டுள்ளார்.

தலைவி, தனது தோழிகளுடன் சுனையில் நீராடியப் பின் அங்குள்ள பாறையின் மீது பல்வகையானப் பூக்களைச் சேகரித்து விளையாடியதைக் குறிஞ்சிப்பாட்டு(61-98) குறிப்பிட்டுள்ளது. கழுத்தில் அணியும் மாலைகளில் மகளிர்க்குரியதைக் கோதை என்றும், ஆடவர்க்குரியதைத் தார் என்றும் இலக்கியங்கள் சுட்டுகின்றன. மகளிர் மலர்களைத் தாங்கள் அணிந்து கொள்வது மட்டுமல்லாது, தம் குழந்தைகளுக்கும் சூட்டி அழகு பார்த்தச் செய்தியை அகப்பாடல்கள் (அகம்.5;23, கலி.85;14) தெரிவிக்கின்றன.

மதுரை நகரத்து மகளிர் செங்கழுநீர் மலர்களை மாலையாகக் கட்டி இரவு நேரங்களில் அணிந்துள்ளனர். இந்நகரத்தில் வாழும் வரைவின் மகளிர், வெண்ணிற மாலைகளைக் கூந்தலில் முடித்து, புதிய மலர்களின் மணம் தெருக்களில் வீச, செங்கழுநீர் மற்றும் மழைக்கு மலர்ந்த மலர்களையும் கொத்தாகச் சூடிக் கொண்டனர். இச்செய்திகள்,

**“காதல் இன்துணை புணர்மார், ஆய்இதழ்த்**
**தண் நறுங் கழுநீர் துணைப்ப, இழைபுனையூஉ”** (மதுரை.550-551)
**“வீழ்துணை தழீஇ, வியல் விசும்பு கமழ**
**…. …. …. ….**
**கொண்டல் மலர்ப் புதல் மானப் பூ வேய்ந்து”** (மதுரை.561-568)

என்ற மதுரைக்காஞ்சியின் அடிகளால் பெறப்படுகின்றன.

கூத்தர் கடம்பின் மெல்லியப் பூங்கொத்துகளையும், யாமரத்தின் பூவையும் நாரில் தொடுத்துச் சூடியிருந்ததை,

**“தேம்பட மலர்ந்த மராஅ மெல் இணரும்,**
**உம்பல் அகைத்த ஒண்முறி யாவும்,**
**தளிரொடு மிடைந்த காமரு கண்ணி,**
**திரங்கு மரல் நாரில், பொலியச் சூடி”** (மலை.428-431)

என்ற மலைபடுகடாம் அடிகள் சுட்டிக் காட்டுகின்றன. இதைப் போல் உழத்தி தன் கொண்டையில் பலவகை மலர்கள் அணிந்திருந்ததை, புறநானூற்று பாடல்(61;1)) தெரிவிக்கிறது. இதனால் சங்க கால மகளிர் கூந்தலுக்கு

மணமூட்டியும், பல் வகையான பூக்கள் அணிந்தும், கூந்தல் முடிதலில் ஐந்து வகையாக ஒப்பனைச் செய்தும் இருந்துள்ளமைப் பற்றி அறிய முடிகின்றன.

**முக ஒப்பனை**

'அகத்தின் அழகு முகத்தில் தெரியும்' என்பது பழமொழி. ஒருவரின் மனம் தெளிவாக இருப்பின் முகமும் தெளிவாக இருக்கும். ஆதலால் முகம் என்பது ஒருவரை அடையாளப்படுத்துவதாகவும், அழகை அதிகப்படுத்துவதாகவும் அமைகிறது. சங்க காலம் முதல் தற்காலம் வரையில் மகளிர் முக ஒப்பனையில் அதிக ஆர்வம் கொண்டவர்களாகத் திகழ்கின்றனர்.

சங்க கால மகளிர் முகப்பொலிவிற்கு இயற்கையிலமைந்த மஞ்சள், புனுகு, பனிநீர், கற்பூரம் மற்றும் நறுமணப் பொருட்களைப் பயன்படுத்தியுள்ளனர். இதில் மஞ்சளும் கற்பூரமும் கிருமி நாசினிக்காகவும், புனுகு முகத்தில் தோன்றும் பருக்களை நீக்கவும், பனிநீர் குளிர்ச்சிக்காகவும் மகளிரால் பயன்படுத்தப்பட்டுள்ளது. நறுமணப் பொருட்கள் கொண்டு தயாரிக்கப்படும் 'சுண்ணப் பொடி' பூந்தாது போன்றிருக்கும். இதனை,

**"பலர் தொகுபு இடித்த தாது உகு சுண்ணத்தர்"** (மதுரை.399)

என்ற மதுரைக்காஞ்சி அடியால் அறிய முடிகிறது. சுண்ணம் இடிப்பதற்கு மகளிர் கூட்டம் பயன்படுத்தப்பட்டதையும் இவ்வடி உணர்த்துகிறது. கற்பூரம், சந்தனம், பொன், நவமணிகள் முதலியவற்றைப் பனிநீரிலும், புனுகிலும் நனைய வைத்து, இடித்துச் சுண்ணப்பொடி தயாரிக்கப்பட்டுள்ளது. தமிழ் நாட்டின் ஜவ்வாது மலைகளில் சந்தன மரங்கள் அகிகமாகக் கிடைத்தாலும், வட நாட்டில் கிடைக்கும் சந்தன மரங்கள் நீண்ட நாட்பட்டதாக இருப்பதின் அருமைக் கருதி, சந்தனம் அரைப்பதற்காக அங்கிருந்துச் சந்தனக் கல் கொண்டுவரப்பட்டு பயன்படுத்தப்பட்டுள்ளது. இல்லங்களில் பணிபுரியும் மகளிர்

வாசனைப் பொருட்களை அம்மியில் இட்டுச் சாந்தாக அரைத்துத் தருவதைச் செல்வ மகளிர் பூசிக்கொண்டு தங்களின் முகத்திற்கு அழகு சேர்ப்பர். இச்செய்தியை,

**"கொள் உறழ் நறுங்கல், பல கூட்டு மறுக"** (நெடு.50)

என்ற நெடுநல்வாடைப் பாடல் அடியில் காண முடிகிறது. இத்தகைய முக ஒப்பனையில் கண், நெற்றி, உதடு போன்ற உறுப்புகளின் ஒப்பனைச் சிறப்பிடம் பெறுகின்றன.

**கண் ஒப்பனை**

மனித உடலில் மிக முக்கிய உறுப்பாக அமைவது கண். கண் பார்வை சரியாக இருந்தால் மட்டுமே உலக நிகழ்வுகளை உற்று நோக்க முடியும். அத்தகையக் கண்ணைப் பேணிப் பாதுகாத்தல் என்பது முக்கியமான ஒன்று. சங்க காலம் முதல் பெண்களை வருணிக்கும் கவிஞர்களில், அவர்களின் கண் குறித்து வருணிக்காதவர்களே இல்லையென்று குறிப்பிட முடியும்.

மான், மீன், குவளைமலர், வில் அம்பு போன்ற உயிரினத்தோடும், இயற்கைப் பொருட்களோடும் கண்களை ஒப்பிட்டுப் போற்றியுள்ளனர். சங்க கால மகளிர் இத்தகையச் சிறப்பு வாய்ந்த கண்களைப் பாதுகாக்கும் பொருட்டு ஒப்பனைச் செய்துள்ளனர்.

பெண்களின் கண்களுக்கு மைதீட்டி ஒப்பனைச் செய்யும் பொழுது அவை முகத்திற்கு அழகான தோற்றத்தைத் தருகிறது. பெண்களுக்கு உரிய கலையாக மைதீட்டும் கலை இருந்திருக்கிறது. மையை 'அஞ்சனம்' என்று முல்லைப்பாட்டும்(93), ஐங்குறுநூறும்(16;2) குறிப்பிட்டுள்ளது. மை தீட்டப்பெற்ற கண்கள் 'உண்கண்', மையுண்கண்' என்று சங்க இலக்கியங்கள் (புறம்.89;2, பதிற்று.16;18, அகம்.129;16, ஐங்.16;4, பரி.18;16)

சுட்டியுள்ளன. திருவள்ளுவர் காலத்தில் கண்களுக்கு மைதீட்டிய வழக்கம் இருந்ததை, “எழுதுங்கால் கோல்காணாக் கண்ணே போல்” (குறள்-1285) என்ற திருக்குறளில் வள்ளுவர் குறிப்பிட்டுள்ளதில் இருந்து அறிய முடிகிறது.

**மை தயாரிக்கும் முறை**

மண் அடுப்பினுள் நெய் கொண்டு விளக்கேற்றி வைத்து, அடுப்பின் மேல் வெண்ணெய் தடவிய மண் குடுவையை வைக்க வேண்டும். அக்குடுவையின் அடியில் விளக்கின் புகைப்பட்டு வெண்ணையோடு சேர்ந்த மை படியும். இதனை சேகரித்து கண்ணுக்கு மையாகப் பயன்படுத்தினர். இயற்கையான முறையில் தயாரிக்கப்பட்ட மையை வேழக்கரும்பின் தண்டில், மகளிர் சேமித்து வைத்ததை,

**“ஓங்கு பூ வேழத்துத் தூம்புடைத் திரள் கால்**
**சிறு தொழு மகளிர் அஞ்சனம் பெய்யும்”** (ஐங்.16;1-2)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடல் தெரிவிக்கிறது. நாட்டியப்பெண்கள் மீன், வேல் மற்றும் மருட்சி போன்ற வடிவங்கள் தோன்றும் படியும், கண்களின் மேலுள்ள புருவங்களில் மையினால் காதளவிற்கு நீண்ட கோடிட்டு அழகுசெய்தும் உள்ளனர். இன்றையச் சூழலில் இஸ்லாமிய இன ஆடவர்களும் மை தீட்டும் பழக்கம் கொண்டுள்ளனர்.

**நுதல் ஒப்பனை**

நெற்றியில் திலகமிட்டு அழகு செய்தல் நுதல் ஒப்பனையாகும். சங்க காலம் முதல் மகளிரிடம் திலகம் இட்டுக்கொள்ளும் வழக்கம் இருந்து வருகிறது. ‘திலகம்’ என்னும் சொல் நெற்றிப் பொட்டைக் குறிக்கும் என்று தமிழ் லெக்சிகன் (Tamil Lexicon, vol III p.1925) பொருள் தந்துள்ளது.

**“தேம் கமழ் திருநுதல் திலகம் தைஇயும்”** (அகம்.389;3)
**“திலகம் தைஇய தேம் கமழ் திரு நுதல்”** (நற்.62;6)

என்ற அடிகள் மகளிர் திலகமிட்டிருந்ததைச் சுட்டிக் காட்டுகின்றன. திலகமிட்டிருக்கும் மணம் கமழும் அழகிய நெற்றியினை உடையவர் சூரர மகளிர் என்பதை,

**"திலகம் தைஇய தேம்கமழ் திருநுதல்"** (திரு.24)

இத்திருமுருகாற்றுப்படை அடி தெரிவிக்கிறது.

தலைவன் தலைவியின் மீது மிகுந்த அன்பு கொண்டிருந்ததால் அவள் நெற்றியில் திலகமிட்டு அழகுப்படுத்துவதையும், தலைவி திலகம் பதித்த நிலவு போன்ற முகம் கொண்டிருந்தாள் என்பதையும்,

**"மாக விசும்பில் திலகமொடு பதித்த**
**திங்கள் அன்ன நின் திருமுகம்"** (அகம்.252;24-25)

என்கின்ற அகப்பாடல் அடிகள் குறிப்பிடுகின்றன. மகளிர் தாங்களாகவே ஒப்பனைச் செய்து கொள்வதோடு, ஒருவருக்கொருவர் மாறி ஒப்பனைச் செய்து கொள்வதும் உண்டு.

**"நெற்றி விழியா நிறை திலகம் இட்டாளே,**
**கொற்றவை கோலம் கொண்டு ஓர் பெண்"** (பரி.11;99-100)

என்ற அடிகள் ஒரு பெண் மற்றொரு பெண்ணிற்கு நெற்றிக்கண் போலத் தோன்றும் திலகத்தை நுதல் நிறைய இட்டுள்ளதால் அப்பெண் கொற்றவைப் போன்ற தோற்றம் கொண்டு விளங்கியதைத் தெரிவிக்கிறது.

**உதட்டு ஒப்பனை**

உதட்டிற்குச் சாயம்(Lipstick) பூசிக்கொள்ளும் பழக்கம் சங்க காலம் முதல் தற்காலம் வரையிலான மகளிரிடம் நிலவி வருகிறது. உதடுகளில் வெடிப்பு உண்டாகாமலும், வறண்டு போகாமல் இருப்பதற்காகவும், மகளிரின் உதடும், வாயும் சிவந்திருப்பது, அழகின் அடையாளமாகவும் கருதப்பட்டுள்ளன. இத்தகையச் சிவந்த உதடுகளுக்குப் பவளம்

உவமையாகக் கூறப்பட்டுள்ளதை அகநானூற்றுப் பாடல்கள் (62;2,7;10, 162;13) தெரிவிக்கின்றன.

பொருநராற்றுப்படையில் பாடினி, **“இலவுஇதழ் புரையும் இன்மொழித் துவர்வாய்”** உடையவள் (பொரு.27) என்று சிறப்புப்படுத்தியுள்ளது. இதனால் இயற்கையில் சிவந்த உதடுகளை ஒப்பனைக் கலையின் மூலம் சிவப்பாகக் காட்டும் திறம் மகளிரிடம் காணப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

**உடல் ஒப்பனை**

சங்க மகளிர் உடல் ஒப்பனைக்காகப் பல வகையான வாசனைப் பொருட்களையும், வண்ணச் சாந்துகளையும் பயன்படுத்தியுள்ளனர். ஒப்பனைக்கு முன்பாக மகளிர் உடல் தூய்மையை விரும்பியுள்ளார்கள். ‘புறத்தூய்மை நீரால் அமையும்’ என்ற வள்ளுவரின் வரிக்கிணங்க, குளம், ஏரி, ஆறு, அருவி, சுனை, கிணறு போன்ற நீர், நிலைகளுக்குச் சென்று உடல் தூய்மையைச் செய்துள்ளனர். அங்கு தனித்தும், தோழியர்களோடும், தன் கணவரோடும் நீராடி மகிழ்ந்துள்ளனர். அகில், சந்தனம், கந்தூரி, ஐந்துவிரை, பத்துத்துவர், குங்குலியம் முதலிய வாசனைப் பொருட்கள், பொடிகள் ஆகியவற்றைக் கொண்டு சென்று மகளிர் வையையில் நீராடிய அழகைப் பரிபாடல் குறிப்பிட்டுள்ளது.

**“பொறிவி யாற்றுறி - துவர், புகை, சாந்தம்,**
**எறிவன எக்குவ ஈரணிக்கு ஏற்ற**
**நறவு அணி பூந் துகில் நன் பல ஏந்தி,**
**பிற தொழின … ம் பின்பின் தொடர”** (பரி.22;17-20)

மகளிர் தங்கள் தோலின் நிறத்திற்கும், முகப்பொலிவிற்கும் கிருமி நாசினியாகக் கருதப்படும் மஞ்சள் பொடியைப் பயன்படுத்தியுள்ளனர். நீராடியப் பின் அகில், சந்தனம் போன்றவற்றின் புகைக்கொண்டு உடம்பையும், கூந்தலையும் உலர்த்தியுள்ளனர். மகளிர் தோள்களிலும்,

நகில்களிலும் அவர்களுடைய கணவர் சந்தனக் குழம்பால் தொய்யில் எழுதி அழகுபடுத்தியதை,

**“தொய்யில் பொறித்த சுணங்கு எதிர் இளமுலை”** (மதுரை.416)
**“ஏக்கழுத்து நாணான் கரும்பின் அணை மென் தோள்”** (பரி.7;55)

என்ற அடிகள் தெரிவிக்கின்றன.

ஒப்பனைக்காக கண்ணாடி, கத்தரிக்கோல், மாலைகள் இட்டு வைக்கும் பூஞ்செப்பு போன்ற கருவிகளைச் சங்ககால மகளிர் பயன்படுத்தியுள்ளனர். இதனை,

**“மாசு அறக் கண்ணடி வயக்கி”** (பரி.12;20)
**“மயிர்குறை கருவி மாண்கடை அன்ன”** (பொரு.29)
**“மடைமாண் செப்பில் தமிய வைகிய**
**பொய்யாப் பூவின் மெய் சாயின ளே”** (குறு.9;2-3)

என்கின்ற பாடல் அடிகளால் அறிய முடிகின்றன. இத்தகைய உடல் ஒப்பனையில் நகங்களை ஒப்பனைச் செய்யும் ஒரு செயலும் மகளிரிடம் காணப்படுகிறது.

**நக ஒப்பனை**

சங்ககால மகளிர் கை மற்றும் கால்விரலகளின் நகங்களுக்குச் செம்பஞ்சிக் குழம்பு, மருதாணி போன்றவற்றின் கலவையில் தயாரிக்கப்படும் சாந்தினைக் கொண்டு வண்ண மூட்டியுள்ளனர். இதனால் ஆரோக்கியம் தரக்கூடியப் பொருட்களை அவர்கள் பயன்படுத்தியது தெரிகிறது.

நகப்பூச்சுகளைப் பூசுவதால் கை, கால்கள் அழகானத் தோற்றம் கொண்டு விளங்குகின்றன. நிறமூட்டியச் சிவந்த நகத்திற்குக் கிளியினது மூக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளதையும், செம்பஞ்சிக் குழம்பால் நிறமூட்டியச் செய்தியையும்,

**“கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு வள்உகிர்”** (பொரு.34)
**“குவிமுகை முருக்கின் கூர்நுனை வைஎயிற்று**

நகைமுக மகளிர் ஊட்டு உகிர் கடுக்கும்" (அகம்.317;4-5)
"அம்செஞ் சீறடிப் பஞ்சி ஊட்டியும்" (அகம்.389;7)
"உகிரும் கொடிறும் உண்ட செம்பஞ்சி" (பரி.6;17)

என்ற அடிகளில் காண முடிகின்றன. இதனால் மகளிர் கை, கால் விரல்களுக்குச் சாயம் பூசி ஒப்பனை செய்து கொண்ட பாங்கு பற்றி தெரிகிறது. இதனால் மகளிரின் ஒப்பனைக் கலைச் சிறப்பு குறித்து அறிய இயல்கிறது.

**மகளிர் மேற்கொண்ட தொழில்கள்**

மக்களின் அன்றாட வாழ்க்கைக்குத் தேவையான பொருட்களைப் பெறுவதற்குத் தொழில் அவசியமாகிது. கணவனும், மனைவியும் சேர்ந்து வாழும் குடும்ப வாழ்க்கையில் தங்களது தேவைகளை நிறைவு செய்து கொள்ளவும், இல்லறம் தடைபெறாது செல்லவும் பொருளாதாரம் அவசியமாகிறது. இவ்விதத்தில் வெளியில் சென்று பொருளீட்டி வருதல் ஆணுடையதாகிறது. ஆண் ஈட்டி வரும் பொருட்களைக் கொண்டு இல்லறத்தின் தேவைகளை நிறைவு செய்து வாழும் பொறுப்பு பெண்ணுடையதாகிறது. இதனை,

"வருவிருந்தோம்பி மனையற முட்டாப்
பெருமனைக் கிழத்தியர் பெருமகிழ் வெய்தி" (சிலம்பு.22;132)

என்ற அடிகளில் இளங்கோவடிகள் தெளிவுப்படுத்தியுள்ளார். நடைமுறை வாழ்க்கையில் பெண்கள் பொருளீட்டும் தொழிலில் ஈடுபட்டுள்ளதனை இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. வெளியூர்களுக்குச் செல்லாமல் தாங்கள் வாழும் நிலங்களுக்கேற்றாற் போல் தொழில் மேற்கொண்டும், சில வேளைகளில் கணவனுக்கு உறுதுணையாக வெளியூர்களுக்குச் சென்று தொழில் மேற்கொள்ளும் வழக்கம் உடையவர்களாகவும் இருந்திருக்கிறார்கள்.

பெண்கள் மனை வாழ்க்கையில் தேவைக்கு அதிகமானப் பொருட்களைப் பிறர்க்குக் கொடுத்தும், தம்மிடம் இல்லாதப் பொருட்களைப் பிறரிடமிருந்து பண்டமாற்று முறையில் வாங்கியும் இல்லறம் நடத்தி மேம்பட்டுள்ளனர். இவ்வாறான பண்டமாற்று முறை, முதலில் தெருக்கள் அளவிலும், ஊர் அளவிலும் நடைபெற்றுத் தனிக்குடும்பங்கள் செம்மையுற வழிவகுத்தது. நாளடைவில் நாடுகள் கடந்து பரவி மனிதனிடையே ஒருமைப்பாட்டு உணர்வை ஏற்படுத்தியது. இதனடிப்படையில் சங்க காலத்தில் வாழ்ந்த குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் நில மக்கள் தங்களிடம் உள்ளப் பொருட்களை எடுத்துச்சென்று பிற நிலங்களிலுள்ள மக்களிடம் கொடுத்தும், அங்குள்ளப் பொருட்களைக் கொண்டும் வாழ்ந்துள்ளனர்.

இதனால் மனித வாழ்க்கையில் பண்டமாற்று என்ற வாணிகம் உருவாகி, இதில் பெண்கள் குறிப்பிடத்தக்க அளவில் பங்குப்பெற்றும் உள்ளனர். "சங்க காலத் தமிழகத்தில் பொருட்களுக்கு ஊர் - கிராமங்களில் பண்டமாற்று, நகரம் - பட்டினங்களில் நாணயச் செலாவணியும் நடைபெற்றன" என்று தமிழரின் வாணிகம் குறித்து, மயிலை சீனி வேங்கடசாமி (பழங்காலத் தமிழர் வாணிகம் ப.11) அவர்கள் குறிப்பிட்டுள்ளார். இதனடிப்படையில் சங்கப் புற இலக்கியங்களில் மகளிர் நில அடிப்படையில் தொழில்களை மேற்கொண்டு வாழ்ந்துள்ளனர்.

### குறிஞ்சி நில மகளிரின் தொழில்

குறிஞ்சி நிலத்தில் தேனெடுத்தல், கழங்கு அகழ்தல், திணைகள் விளைவித்தல், முதலியவை முக்கியத் தொழிலாக உள்ளது. இதில் மகளிர் திணைப்புனம் காக்கும் பொருட்டு, புனத்தின் கண் அமைக்கப்பட்டப் பரண் மீதிருந்து தினைகள் உண்ணவரும் பறவைகளை ஓட்டிக்காத்தனர். இவர்கள் பறவைகளை விறட்ட கவன் வீசுதல், தட்டைத்தட்டுதல் ஆகிய செயல்களில்

ஈடுபட்டுள்ளனர். தழல், தட்டை, குளிர் போன்ற கருவிகளை மகளிர் பயன்படுத்தியுள்ளமையைச் சங்கப்பாடல்கள் (அகம்.118;11-13, குறு.360;6) தெரிவிக்கின்றன. இவர்கள் 'தட்டை' கருவிக் கொண்டு கிளிகள் ஓட்டியதை,

**"ஒலிகழைத் தட்டை புடையுநர், புனந்தொறும்**
**கிளி கடி மகளிர் விளிபடு பூசல்"** (மலை.328-329)

இம்மலைபடுகடாம் அடிகளில் காண முடிகின்றன. குறிஞ்சி நிலத்தில், பருவமெய்தியத் தம் பெண்களைப் பெற்றோர்கள் தினைக்காவலுக்கு அனுப்பி வைத்துள்ளனர். இதனை,

**"செவ் வாய்ப் பாசினம் கவரும் என்று, அவ் வாய்த்**
**தட்டையும் புடைத்தனை, கவணையும் தொடுக்க என**
**எந்தை வந்து உரைத்தனனாக"** (நற்.206;4-6)

என்ற நற்றிணைப் பாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. இவ்வகையில் மூங்கில் போன்ற தோளொடு மயிலின் மெல்லியச் சாயலையுடைய மகளிர் புனத்திற் படியும் கிளிகள் ஓட்டியதை,

**"வேய் அன்ன மென்தோளால்,**
**மயில் அன்ன மென் சாயலார்,**
**கிளிகடியின்னே"** (புறம்.395;12-14)
**"கிளி கடி மேவலர் புறவுதொறும் நுவல"** (பதிற்று.78;6)

என வரும் பாடல் அடிகள் தெரிவிக்கின்றன. இவ்வாறு 'கிளி ஓட்டுவதற்காகப் பயன்படுத்தப்படும் 'தழல்' என்ற கருவி கையால் சுற்றியக் காலத்துத் தன்னிடத்துப் பிறக்கும் ஓசையால் பறவைகளை வெருவி ஓடச்செய்யும் கருவி என்றும், தட்டையாவது, மூங்கிலைக் கண்ணுக்குக் கண் உள்ளதாக நறுக்கிப் பலவாகப் பிளந்து ஓசையுண்டாகத் தட்டப்படும் ஒரு கருவியென்றும், 'குளிர்' என்பது மூங்கிலை வீணை போல் கட்டித் தெறிக்கும் கருவி' என்றும் நச்சினார்க்கினியர் (பத்துப்பாட்டு மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் உ.வே.சா பதிப்பு, ப.487) குறிப்பிட்டுள்ளார். இதனால் குறிஞ்சி நில மகளிரின்

கிளி கடியும் தொழிலும், அதற்காகப் பயன்படுத்தப்பட்டக் கருவிகளும் பற்றி அறியப்படுகின்றன.

**முல்லை நில மகளிர் தொழில்**

முல்லை நிலத்து மக்கள் அந்நிலத்தின் விலங்குகளான ஆடு, மாடுகளைக் கொண்டு மேய்ச்சல் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இவற்றின் மூலம் கிடைக்கும் பால் பொருட்களை விற்று கிடைக்கும் மாற்றுப்பொருட்கள் கொண்டு முல்லை நில மக்கள் வாழ்ந்துள்ளனர். இதில் மகளிரின் பங்கு பெரும்பான்மையாக உள்ளது.

மேய்ச்சல் தொழிலை மேற்கொண்டிருந்த முல்லை நிலமக்கள் ஆயர், ஆய்ச்சியர், இடையர், இடைச்சியர் என்று அழைக்கப்பட்டனர். ஆய்மகள் தயிர் கொண்டு வந்தப் பானை நிறையும்படி, உழவர்தம் பெரிய வீட்டிலுள்ள மகளிர், நிலத்தின் களத்திலிருந்து பெற்ற வெண்மையான நெல்லை முகந்து தருவர் என்பதை,

> **"…. …. …. ஆய்மகள்**
> **தயிர் கொடு வந்த தசும்பும், நிறைய,**
> **ஏரின் வாழ்நர் பேர் இல் அரிவையர்**
> **குளக் கீழ் விளைந்த களக் கொள் வெண்ணெல்**
> **முகந்தனர் கொடுப்ப"** (புறம்.33;2-6)

என்ற புறநானூற்று அடிகள் புலப்படுத்துகின்றன. இதனால் தயிரை விற்றதற்கு மாற்றாக வெண்ணெல் பெற்ற செய்தியை அறிய முடிகிறது. இதைப்போல் பெரும்பாணாற்றுப்படைப் பாடலில் ஆயர்மகள் ஒருத்தி, விடியற்காலைப் பொழுதில் திண்ணியதாய் உறைந்து கிடக்கும் தயிரை, மத்தினைக் கொண்டு வலித்துக் கடைந்தப் பிறகு, வெண்ணெய் எடுத்த மோரைப் பானையில் ஊற்றுகிறாள். அப்பானையைத் தலையின் மேல் மெல்லிய சுமட்டின்கண் ஏற்றிச் சென்று விற்றதனால் கிடைத்த, நெல் முதலிய உணவுப் பொருட்களைக் கொண்டு வந்து உணவு சமைத்து சுற்றத்தாரை உண்ணச்

செய்கிறாள். இம்மகள் நெய் விற்ற விலைக்குப் பொன்னை விரும்பி வாங்காது எருமையையும் நல்ல பசுக்களையும் அவற்றின் கன்றுகளோடு வாங்கி வந்து வருமானம் பெருக வழிசெய்கிறாள். இதனை,

**"நள் இருள் விடியல் புள்ளழப் போகி**
**.... .... .... ....**
**எருமை, நல்ஆன், கருநாகு பெறூஉம்"** (பெரும்.155-165)

எனவரும் அடிகளில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் தெளிவுப்படுத்தியுள்ளார். இதன் வழியாக ஆயர்மகள் பாலின் பொருட்கள் கொண்டு தொழில் புரிந்து மேன்மையடைந்தச் சிறப்புத் தெரிய வருகிறது.

**மருத நில மகளிர் தொழில்**

மருத நிலம் என்பது பசுமை நிறைந்த வயல் பகுதியாகும். இப்பசுமைக்குக் காரணம் அந்நிலத்தின் நீர்வளம். இந்நில மகளிர் உழத்தியர், கடைசியர் என அழைக்கப்படுவர். விவசாயம், இவர்களின் முதன்மையானத் தொழிலாக உள்ளது. ஏர் கொண்டு உழும் உழவனுக்குத் துணையாக உழத்தி பல வகையான பணிகளைச் செய்து தருகிறாள். கொண்டையணிந்தக் கூந்தலுடன், குளிர்ந்த தழையாடை அணிந்த உழத்தியர், வயல்களில் களைகளாக வளர்ந்திருக்கும் நெய்தலுடன் ஆம்பலைப் பறிக்கும் காட்சியை,

**"சிறு மாண் நெய்தல் ஆம்பலொடு கட்கும்,**
**மலங்கு மிளிர் செறுவின்"** (புறம்.61;2-3)

என்ற புறநானூற்று அடிகள் வெளிப்படுத்துகின்றன. மேலும் உழத்தியர், தம் உடல் வளைந்து, குனிந்து நின்று முற்றிய நெற்றாளை அரிவாள் கொண்டு அரிந்து, சுமையாகக் கட்டிக் கொண்டு போய் களத்தில் சேர்ப்பர். பின்னர் எருமைகளால் மிதிக்கச் செய்து செந்நெல்லை உதிப்பர். இச்செயல்களை,

**"கூனி, குயத்தின் வாய்நெல் அரிந்து,**

சூடு கோடாகப் பிறக்கி, நாள்தொறும்,
குன்றுஎனக் குவைஇய குன்றாக் குப்பை" (பொரு.242-244)

"அருவி ஆம்பல் நெய்தலொடு அரிந்து,
செறு வினை மகளிர் மலிந்த வெக்கை" (பதிற்று.71;2-3)

என வரும் புறப்பாடல் அடிகள் தெளிவுப்படுத்துகின்றன. இவ்வாறு நெல்லரியும் பொழுது, மகளிர் ஓசை எழுப்பிக் கொண்டு(மதுரை.258,261-262) செயல் புரிந்துள்ளனர். மருத நிலத்தின் பயிர்களை அழிக்கும் நாரையை மகளிர் துரத்துவதை,

"மருதம் சான்ற மலர்தலை விளை வயல்
செய்யுள் நாரை ஒய்யும் மகளிர்" (பதிற்று.73;8-9)

என்ற அடிகள் குறிப்பிடுகின்றன. இதனால் வயல்களில் விளையும் நெல் பராமரிக்கும் முறையும், உழத்தியரின் தொழில் திறமும், அவர்களின் பயிர் காக்கும் செயலும் புலப்படுகின்றன.

### நெய்தல் நில மகளிர் தொழில்

நெய்தல் நில மக்கள் பரதவர், பரத்தியர், நுளையர், நுளைச்சியர், உமணர், உமட்டியர் என்று அழைக்கப்பட்டனர். இந்நிலத்தின் மக்கள் மீன் பிடித்தல், மீன் விற்றல், மீன் உணக்கல், உப்பு விற்றல் போன்ற தொழில்களில் ஈடுபட்டுள்ளனர். இதில் மகளிர் ஆண்களோடு இணைந்து செயல்படுபவர்களாக இருந்துள்ளனர். ஆண்கள் கடலுள் சென்று பிடித்து வரும் மீன்களை, மகளிர் கரையில் விற்பதும், விற்றது போக எஞ்சியதை உப்பு சேர்த்து உலர வைப்பதுமான செயல்களில் ஈடுபட்டுள்ளதை (அகம்.320;1-4), (நற்.63;1-2,20;1-3) அகப்பாடல்கள் தெரிவிக்கின்றன. உமணர்கள் வெளியூர்களில் உப்பு விற்கச் செல்லும் பொழுது மனைவி, குழந்தைகள் தாங்கள் வளர்க்கும் மந்தி என அனைவருடனும் சென்றுள்ளனர். இதனை,

**“நோன்பகட்டு உமணர் ஒழுகையொடு வந்த**
**....    ....    ....    ....**
**கிளர்பூண் புதல்வரொடு கிலுகிலி ஆடும்”**(சிறு.55-61)

என்ற சிறுபாணாற்றுப்படை அடிகளில் நல்லூர் நத்தத்தனார் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு உப்பு விற்கச் செல்லும் பொழுது உமணர் மகள், சகடம் பூண்ட எருதின் முதுகில் அடித்து வண்டி ஓட்டியதை,

**“காடி வைத்த கலனுடை மூக்கின்,**
**மகவுடை மகடூஉப் பகடுபுறம் துரப்ப”**(பெரும்.57-58)

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகள் புலப்படுத்துகின்றன. இதனால் உமட்டியப் பெண் உப்பு விற்கச் செல்வதோடு, வண்டி ஓட்டும் திறமுடையவளாகவும் இருந்துள்ளாள் என்பது பெறப்படுகிறது.

**பாலை நில மகளிர் தொழில்**

பாலை நில மக்கள் எயிற்றியர் எனப்படுவர். இந்நிலம் வளம் குறைந்தது. ஆதலால் மக்கள் வாழ்க்கைக்கான பொருள் தேடி வெளியூர்களுக்குச் சென்று வந்துள்ளனர். இவர்கள் வழி பறித்தலில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டும், எறும்புகள் நிலத்திற்கடியில் சேமித்து வைத்திருக்கும் புல்லரிசிகளை அளைந்தெடுத்தும் உணவுண்டு வாழ்ந்து வந்துள்ளனர். இதில் புல்லரிசிகள் சேகரித்தல் மகளிருடையதாகிறது. மகவு ஈன்ற எயிற்றி தவிர, மற்ற எயிற்றியர் சென்று புல்லரிசிச் சேமித்து வரும் காட்சியை,

**“ஈன்பிணவு ஒழியப் போகி, நோன்காழ்**
**.....    ....    ....    ....**
**நுண்புல் அடக்கிய வெண்பல் எயிற்றியர்”**(பெரும்.90-94)

என்ற பெரும்பாணாற்றுப்படை அடிகளில் கடியலூர் உருத்திரங்கண்ணனார் காட்டியுள்ளார்.

இதன் வழியாக ஐந்நில மகளிர் அவரவர் நிலங்களுக்கேற்றாற் போல் தொழிலில் ஈடுபட்டுள்ளமைத் தெரிகிறது. குறத்தியர் கிளி கடிந்தும், ஆய்ச்சியர் பால், நெய் தயாரித்து விற்றும், உழத்தியர் களைப் பறித்து நெல்லரியும் தொழிலிலும், உமட்டியர் உப்பு விற்றும், எயிற்றியர் புல்லரிசி சேகரிக்கும் செயலிலும் சிறப்புற்று மேன்மையடைந்துள்ளனர்.

தொகுப்புரை

- கலை என்பது மனிதனின் உள்ளத்தைத் தன் வயப்படுத்தி ஆற்றலை வெளிப்படுத்துவதாகும். கலை என்னும் சொல் 'கல்' என்னும் ஏவற் பகுதியிலிருந்துத் தோன்றியதாகும்.
- கலை என்பதற்கு ஆண்மான் வகை, ஆண் குரங்கு, ஆடை, சேணம், பகுதி, ஒளி நுட்பமான கால அளவு, எழுத்து, நூல், மொழி, உடல், பெண்களின் இடையணி, கர்ப்பூரவகை என்று பலவகையாகப் பொருள்கள் அமைந்துள்ளன.
- விளையாட்டு என்பது சிறுவர் முதல் பெரியவர்கள் வரை மேற்கொள்ளும் ஒரு கலையாகும். இக்கலை பொழுது போக்காகவும், மனமகிழ்ச்சியை ஊட்டக்கூடியதாகவும் உடல் நலம் பேணும் செயலாகவும் இருக்கிறது.
- மகளிர் கழங்காடுதல், பாவை, பந்து, ஓரை, மணல் விளையாட்டுக்கள் எண்ணி விளையாடுதல், வள்ளைப்பாட்டு, மலர் கொய்தல், நீர் விளையாட்டு போன்ற செயல்களில் மனம் மகிழ்ந்து ஈடுபட்டிருக்கின்றனர்.
- கூத்துக் கலைகளில் குரவை மற்றும் துணங்கைக் கூத்துக்களையும் இதனோடு தொடர்புடைய நாடகக்கலையிலும் மகளிர் ஈடுபட்டு இருக்கிறார்கள் என்பது பெறப்படுகிறது.

- இசைப்பவரையும் கேட்பவர்களையும் உணர்வினால் இணைப்பது இசையாகும்.
- உழிஞை, தழிஞை, விறற்களம் ஆகிய பாடல் வகைகளை மகளிர் பாடியிருக்கிறார்கள்.
- குறிஞ்சி, மருதம், பாலை, காஞ்சி, செவ்வழி ஆகிய பண் வகைகளில் இசைத்துப் பாடுவதில் வல்லவர்களாக மகளிர் திகழ்ந்திருக்கிறார்கள்.
- சங்க கால மகளிர் தழையாடை, பருத்தியாடை, பட்டாடை போன்ற ஆடை வகைகளை உடுத்தியிருக்கிறார்கள்.
- தலையணிகள், காதணிகள், கையணிகள், இடையணிகள், காலணிகள், கழுத்தணிகள் போன்றவற்றைத் தங்களது வசதிக்கேற்பவும், சூழலுக்கேற்பவும் சங்க கால மகளிர் அணிந்திருக்கிறார்கள்.
- சங்ககால மகளிர் ஒப்பனைக் கலைகளில் கூந்தல், முகம், உடல், நகம் ஆகியவற்றை ஒப்பனைச் செய்து ஆரோக்கியம் பேணிச் சிறந்திருந்துள்ளனர்.
- குறிஞ்சி நில மகளிர் தேனெடுத்தல், கழங்கு அகழ்தல், கிளி கடிதலிலும், முல்லை நில மகளிர் ஆடுமாடுகளைப் பராமரிக்கும் தொழிலிலும், மருத நில மகளிர் வயல் வேலைகளையும், நெய்தல் நில மகளிர் மீன் விற்றல், உப்பு சேகரித்தல் மற்றும் விற்றல் ஆகிய தொழில்களையும், பாலை நில மகளிர் புல்லரிசி சேகரித்தல் என, நில அடிப்படையில வாழ்வியல் சூழல்களுக்கேற்பத் தொழில்களை மேற்கொண்டுள்ளனர்.

இதனடிப்படையில் சங்கப் புற இலக்கியங்கள் குறிப்பிடும் மகளிர் விளையாட்டு, கூத்து, நாடகம், இசை, ஆடை, அணிகலன்கள், ஒப்பனைகள், தொழில்கள் ஆகியவற்றில் சிறந்தும், உடல் ஆரோக்கியத்தையும் மன

ஆரோக்கியத்தையும் பேணி எதிர்கால சமுதாயத்திற்குச் சிறந்த வழிகாட்டியாகச் செயல்பட்டு இருந்திருக்கிறார்கள் என்பதை அறிய இயல்கிறது.

## முடிவுரை

தொன்மைக் காலம் தொட்டு தமிழ்ச் சமூகத்தில் பண்பாட்டையும், பெருமையையும் காப்பதில், மகளிரின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கதாக அமைந்துள்ளது. மகளிரின் வாழ்வியலை உற்று நோக்கும்போது அவர்களது பிறப்பின் விழுமிய நோக்கம் நன்கு புலனாகும். சமூக ஆக்கம், தாய்மைப் பண்பு, தொண்டின் கூறுபாடு, பயன் கருதாத பணி போன்றவை மகளிரின் வாழ்வியலில் முக்கிய அங்கமாக அமைந்துள்ளன. இணைய பல பண்புகளைச் சங்கப் புற இலக்கியங்கள் வெளிப்படுத்துகின்றன.

சங்கப் புற இலக்கியங்கள் குறிப்பிடும் இல்லற வாழ்வில் மகளிர் கணவரோடு இணைந்த அன்பு வாழ்வு மேற்கொண்டவர்களாகவும், கணவன் சொல்லுக்கு மதிப்பு கொடுத்து; கட்டுப்பட்டவர்களாகவும் வாழ்ந்திருக்கின்றனர். இல்லற வாழ்வில் சிறந்த அறமான, ஆணும் பெண்ணும் இணைந்தளிக்கும் விருந்தோம்பலில் மகளிருடைய பங்கு சிறப்பாக அமைந்துள்ளது.

தொல்காப்பியர் குறிப்பிடும் கற்பு நெறிக்கேற்ப சங்க கால மகளிரின் கற்பு நிலைப்பாடு சிறந்த இல்லற ஒழுக்கமாகப் போற்றப்பட்டிருக்கிறது. தலைவனின் அன்பை அதிகரிக்கச் செய்வதற்காகவும், நல்வழிப்படுத்துவதற்காகவும் உரிமையோடு ஊடல் கொண்டிருந்திருக்கின்றனர். கற்புநெறி மகளிருக்கு முக்கியத்துவம் வாய்ந்தாகக் கருதப்பட்ட சூழலிலும் சிலர் பரத்தை வாழ்வும் மேற்கொண்டிருந்திருக்கின்றனர். இந்நிலை அக்காலச் சமூகத்தில் நிலவியபோதும், பெண்கள் ஆடவரைச் சார்ந்து செயல்படுகின்ற வாழ்வையே மேற்கொண்டிருந்திருக்கின்றனர்.

அரச மகளிரின் குணம், செயல்பாடுகள் பற்றி குறிப்பிடப்பட்டிருந்த நிலையிலும், அரசு புரிந்தமைக்கான ஆதாரங்கள் பதிவாகவில்லை. புற இலக்கியங்கள் குறிப்பிடும் மறக்குடி மகளிர் தாய்மைப் பண்பு மிக்கவர்களாகவும், வீரவுணர்வு நிறைந்தவர்களாகவும் திகழ்ந்திருக்கிறார்கள்.

இச்சை, இன்பம் துய்த்தல், பொருள்பற்று - மிக்க பரத்தை மகளிரும் சங்க காலத்தில் இருந்திருக்கின்றனர்.

புற இலக்கியங்கள் குறிப்பிடும் மகளிர் அவர்களுக்கான பழக்க வழக்கங்களாகத் தனிமனிதன் சார்ந்த பழக்கங்களையும், சமூகம் சார்ந்த வழக்கங்களையும் மேற்கொண்டவர்களாக இருந்திருக்கின்றனர். இம்மகளிர் 'கள்' சமைத்து விற்கும் வழக்கத்தை உடையவர்களாகவும் திகழ்ந்திருக்கின்றனர்.

கணவனை இழந்த மகளிர் தலை நிலையான உடன் உயிர் மாய்தல், இடை நிலையான தீப்பாய்தல், கடை நிலையான கைம்மை நோன்பிருத்தல் ஆகிய மூன்று நிலைகளைக் கடைப்பிடித்து வாழ்ந்திருந்திருக்கின்றனர். இவர்கள் மங்கல நிகழ்வுகளில் கலந்து கொண்டதற்கான சான்றுகள் இல்லை. அதே ஏல்வையில் வெறுத்து ஒதுக்கப்பட்டதற்கான சான்றுகளும் பதிவாகவில்லை. இவர்களில் பெரும்பாலானோார் வாழ்வாதாரத்திற்காக, நூல் நூற்று வாழ்ந்திருந்திருக்கின்றனர்.

மகளிர் வீட்டு விலக்கான காலங்களில் கலம் தொடாமல் இருப்பதையும், புனித தலங்களுக்குச் செல்லாமல் இருக்கும் வழக்கத்தையும், கடைப்பிடித்திருந்திருக்கின்றனர். இறந்தவர் உடலை அடக்கம் செய்ய முதுமக்கள் தாழி செய்யும் வழக்கத்தை மேற்கொண்டிருந்திருக்கின்றனர். இதனடிப்படையில் சங்க கால மகளிரின் பழக்க வழக்கங்கள் தனி மனித அடிப்படையிலும், மரபு சார்ந்த நிலையில் சமூக அடிப்படையிலும் இருந்திருக்கின்றது.

மனித வாழ்வின் ஒவ்வொரு படி நிலையிலும் மேற்கொள்ளப்பட்டு வரும் சடங்குகளும், வழிபாட்டு மரபுகளும் சமூகத்தை ஒன்றிணைக்கும் சக்தியாக செயல்பட்டிருக்கின்றன. சங்ககாலம் முதல் மகளிர் பிறப்பு முதல் இறப்பு

வரையிலான பல்வேறு சடங்குகளையும், வழிபாட்டு முறைகளையும் மேற்கொண்டிருந்திருக்கின்றனர்.

சங்ககால மகளிர் சிவன், திருமால், முருகன், கொற்றவை போன்ற தெய்வங்களை வழிபட்டிருக்கின்றனர். ஆண் தெய்வங்களையே அதிக எண்ணிக்கையில் வழிபட்டிருக்கின்றனர். அக்காலத்தில் விரிச்சிகேட்டல், நிமித்தம் பார்த்தல், கண்ணறு கழித்தல், மறுபிறப்பு, பேய் - பற்றிய நம்பிக்கைக் கொண்டவர்களாகவும்; அவற்றில் நன்மை, தீமைகளைப் பகுத்தறியும் பாங்கு கொண்டவர்களாகவும் வாழ்ந்திருக்கின்றனர்.

சங்கப் புறப்பாடல்களில் திருமணச் சடங்குகள் குறித்த பதிவுகள் இடம்பெறவில்லை. சங்ககால மகளிரால் கடைப்பிடிக்கப்பட்ட சடங்குகளிலும் வழிபாட்டு முறைகளிலும் நம்பிக்கைகளிலும் சில தற்காலத்திலும் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன.

சங்கப் புறப்பாடல்களைப் இருபது பெண்பாற் புலவர்கள் பாடியுள்ளனர். இவர்களது பாடல்களில் காதல், வீரம், விருந்தோம்பல், தாய்மை, அரசநிலை, வெற்றி, பரிசில்நிலை, பசலை, கைம்மை, சமூகக் கடமை, தவவாழ்வு போன்ற பொருண்மைகள் இடம் பெற்றுள்ளன. இதனால் சங்க காலத்தில் பெண்கள் கல்வியில் சிறந்த புலமை மிக்கவர்களாகவும், பகை தீர்த்து நட்பு கொண்டவர்களாகவும் திகழ்ந்திருக்கிறார்கள் என்பது பெறப்படுகிறது.
பெண்பாற் புலவர்கள் இயற்றிய சங்கப் புறப்பாடல்களில் பெண்கள் சார்ந்த பதிவுகளுக்கான சான்றுகளைவிட, ஆண்கள் சார்ந்த பதிவுகளுக்கான சான்றுகள் அதிகம் இடம் பெற்றுள்ளன. இத்தன்மை, சங்ககாலச் சமுதாயத்தில் பெண்கள் ஆண்களைச் சார்ந்த வாழ்வை மேற்கொண்டிருந்திருக்கின்றனர் என்பதை உறுதிப்படுத்துவதாக அமைகிறது.

மனித உள்ளத்தை வயப்படுத்தி, ஆற்றலை வெளிப்படுத்தும் கருவியாகத் திகழ்வது கலையாகும். சங்கப் புற இலக்கியங்கள் குறிப்பிடும்

மகளிர் விளையாட்டு, கூத்து, இசை, கலைநயமிக்க ஆடை, அணிகலன்கள், ஒப்பனை, பொருளாதாரத் தேவைக்கான தொழில் மேற்கொண்டவர்களாக வாழ்ந்திருக்கிறார்கள். மகளிர் பொழுது போக்கிற்காகவும், மன மகிழ்ச்சிக்காகவும் கழங்கு, பந்து, பாவை, மணல், ஓரை, நீராடல், எண்ணி விளையாடுதல், மலர் கொய்தல் போன்ற விளையாட்டுக்களை விளையாடியுள்ளனர்.

குரவை, துணங்கை - போன்ற கூத்துக் கலைகளையும்; இவற்றோடு தொடர்புடைய நாடகக் கலையிலும் ஈடுபட்டிருக்கின்றனர். இசையில் உழிஞை, தழிஞை, விறற்களம் ஆகிய பாடல் வகைகளையும், குறிஞ்சி, பாலை, மருதம், காஞ்சி, செவ்வழி போன்ற பண் வகைகளையும் இசைத்துப் பாடுவதில் வல்லவர்களாகவும் சங்ககால மகளிர் சிறப்புற்று விளங்கியிருக்கின்றனர்.

தழையாடை, பட்டாடை, பருத்தியாடை போன்ற ஆடைகளை உடுத்தியும்; தலை முதல் பாதம் வரை பல்வேறு அணிகலன்களைத் தங்களது பொருளாதாரத்திற்கு ஏற்பவும், சூழலுக்கேற்பவும் அணிந்திருக்கின்றனர். இவை தொடக்க காலத்தில் இயற்கை அணிகளாகவும், காலப்போக்கில் செயற்கை அணிகலன்களுக்கு அடிகோலியவையாகவும் இருந்திருக்கின்றன.

சங்ககால மகளிர் இயற்கைப் பொருள்களால் தயாரிக்கப்பட்ட ஒப்பனைப் பொருள்களையும், மணப் பொருள்களையும் கொண்டு தங்களை ஒப்பனை செய்துள்ளனர்.

நில அடிப்படையில் தாம் வாழ்ந்த சூழலுக்கேற்ப தொழில்களை மேற்கொண்டிருந்திருக்கின்றனர். இவர்கள் நீண்ட இடங்களுக்குச் செல்லாமல், தங்களது எல்லைகளை ஒட்டியே வாழ்வாதாரங்களைப் பூர்த்தி செய்யும் நோக்கில் தொழில்களை மேற்கொண்டிருந்திருக்கின்றனர். இவர்களில் சிலர்

கணவருக்கு உறுதுணையான தொழிலையும், பெரும்பாலானோர் தனித்தும் தொழில் புரிந்துள்ளனர்.

சங்கப் புற இலக்கியங்கள் குறிப்பிடும் மகளிர் சிறந்த இல்லறம் பேணி நல்லறம் காத்தவர்களாகவும்; சமூகம் சார்ந்த மரபு மாறாத பழக்க வழக்கங்கள், சடங்குகள், நம்பிக்கைகளைக் கடைப்பிடித்தவர்களாகவும், கல்வி கற்று சமூகத்தை மேம்படுத்தக் கூடியவர்களாகவும், கலை உணர்வு மிக்கவர்களாகவும் திகழ்ந்திருக்கிறார்கள்.

இவற்றை நோக்குங்கால் தொல்காப்பியம் குறிப்பிட்டிருந்த மகளிருக்கான கடமைகளையும், பண்புகளையும் சங்ககால மகளிர் பின்பற்றி வாழ்ந்திருந்திருக்கின்றனர் என்பது புலனாகிறது. இவர்களில் பெரும்பாலானோர் ஆடவர்களைச் சார்ந்தே வாழ்ந்திருக்கின்றனர் என்பது சங்கப் புற இலக்கியங்கள் வழி அறிய இயல்கிறது.

## தொடர் ஆய்வுக் களங்கள்

இந்த ஆய்வின் தொடர்ச்சியாக எதிர் காலத்தில் ஆய்வு மேற்கொள்ள வாய்ப்பிருக்கும் ஆய்வு களங்களாக சங்கப் புற இலக்கிய மகளிரின் வாழ்வியலோடு அக இலக்கியம், இடைக்கால இலக்கியம், தற்கால இலக்கியம் ஆகியவற்றோடு ஒப்பிட்டு ஆராய வாய்ப்பிருக்கிறது. இன்னும் விரிவாகச் சங்க இலக்கியங்களில் மகளிர் இல்லறம், கலைகள், உளவியல் நோக்கில் ஆய்வுகளை மேற்கொள்ள வாய்ப்பிருக்கிறது.

# துணை நூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


1. சாமிநாதையர்,உ.வெ., (பதி), **பதிற்றுப்பத்து** மூலமும் பழைய உரையும், சென்னை, ஏழாம் பதிப்பு-1980.

2. சாமிநாதையர்,உ.வெ.,(பதி), **பத்துப்பாட்டு** மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, தஞ்சாவூர் 1986.

3. துரைசாமிப்பிள்ளை,சு.,ஔவை, **புறநானூறு** (201-400 செய்யுட்கள்), சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம், சென்னை, ஐந்தாம் பதிப்பு, 1972.

4. பரிமணம்,அ.மா.,முனைவர்(பதி) பாலசுப்பிரமணியன்,கு.,முனைவர்,(பதி) **சங்க இலக்கிய நூல்கள்,** நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட், அம்பத்தூர், சென்னை-600098, ஐந்தாம் பதிப்பு அக்டோபா 2014.


## துணைமை ஆதாரங்கள்


1. அழகம்மை,கே.பி.,முனைவர், **சமூக நோக்கில் சங்க மகளிர்,** அரவிந்த் வெளியீடு, கழனிவாசல், காரைக்குடி, முதற்பதிப்பு - ஆகஸ்டு,2001.

2. ஆதிநாராயணன்,எஸ்.பி., **மனித உள்ளம்,** இராசமாணிக்கம்,மு.,மூர்த்தி,ஆர்.எஸ்., (தமிழாக்கம்), பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-600014, பதிப்பு - 1973.

3. இராகவன்,அ., **தமிழ்நாட்டு அணிகலன்கள்,** கலை நூற்பதிப்பகம், பாளையங்கோட்டை, திருநெல்வேலி, முதல் பதிப்பு - 1970.

4. இராகவையங்கார்,ரா., நல்லிசைப் புலமை மெல்லியலார், தமிழ்க்கடல் ஆபீஸ், சென்னை, முதற்பதிப்பு - 1933.

5. இராசமாணிக்கனார்,மா., தமிழர் திருமணத்தில் தாலி, செல்வி பதிப்பகம், காரைக்குடி, முதற்பதிப்பு - 1955.

6. இராசமாணிக்கனார்,மா., தமிழ்ப் பண்பாட்டு வரலாறு, காவ்யா வெளியீடு, கோடம்பாக்கம், சென்னை - 600024, இரண்டாம் பதிப்பு - 2012.

7. இராசமாணிக்கனார்,மா., பத்துப்பாட்டு ஆராய்ச்சி, சாகித்திய அகாதெமி, முதற்பதிப்பு - 2012.

8. இராசாராம், துரை.,டாக்டர்(உரை), கம்பராமாயணம், திருமகள் நிலையம், தி.நகர், சென்னை - 600017, முதற்பதிப்பு - ஜீன் 2001.

9. இராமசுப்பிரமணியம்,வ.த.,(உரை), சிலப்பதிகாரம் மூலமும் உரையும், பூம்புகார் பதிப்பகம், சென்னை-600108, முதற்பதிப்பு- மார்ச் 2009.

10. இராமநாதன்,ஆறு., நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் தமிழர் வாழ்வியல், மணிவாசகர் நூலகம், 12-பி மேலச்சன்னதி, சிதம்பரம்- 608001.

11. இளம்பூரணர், தொல்காப்பியம் எழுத்ததிகாரம்(மூ.உ), பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை-600014, முதற்பதிப்பு-டிசம்பர் 2016.

12. கல்பனா சேக்கிழார், முனைவர் — **புறநானூற்றில் தமிழர் வாழ்வியல்,**
தமிழ்மண் பதிப்பகம்,
சென்னை-17,
முதற்பதிப்பு-2009.

13. காந்தி,க.,முனைவர், — **தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை.

14. கைலாசபதி.க., — **பண்டைத்தமிழர் வாழ்வும் வழிபாடும்,**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்,
சென்னை,
இரண்டாம் பதிப்பு - 1991.

15. கோமதி சங்கரய்யர், — **பண் ஆராய்ச்சியும் அதன் முடிவுகளின் தொகுப்பும்,**
தமிழ் இசைச்சங்கம்,
சென்னை, பதிப்பு - 1974.

16. கோவிந்தன்,கா.,புலவர், — **சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை-V பெண்பாற் புலவர்கள்,**
சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
திருநெல்வேலி, சென்னை - 1,
மறுபதிப்பு - நவம்பர் 1956.

17. சக்திப்பெருமாள், — **பெண்,**
வஞ்சிக்கோ பதிப்பகம்,
மதுரை, முதல்பதிப்பு - 1993.

18. சசிவல்லி,வி.சி., — **பண்டைத் தமிழர் தொழில்கள்,**
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை, முதல்பதிப்பு - 1989.

19. சஞ்சீவி,ந., — **சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள்,**
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை, முதற்பதிப்பு - 1973.

20. சண்முகம்பிள்ளை,மு.,பேராசிரியர்(பதி), — **தொல்காப்பியம் பொருளதிகாரம்,**
முல்லை நிலையம்,
சென்னை-600017,
மறுபதிப்பு 2010.

21. சண்முகம்,அவ்வை தி.க., நாடகக்கலை, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், பதிப்பு - 1957.

22. சாமி,பி.எல்., தமிழ் இலக்கியத்தில் தாய்த்தெய்வ வழிபாடு, நியூசெஞ்சுரி புக்ஹவுஸ், சென்னை, நான்காம் பதிப்பு - 1986.

23. சிவகாமி,கா.,முனைவர், வள்ளலாரின் மானுட மதிப்புகள், நாம் தமிழர் பதிப்பகம், சென்னை-4, பதிப்பு-நவம்பர் 2009.

24. சிவகாமசுந்தரி,சு.,முனைவர், சங்க இலக்கிய விளையாட்டுக் களஞ்சியம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் வெளியீடு, சென்னை - 600098, முதற்பதிப்பு - 1995.

25. சிவப்பிரகாசம்,கு.,டாக்டர், புறநானூற்றில் வாழ்வியல் விழுமியங்கள், V.ரவிசந்திரன்-பதிப்பாளர், சென்னை-78, முதற்பதிப்பு - 2013.

26. சிலம்பொலி செல்லப்பன்,முனைவர் (உரை), மணிமேகலை, பாரதி பதிப்பகம், சென்னை-600017, இரண்டாம் பதிப்பு டிசம்பர் 2012.

27. சுப்பிரமணியப்பிள்ளை,கா., தமிழர் சமயம், வை.சண்முக முதலியார் வெளியீடு, வாணியம்பாடி, முதற்பதிப்பு - 1940.

28. சுப்பிரமணியன்,ச.வே., இலக்கியக் கனவுகள், தமிழ்ப் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு - 1979.

29. சுப்ரமண்யன்,ந.,டாக்டர், **சங்க கால வாழ்வியல்,** நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட், அம்பத்தூர், சென்னை - 600098, மூன்றாம் பதிப்பு பிப்ரவரி-2017.

30. சுந்தரமூர்த்தி,இ., **இலக்கியச் சுடர்,** அன்பு நூலகம், சென்னை, பதிப்பு - 1977.

31. செல்வத்தாண்டவன்,சி., **மூவகைக் கற்பு ஆய்வுக்கோவை,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு - 2000.

32. சேதுப்பிள்ளை,ரா.பி., **தமிழர் வீரம்,** ஏசியன் அச்சகம், சென்னை - 14, பன்னிரண்டாம் பதிப்பு - 2007.

33. சோமசுந்தரனார்,பொ.வே.,(உரை) , **புறப்பொருள் வெண்பாமாலை,** சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை-18, முதற்பதிப்பு - 2002.

34. ஞானசம்பந்தன்,அ.ச., **மகளிர் வளர்த்த தமிழ்,** பாரி நிலையம், சென்னை - 600108, முதற்பதிப்பு - 2008.

35. தட்சிணாமூர்த்தி,அ., **சங்க இலக்கியங்கள்உணர்த்தும் மனித உறவுகள்,** நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட், 41-பி,சிட்கோ சென்னை - 600098, முதற்பதிப்பு ஜீலை 2016.

36. தட்சிணாமூர்த்தி,அ.,டாக்டர், **தமிழர் நாகரிகமும் பண்பாடும்,** யாழ் வெளியீடு, சென்னை - 600040, மறுபதிப்பு 2005.

37. தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, **தமிழ்நாட்டு வரலாறு,** (சங்க காலம் - **வாழ்வியல்**),

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்,
சென்னை, முதற்பதிப்பு 1983.

38. தமிழ்நாட்டு வரலாற்றுக்குழு, தமிழ்நாட்டு வரலாறு, (சங்க காலம் - அரசியல்), தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு - 1983.

39. தாயம்மாள் அறவாணன்,டாக்டர், மகடூஉ முன்னிலை பெண் புலவர் களஞ்சியம், தமிழ்க்கோட்டம், சென்னை - 600029, மூன்றாம் பதிப்பு - ஆகஸ்டு 2011.

40. திருநாவுக்கரசு,க.த., வள்ளுவன் கண்ட மனிதம், இன்டர் நேஷனல் இன்ஸ்டிடியூட், தமிழ் ஸ்டடீஸ், சென்னை, முதற்பதிப்பு 1973.

41. திலகவதி.க.,முனைவர், சங்ககால மகளிர் வாழ்வியல், இறையருள் பதிப்பகம், திருச்சிராப்பள்ளி - 620019, முதற்பதிப்பு அக்டோபர் - 2001.

42. தேவநேயன்,ஞா., பண்டைத் தமிழ் நாகரிகமும்பண்பாடும், நேசமணி பதிப்பகம், வடாற்காடு மாவட்டம், முதற்பதிப்பு - 1966.

43. தேவநேயன்,ஞா., தமிழர் மதம், நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி விரிவு, முதற்பதிப்பு - 1972.

44. பகவதி,கே., தமிழர் ஆடைகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதற்பதிப்பு - 1980.

45. பக்தவச்சலபாரதி,சீ., பண்பாட்டு மானிடவியல், மணிவாசகர் பதிப்பகம், சென்னை, முதற்பதிப்பு - 1990.

46. பரமசிவானந்தம்,அ.மு., **பெண்,**
தமிழ்க்கலைப் பதிப்பகம்,
சென்னை - 30,இரண்டாம்
பதிப்பு - 1960.

47. பரிமேலழகர் உரை, **திருக்குறள்,**
ராம் பிரசுரம் வெளியீடு,
சென்னை - 6000001,
இரண்டாம்பதிப்பு
செப்டம்பர் 2008.

48. பவணந்தி முனிவர், நன்னூல்,
கழக வெளியீடு,
சென்னை,
பதிப்பு - 1962.

49. பழனிச்சாமி,செ.,டாக்டர், **புறநானூற்றில் தமிழர் பண்பாடு,**
வாணி பதிப்பகம்,
கோவை - 641011,
முதற்பதிப்பு ஏப்ரல் - 1989.

50. பழனிவேலு,நா.,முனைவர் **சங்கப் புற இலக்கியங்களில் சமூகச் சித்திரிப்புகள்,**
மனோன்மணி பதிப்பகம்,
கிருட்டினகிரி-1,
முதற்பதிப்பு - 2004.

51. பாண்டுரங்கன்,அ.,முனைவர், **சங்க இலக்கியம் (சமயம், வழிபாடு, அரசு, சமூகம்),**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட்,
சென்னை - 600098,
முதற்பதிப்பு - ஜீலை 2016.

52. பாரதியார் **கவிதைகள்,**
தென்றல் நிலையம்,
சிதம்பரம் - 608001,
ஐந்தாம் பதிப்பு - சூலை 2006.

53. பாரதிதாசன் **குடும்ப விளக்கு,**
பாவை பப்ளிகேஷன்ஸ்,
இராயப்பேட்டை,
இரண்டாம் பதிப்பு - 2013.

54. பாரதிதாசன் **கவிதைகள்,**
அருணா பப்ளிகேஷன்ஸ்,

சென்னை - 600049,
முதற்பதிப்பு - டிசம்பர் 2008.

55. பாலசுப்பிரமணியன்,கு.வெ., **சங்க இலக்கியத்தில் புறப்பொருள்,** உமா பதிப்பகம், கும்பகோணம், முதற்பதிப்பு - 1986.

56. பாலசுப்பிரமணியன்,கு.வெ., **சங்க இலக்கியக் கொள்கை,** மீனாட்சி புத்தக நிலையம், மயூரா வளாகம், மதுரை - 625001, முதற்பதிப்பு செப்டம்பர் - 2008.

57. பாலசுப்பிரமணியம்,கு.வெ., **சங்க இலக்கியத்தில் கலையும், கலைக்கோட்பாடும்,** நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட், சென்னை - 600098, முதற்பதிப்பு - ஜீலை 2016.

58. பாலசுப்பிரமணியன்,சி.,டாக்டர், **சங்க கால மகளிர்,** பாரி நிலையம், சென்னை - 600108, முதற்பதிப்பு - 1983.

59. பாலசுப்பிரமணியன்,சி.,டாக்டர், **சங்க இலக்கியம்-சில பார்வைகள்,** நறுமலர்ப் பதிப்பகம், சென்னை, முதல்பதிப்பு - 1989.

60. பாலசுப்பிரமணியன்,இரா., **தமிழர் நாட்டு விளையாட்டுக்கள்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, முதல்பதிப்பு - 1980.

61. பாஸ்கல் கிஸ்பர்ட்,எஸ்.ஜே., **சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள்,** நாராயணன்,ஜெ.,(தமிழாக்கம்), தமிழ் வெளியீட்டுக் கழகம், தமிழ்நாடு, பதிப்பு - 1964.

62. பிள்ளை,கே.கே.,டாக்டர், **தமிழக வரலாறு மக்களும் பண்பாடும்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,

சென்னை - 600113,
பனிரெண்டாம் பதிப்பு - 2016.

63. பெரியண்ணன்,கோ.,முனைவர், நாட்டுப்புற இலக்கியம்,
மயிலவேலன் பதிப்பகம்,
சென்னை - 600061,
முதற்பதிப்பு - 2013.

64. மணி,பெ.சு., சங்ககால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும்,
நியூசெஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடைட்,
சென்னை,
பதிப்பு - 1986.

65. மாணிக்கம்,வ.சுப., தமிழ்க்காதல்,
பாரி நிலையம், பிராட்வே,
சென்னை,
முதல்பதிப்பு - 1962.

66. மாணிக்கவாசகன்,ஞா.,(உரை) திருமூலர் திருமந்திரம்,
உமா பதிப்பகம்,
சென்னை - 600001,
ஏழாம் பதிப்பு - மே 2012.

67. முருகையன்,மு.அரங்க.,(பதி) சங்க இலக்கிய ஆய்வுகள்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 600113,
பதிப்பு - 2000.

68. ருக்மணி,இரா.,டாக்டர், சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள்,
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்(பி)லிட்,
சென்னை - 600098,
முதற்பதிப்பு டிசம்பர் - 2011.

69. ரேணுகாதேவி,வீ.,பேராசிரியர், சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழிநடை,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை - 600113,
முதற்பதிப்பு - 2012.

70. வரதராசன்,வெ., தமிழரின் ஒப்பனைக் கலைத்திறன், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், முதல்பதிப்பு - 1986.

71. லூர்து,தே., நாட்டார் வழக்காற்றில், ஓர் அறிமுகம், பெருமாள் புரம், முதற்பதிப்பு - 1976.

72. வீரப்பன்,ஏ.,முனைவர், சங்க காலச் சமுதாய அமைப்பு, அய்யா நிலையம், தஞ்சாவூர் - 613006, முதற்பதிப்பு ஜீலை - 2009.

73. வீரப்பன்,ஏ.,முனைவர், பழந்தமிழர் வாழ்வியல், குகன் பதிப்பகம், வடுவூர் - 614019, திருவாரூர் மாவட்டம், முதற்பதிப்பு - ஜீலை 2009.

74. வசந்தா,த.,முனைவர், சங்க இலக்கியத்தில் மனிதநேயம், நியூ செஞ்சுரி புக்ஹவுஸ்(பி)லிட், சென்னை - 600098, முதற்பதிப்பு - பிப்ரவரி 2013.

75. விபுலானந்த அடிகள், யாழ் நூல், கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சாவூர், இரண்டாம் பதிப்பு - 1974.

76. வெள்ளைவாரணன்,க., சங்ககாலத் தமிழ் மக்கள், நேஷனல் பப்ளிஷிங் கம்பெனி, சென்னை, முதற்பதிப்பு - 1948.

77. வேங்கடசாமி,மயிலை சீனி, பழங்காலத் தமிழர் வாணிகம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, முதற்பதிப்பு - 1974.

78. வேங்கடசாமி,மயிலை சீனி, தமிழர் வளர்த்த அழகுக்கலைகள், பாரி நிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு 1969.

79. வையாபுரிப்பிள்ளை,எஸ்., **சங்க இலக்கியம் - இரு பகுதிகள்,** பாரி நிலையம், சென்னை, இரண்டாம் பதிப்பு - 1967.

80. ஜெயா,வ.,முனைவர், **சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-600113, பதிப்பு - 2003.

81. ஜோதிராணி,க.அ., **சங்க இலக்கியத்தில் சமூகஆய்வுகள்,** உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 600113, முதற்பதிப்பு - 2011.

82. ஸ்ரீசந்திரன்,ஜெ.,பேராசிரியர் (உரை), **சீவகசிந்தாமணி,** தமிழ் நிலையம், சென்னை - 17, இரண்டாம் பதிப்பு - 2004.

83. ஜெகதீசன்,இரா.,முனைவர், **மலைபடுகடாம் ஆய்வுக்கோவை,** குறிஞ்சிப் பதிப்பகம், ஆம்பூர் - 635802, முதல்பதிப்பு - 2012.

84. **நம்பியகப்பொருள்,** சைவ சித்தாந்த நூற்பதிப்பு கழகம், சென்னை, பதிப்பு-1979

ஆய்வுக் கட்டுரைகள்

1. இராஜா,சு.,முனைவர்(பதி), **காலந்தோறும் தமிழ் இலக்கியங்கள்,** பரிதி பதிப்பகம், ஜோலார்பேட்டை – 635851, முதற்பதிப்பு – 2016.

2. கீதா,சௌ.,முனைவர், **சங்க இலக்கிய ஆய்வுச் சிந்தனைகள்** (கருத்தரங்க ஆய்வுக் கட்டுரைத் தொகுப்பு), தமிழ்த்துறை, அரசு மகளிர் கலைக்கல்லூரி, கிருட்டினகிரி, முதற்பதிப்பு – ஏப்ரல் 2016.

3. செந்தமிழ்பாவை,சே.,பேராசிரியர், பன்னோக்குப் பார்வையில் தமிழர்பண்பாடு, ஆய்வுக்கோவை காரைக்குடி-3, முதற்பதிப்பு-2016.

4. செம்மூதாய் சதாசிவம்(பதி), தமிழர் வாழ்வியல் மரபும் மாற்றமும், செம்மூதாய் பதிப்பகம், சென்னை – 600059 முதற்பதிப்பு – டிசம்பர் 2015.

5. தெய்வம்,இரா.,முனைவர்(பதி), தமிழ் இலக்கியங்களில் பண்பாட்டு விழுமியங்கள், தமிழாய்வுத்துறை, ஸ்ரீ வித்யா மந்திர் கலை மற்றும் அறிவியல் கல்லூரி, ஊத்தங்கரை, முதற்பதிப்பு-2015.

6. தெய்வம்,இரா.,முனைவர்(பதி), தமிழ் இலக்கியங்களில் பெண்-சமூகத் தகுதி நிலை, பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை - 600014, முதற்பதிப்பு - டிசம்பர் 2015.

7. பிலவேந்திரன்,கோ.,முனைவர் (பதி), சங்க இலக்கியம் தொகுதி-1, பன்னாட்டுக் கருத்தரங்கக் கட்டுரைகள், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், அண்ணாமலை நகர், முதற்பதிப்பு - மார்ச் 2017.

8. மதிவாணன்,ஒப்பிலா.,முனைவர், தமிழியல் பரிமாணங்கள்(தொகுதி-2), கலைஞன் பதிப்பகம், சென்னை - 600017, முதல்பதிப்பு - 2013.

9. ஜெகதீசன்,இரா.,முனைவர், மலைபடுகடாம் ஆய்வுக்கோவை, குறிஞ்சிப் பதிப்பகம், ஆம்பூர் - 635802, முதல்பதிப்பு - 2012.

ஆங்கில நூல்கள்


1. **James Bissett, pratt,** The Psychology Of Religious Belief, The Macmillan Company Ltd, London, 1908.

2. **Kanakasabhai,v.,** The Tamils Eighteen Hundred Years Ago, Published by Kazhagam, Madras, Third Edition, 1966.

3. **Pillay,K.K.,** A Social History Of The Tamils, University Of Madras, 1975.

4. **Rampal,S.N.,** Indian Women and Sex, Printex, New Delhi, 1978.

5. A Concise Compendium Of Cankam Literature, Volume -I, Tamil university, Thanjavur, First Edition – April 1990.

6. International Encyclopaedia Of The Social Sciences, Vol. 1&2, Collier Macmillan Publishers, London, 1972.

7. The New Book Of Knowledge, Vol.20, Grelier Incorporated, Newyork,1973.

களஞ்சியம் **&** அகராதிகள்

1. இராமசுப்பிரமணியம்,வ.த.(தொகு), திருமகள் தமிழகராதி
திருமகள் நிலையம்,
சென்னை-17,
நான்காம் பதிப்பு,
செப்டம்பர் 2009.

2. கதிரைவேற்பிள்ளை,நா., தமிழ் மொழி அகராதி,
சாரதா பதிப்பகம்,
சென்னை-600014,
இரண்டாம் பதிப்பு,
அக்டோபர் - 2003.

3. கழகத் தமிழ் அகராதி,
சைவசித்தாந்த நூற்பதிப்புக்
கழகம், லிமிடெட்,
சென்னை - 600018,
முதற்பதிப்பு - 1964.

4. சங்க இலக்கிய
பொருட்களஞ்சியம்,
தொகுதி - 1,2
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
மறுபதிப்பு - 2001.

5. தமிழிசைக் கலைக்களஞ்சியம்,
முதல் தொகுதி(அ-ஔ),
பாரதிதாசன் பல்கலைக்கழகம்,
திருச்சிராப்பள்ளி - 620024,
முதற்பதிப்பு - 1992.

6. வாழ்வியல் களஞ்சியம்,
தொகுதி - 1, 3, 7, 10, 11,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
முதற்பதிப்பு - மே 2009.

7. Tamil Lexicon,
Vol – I,II,III,IV,VI,
Unversity Of Madras,
Madras, Editon-1982.

ஆய்விதழ்கள்

1. ஆய்த எழுத்து — பன்னாட்டு தமிழியல் ஆய்வு இதழ், பல்லவி பதிப்பகம், ஈரோடு - 638011, அக்டோபர் - 2017.

2. செம்மொழித் தமிழ் — பன்னாட்டுப் பன்முகத் தமிழ் காலாண்டு ஆய்விதழ், இராஜா பப்ளிகேஷன்ஸ், திருச்சிராப்பள்ளி - 620023, ஏப்ரல் - ஜீன் 2016.

## ஆய்வேடுகள்

1. ஐயப்பன்,அ., — சங்க இலக்கியத்தில் வாழ்வியல் சிந்தனைகள், முனைவர் பட்ட ஆய்வேடு, மாநிலக் கல்லூரி,

2. கமலி,தி., — பழந்தமிழ் இலக்கியத்தில் தொழிலியல் சிந்தனைகள் (சங்க இலக்கியம்), ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு,

3. சுப்புத்தாய்,கு., — சங்க இலக்கியத்தில் பெண் பதிவுகள், முனைவர் பட்ட ஆய்வேடு, செல்லம்மாள் மகளிர் கல்லூரி, பச்சையப்பன் அறக்கட்டளை நிறுவனம், பிப்ரவரி – 2011.

4. புனிதபொற்கொடி, நா., — சங்ககால சமுதாயத்தில் நம்பிக்கைகளும் சடங்குகளும், ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு,சென்னைப் பல்கலைக்கழகம், 1987.

5. மங்கையர்க்கரசி,கே., — சங்க இலக்கியத்தில் இல்லற வாழ்க்கை, ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடு, 1979.

6. மாரியப்பன்,சு.மா., சங்க அக இலக்கியங்களில் புற வாழ்வியல் கூறுகள், முனைவர் பட்ட ஆய்வேடு, அரசு ஆடவர் கலைக்கல்லூரி, கிருட்டினகிரி-1, பிப்ரவரி-2011.

7. விஜயலட்சுமி,ம., சங்க இலக்கியத்தில் மருதநிலமகளிர், எத்திராஜ் மகளிர் கல்லூரி, சென்னை - 600008.